பாத்தும்மாவுடைய ஆடும்
இளம் பருவத்துத் தோழியும்

அகிலத்திந்திய நூல் வரிசை

# பாத்தும்மாவுடைய ஆடும் இளம் பருவத்துத் தோழியும்

வைக்கம் முகம்மது பஷீர்

தமிழாக்கம் :

குமாரி சி. எஸ். விஜயம்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

முதற்பதிப்பு : 1973 (சக : 1895)
*இரண்டாம் அச்சு* : 1990 (சக : 1912)

*ரூ. 13.00*
*Original Title* : Pathummavude Adum Baliyakala Sakhium *(Malayalam)*
*Tamil Title* : Pathummaudaiya Aadum Ilam Paruvathu Thozhium
வெளியிட்டவர் : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,
ஏ-5. கிரீன்பார்க், புது தில்லி-110016.

# முன்னுரை

மலையாள நாவல் இலக்கியம் தோன்றி இன்னும் நூறாண்டுகள் கூட ஆகவில்லை. 1887-ல் அப்பு நெடுங்காடி 'குந்தலதா' என்ற முதல் நாவலை எழுதினார். மேலைநாடுகளில், குறிப்பாக ஐரோப்பாவில் ஷேக்ஸ்பியர் காலத்தில் நாவல்கள் தோன்றிவிட்டன என்பது அறிஞர்கள் கருத்து. ஆனால் மலையாள மொழியில் இவ்வகை இலக்கியம் வெகு நாளைக்குப் பிறகே உருவாகியது. இலக்கியம் என்றால் கவிதையைப் படித்து ரஸிப்பது தான் என்று கருதிய சமயத்தில் 'குந்தலதா' வெளிவந்தது. 'குந்தலதா' வாசகர்களுக்குப் புதியதொரு ரசனைக்கு வழி திறந்தது. எனினும், நாவல், இலக்கிய வடிவில் ரசிகர்களுக்குக் கிடைத்தது 'இந்துலேகா' மூலம்தான். ஓ. சந்துமேனவன் எழுதிய இந்த நாவல்தான் சிந்தனைக்கோப்பும், அமைப்பு அழகும் கொண்ட முதல் மலையாள நவீனம்.

நீதிபதியாக இருந்த சந்துமேனவன் ஆங்கில இலக்கியத்தில் நன்கு பரிச்சயம் கொண்டிருந்தார். அவர், தமது சமூக நிலையை 'இந்துலேகா'வில் சித்தரித்திருந்தார். தாய்வழி (மருமக்கள் தாயம்) முறை குறைந்து வருவதையும், ஆங்கிலக் கல்வி பயின்ற புதிய தலைமுறையினரின் சுதந்திர உணர்வையும், அந்த நாவலில் அவர் முக்கியமாகக் கையாண்டிருந்தார்.

'இந்துலேகா'விற்குப் பிறகு மலையாள மொழியில் வெளியான இரண்டாவது முக்கிய நவீனம் ஸி. வி. ராமன் பிள்ளை எழுதிய 'மார்த்தாண்டவர்மா' என்பதாகும். இது முற்றிலும் இந்துலேகாவினின்று வேறுபட்டது. கருத்துக்களிலும், அமைப்பிலும் சர் வால்டர் ஸ்காட் எழுதிய 'ஐவன்ஹோ' என்ற நாவலை விட, ஒரு படி மேலாகவே இருந்தது இந்நாவல். இது ஒரு வரலாற்று நாவல்; நாடு விடுதலை பெறும் வரை திருவிதாங்கூர் என்று வழங்கி வந்த தென் கேரள ராஜ்யத்தின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட நாவல் இது.

1911-ல் இதே எழுத்தாளரின் கைவண்ணமாக, 'தர்மராஜா' என்ற கதை வெளிவந்தது. இதை, அந்தப் பரம்பரை எழுத்தின் முடிவாகக் கொள்ளலாம். இந்த இரண்டு நாவல்களும் சந்துமேனவனுடைய அந்தஸ்தை, ராமன் பிள்ளைக்குக் கிடைக்கச் செய்தன. இதற்குப் பிறகு மலையாள நாவல் உலகில், இருபது

இருபத்தைந்து வருடங்களுக்குப் புரட்சிகரமான மாறுதல் ஏதும் நிகழவில்லை. இக்காலத்தில் ஒரே ஒரு நவீனம்தான் நினைவில் வைத்துக் கொள்ளும்படி வெளியாயிற்று. அது பவத்ராதன் நம்பூதிரிப்பாடு எழுதிய 'அப்பண்டே மகள்.' இந்தக் காலம் தற்கால மலையாள நாவல்களின் வளர்ச்சிக்குக் கரு என்று சொல்லலாம்.

சந்துமேனவன் காலம்வரை, மலையாள எழுத்தாளர்களுக்கு மேலை நாட்டு இலக்கியத்துடன் அநேகமாகத் தொடர்பு ஏதும் இருந்திருக்க வில்லை. ஆனால் இந்த நூற்றாண்டின் நாற்பதாவது வருஷத்தில் நிலைமை மாறிவிட்டது. பல நல்ல நூல்கள், ஆங்கிலத்திலிருந்தும் மற்ற மேற்கு மொழிகளிலிருந்தும் மலையாளத்தில் மொழிபெயர்க்கப் பட்டன. எழுத்தாளர்களின் ஆங்கில ஞானமும் பரிச்சயமும் வளர்ந்தன. இதன் வாயிலாக, நாவல் பற்றிய அவர்களது கருத்துக் களும் எண்ணங்களும் சீரடைந்தன. இதன் விளைவாக, நவீன இலக்கியம் தோன்றியது. ருஷ்யப் புரட்சியும், சோஷலிஸமும் கேரளத்தவரின் சிந்தனையைக் கவர்ந்தன. சோஷலிஸத்தின் உத் வேகமும், மேற்கத்திய நாவல்களின் இலக்கிய நயங்களும் ஒருங் கிணைந்து, மலையாள நாவல் இலக்கியப் பொற்காலத்துக்கு அடி கோலின.

தகழி, கேசவ்தேவ், பஷீர் ஆகியோர் இக்காலத்தின் தலைசிறந்த நாவலாசிரியர்கள். மலையாள நாவல் உலகத்தின் 'மும்மூர்த்திகள்' என்று இவர்கள் கருதப்படுகிறார்கள்.

'உரூப்', பொற்றேகாட் ஆகிய இருவருக்கும் இதே ஸ்தானம் உண்டு. அவர்களுடைய கலையும் கருத்துக்களும் மாறுபட்டவை என்பதைத் தவிர, வேறு வேற்றுமை கிடையாது. தகழியின் நாவல் களில் ஒரு யுகத்தின் துடிப்பையும் இரத்த ஓட்டத்தையும் காண் கிறோம். கேசவ்தேவின் படைப்பில் தார்மீகக் கோபத்தையும், நெருப்புப் புயலையும் காண்கிறோம். பஷீரின் கதைகளில் விவேக ஒளி பரவக் காண்கிறோம். உரூபின் படைப்புகளில், படைப்பு ஆற்றலின் கம்பீரத்தையும், பொற்றேகாட்டின் இலக்கியங்களில், இதய ஓட்டத் தின் சித்திரங்களையும் பார்க்கலாம்.

தகழி சிவசங்கரன் பிள்ளைதான் தற்கால மலையாள நாவல்களின் தந்தை. புதிய முற்போக்கு யுகத்தின் இதயத் துடிப்புக்கள் இந்த நாவலாசிரியரின் படைப்புகளில் எதிரொலிக்கின்றன. 'சோஷலிஸ யதார்த்தவாதத்தின் தீர்க்கதரிசி' என்று இவர் பெயர் பெற்றவர்.

இவரது நாவல்களைத் தவிர வேறு எவருடைய நாவல்களிலும் படைப்பின் கோபாவேசத்தையும், ஆதாரபூர்வமான யுகத்தின்

ஆத்மாவையும், உணர்ச்சி பூர்வமாகக் காண இயலவில்லை. இவருடைய 'தோட்டியுடே மகன்' என்ற புகழ்பெற்ற நாவல் வழக்கமான நடத்தை நெறிகளுக்கு ஒரு சவாலாகும். 'யதார்த்த வாதத்தின் தத்துவார்த்தம் என்ன என்பது இந்த நாவலில்தான் முதலில் வெளியிடப்பட்டிருக்கிறது. 'ரெண்டிடங்கழி' என்ற நாவலுக்குச் 'செம்மீனு'க்குக் கிடைத்த புகழ் கிடைக்கவில்லை. ஆனால், இந்த நாவல்தான் தகழியின் படைப்பாற்றலை நிறைவாக எடுத்துக் காட்டுகிறது. இதில், தமது உறுதியான கருத்துக்களைத் தகழி வெளியிட்டிருக்கிறார். கேரள மக்களின் புரட்சி எண்ணங்களை விழித்தெழச் செய்ததில், இந்த நாவலுக்கு மிக முக்கியமான பங்கு உண்டு. 'செம்மீன்' மீனவர் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட கதை. இந்த நாவலின் முடிவில் பரீக்குட்டியும் கருத்தம் மாவும் ஒருவரை ஒருவர் தழுவிய நிலையில் சடலங்களாக அலைகளால் அடித்துக் கொண்டு வந்து கரையில் ஒதுக்கப்படுகிறார்கள். இந்தக் காட்சியுடன் துவங்கும் நாடக விளைவை, அதுவரை எந்த மலையாள நாவலிலும் காண முடிந்ததில்லை. கடலையும், மனித ஆத்மாவின் விசாலமான கண்யத்தையும் 'தகழி' செம்மீனில் இணைத்திருக்கிறார். 'ஏணிப்படிகள்' ஒரு பெரிய நாவல். நாட்டு விடுதலைக்குப் பின் கேரளம் பின்பற்றிய தேசிய மற்றும், சமுதாயப் பாதையை இந்த நாவல் எடுத்துரைக்கிறது.

கேசவ்தேவ் நாவல்களின் சாரமும், புரட்சி விழிப்புறல்தான். தகழியின் புரட்சி உணர்வுக்கு அடிப்படை ஒரு குறிப்பிட்ட கொள்கை அதாவது மார்க்சீயம். ஆனால் கேசவ்தேவின் புரட்சி உணர்வு இயற்கையானது. அவரது பாத்திரங்கள் அநீதியையும், ஒழுங்கீனத்தையும் கண்டு வெகுண்டு சீறுகின்றன. அவரது சிறந்த படைப்பான 'ஓடையில் நின்னு'வின் கதாநாயகன் 'பப்பு' தியாகத்தின் சின்னம். அவனைப் படைத்ததன் வாயிலாக ஆசிரியர் மனித குலத்துக்கு ஒரு சிகரம் வைத்திருக்கிறார். கேசவ்தேவின் பெரிய நாவலான 'அயல்கார்', தகழியின் 'ஏணிப்படிகள்' போன்றது. சமுதாயத்தின் பல்வேறு மக்கள் பிரிவினரையும், அவர்களது சமூக வாழ்க்கை வேறுபாடுகளையும் அவர் விரிவாகச் சித்திரித்திருக்கிறார். ஒருவேளை 'ஓடையில் நின்னு'வுக்கு கிடைத்த முக்கியத்துவம் அதற்குக் கிடைக்காமல் போகக்கூடும். ஆனால் அதன் உணர்ச்சிச் செறிவும், கலைநயமும், கேசவ்தேவின் சிறந்த நாவலெனக் கருதும்படி செய்திருக்கிறது. தகழியின் சிறந்த படைப்புகள் எழுதப்பட்ட காலம், சமூக வாழ்க்கையின் நாவல் காலம்

என்று கருதப்படுகிறது. சமூகத்தில் காணப்பட்ட விழிப்புணர்வு, இந்த நாவலாசிரியர்களைக் கவர்ந்தது.

உரூபும் பஷீரும், சமூகத்தையும், சிக்கலான சமூக அமைப்பையும் நிர்வகிக்கும் மனிதர்களின் உள்ளங்களை நேராக ஊடுருவிப் பார்த்தனர். உரூபின் 'உம்மாச்சு' என்ற நாவல் மலையாளத்தின் தலைசிறந்த நாவல்களில் ஒன்று எனக் கருதப்படுகிறது. 'சுந்தரிகளும் சுந்தரன்மாரும்' என்ற அவரது புத்தகம், உலக இலக்கியத்தின் சிறப்புமிக்க நாவல்களை நினைவூட்டுகிறது. மனிதன் மீது காலம் செய்யும் கோலமும் சமூகத்தில் மனிதனால் விளையும் விளைவுகளும், படக்காட்சிபோல் இந்த நாவலில் தோன்றுகின்றன. 'குஞ்ஞும் மையும் கூட்டுகாரும்' என்ற இனிய கதை சமூகத்தின் கண்ணாடி எனச் சொல்லவேண்டும்.

பஷீரைப் போலவே உரூபும் அனைவரது மரியாதைக்கும் உரியவராவர். தகழியின் புரட்சி உணர்வோ கேசவ் தேவியின் தார்மீகக் கோபமோ அவரிடம் காணப்படவில்லை. ஒரு முனிவரது, ஒருமனப் பட்ட சிந்தையுடன், படைப்புத் தவம் செய்கிறார். இந்த ஒருமனப் பட்ட சிந்தையும் அதன் பலனான கம்பீரமும் அவரது நாவல்களின் சிறப்பாகும்.

'பொற்றேகாடு' தமது இலக்கியப் பணியைத் துவக்கிய காலம், உலகம் முழுவதும் பொறுமையின்றித் தவித்த சமயம். கேசவ்தேவ், உரூபு ஆகியோரின் நிலைக்கு இவருடைய நிலை குறைந்ததல்ல. இவரது எழுத்துக்களில் கவிதை நயம் சொட்டுவதைக் காணலாம். இவரை ஒரு நாவலாசிரியர் என்று சொல்வதை விடக் கவிஞர் என்றே சொல்லிவிடலாம். மலையாள மொழியில் தாராளப் போக்கை மதிப்பவர்களில் இவர் தலைமைப்பீடம் வகிப்பவர். படைப்பு-புரட்சியின் தழலில் வெந்து கொண்டிருக்கும் வாசகர்களின் இதயத்தைச் சந்தனக் குழம்பால் குளிர்விக்கும் இதமூட்டும் பல நாவல்களையும் கதைகளையும் இவர் எழுதியிருக்கிறார். ஆனால் இவரது படைப்புக்கள் வெறும் கற்பனைக் குமிழிகள் மட்டுமல்ல. உதாரணமாக இவரது 'விஷகன்யா' ஒரு காதல் கதை மட்டுமல்ல; திருவிதாங்கூரிலிருந்து, வளம் நாடி செல்வம் தேடிச் சென்று வயநாட்டின் மலைப்பகுதிகளில் குடியேறிய விவசாயிகளின் கதையுமாகும். நாடோடிக் கூட்டம் ஒன்றின் ஆசாபாசங்களையும் ஏக்கங்களையும் ஏமாற்றங்களையும் எடுத்துரைக்கும் வரலாறு. தகழியின் 'செம்மீன்,' பஷீரின் 'பால்ய காலசகி,' கேசவ் தேவியின் 'ஓடையில் நின்னு,' உரூபின் 'உம்மாச்சு' ஆகியவற்றைப் போல 'விஷகன்யா'வும்

மலையாளத்தின் சிறந்த நாவல்களில் ஒன்று. இந்த ஆசிரியருடைய மற்றொரு நாவலும் இதேபோல் கவனத்துக்குரியது. 'தெருவிண்டே கதா' என்பது அந்நூல். நகரின் தெரு ஒன்றின் கதை வாயிலாக நாட்டின் சமூகப் பண்புகளை அவர் இதில் அம்பலப்படுத்துகிறார்.

பொதுவாக மலையாள நாவலாசிரியர்கள் புதிய பாணிகளை ஏற்பதை அவ்வளவாக விரும்புவதில்லை. தகழி, பொற்றேகாடு நாவல்களின் சிறப்பு அம்சம் அவற்றின் கட்டுக்கோப்பு அழகாகும். மலையாள நாவல்களின் உயிர், கூரிய உணர்வுகளாகும். எம். டி. வாசுதேவன் நாயர்தான் புதிய பாணியில் சோதனை நடத்திய முதல் நாவலாசிரியர். அது ஒரு தனிப்பட்ட துணிகர முயற்சியாகும். மார்செல் பிரௌஸ்ட், ஜேம்ஸ் ஜாய்ஸ் ஆகிய இருவரது கலைநய ரகசியங்களை ஒருங்கிணைத்து, வழக்கமான கூரிய உணர்ச்சிகளைப் புண்படுத்தாமல், தமக்கென சொந்தமான பாணியை உருவாக்கிக் கொண்டார். நாவல்களின் பரிணாமம், பாத்திரங்களின் வெளிப்புறங்களில் ஏற்படுவதில்லை. அவர்களது அந்தராத்மாவில்தான் ஏற்படுகிறது. வாசுதேவன் நாயரின் இப்புதிய பாணி, வாசகர்களுக்குப் புதியதோர் அனுபவமாயிருந்தது. அவரது நாவல்கள் புதிய பாணி மட்டுமல்ல. சந்து மேனவன் கண்ட தாய் வழிமுறையின் மறையும் தோற்றம், வாசுதேவன் நாயரின் நாவல்களில் நிதர்சனமாக நிறைவடைவது போல் தெரிந்தது. அவரது கதாநாயகர்கள் அனைவரும், மரபாகி வந்த தளைகளிலிருந்து விடுதலை பெறும் முயற்சிகளுக்கு உண்மைச் சாட்சிகளாவர். புரட்சிக்காரர்களைப் புகுத்திய மலையாளி நாவலாசிரியர்களில் வாசுதேவன் நாயர் முதல்வர். அவரது சிறந்த படைப்பான 'நாலுகட்டு' பழமை வாத இருட்டில் மூழ்கி நாசமுற்ற நாயர் குடும்பம் ஒன்றின் கதையாகும். 'காலம்' என்ற புதிய நாவல், பாரதம் சுதந்திரம் பெற்றபின் மாறிவரும் பண்புகளைச் சித்திரிக்கிறது. ஈடு இணையற்ற கவிதை நயமுடைய வசன நடைக்கும், வீரியமுள்ள, கண்ணியத்திற்கு எடுத்துக்காட்டான கதாநாயகர்கள், பெண்களின் அரிய சிறப்புகளுக்கு உறைவிடமான கதாநாயகிகள் ஆகியவர்களின் படைப்புக்கும் பெயர் பெற்றுப் புகழடைந்த வேறு மலையாள மொழி நாவலாசிரியர் எவருமில்லை என்று தயக்கமின்றிச் சொல்லலாம்.

மேலே சொன்ன நாவலாசிரியர்களுக்குப் பிறகு மற்றொரு வரிசை உண்டு. 'பாரப்புரம்,' கே. சுரேந்திரன், ஈ. எம். கோவூர், கோவிலன் ஆகியோரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். 'பாரப்புரம்' எழுத்துக்களில் சிப்பாய்களின் வாழ்வும், கேரள கிராமங்களின் கதைகளும் போதிய அளவு பிரதிபலிக்கின்றன. கே. சுரேந்திரன்

குடும்பப் பிணக்குகளைத் தமது கருப் பொருளாகத் தெரிந்தெடுத்திருக்கிறார். கோவூரின் எழுத்துச் சிறப்பு பலவகைப்பட்ட கருப் பொருள்களாகும். சிப்பாய்களின் வாழ்க்கையைச் சித்திரிப்பதில் கோவிலனுக்கு ஈடு எவருமில்லை. நாவல் இலக்கியத்துக்கு வளமூட்டுவதில் இந்த ஆசிரியர்களின் பங்கு குறைவானதல்ல.

பொதுமக்களின் அபிமானத்துக்குப் பாத்திரமாகி மலையாள இலக்கியத்தில் ஓர் இடத்தைப் பிடித்து ஊன்றிக் கொண்ட நாவலாசிரியர்களில் வைக்கம் முகம்மது பஷீர் ஒருவர். அவருக்குச் சமமானவர் என்று கருதப்பட்டவர்கள் எல்லாம் இப்போது வெறுமே பெயர் குறிப்பிடக் கூடிய நிலைக்கு வந்துவிட்டார்கள். ஆனால் இந்த இலக்கிய மேதையோ இவர்கள் அனைவரையும் தூக்கி அடித்துவிட்டு, தனிச் சிறப்புடன் ஒளி வீசுகிறார். முதுமைப் பருவத்தை எட்டிய போதிலும் கணக்கற்ற வாசகர்கள் இவரைத் தொழுகிறார்கள். புதிய விழிப்பு யுகத்தில் நவீன இலக்கிய படைப்புகள் இருந்த போதிலும் இவர் வேறு பல ஆசிரியர்களைப் போல, பழைய யுகத்துடன் ஒன்றிப்போய் விடவில்லை. இந்த ஆசிரியர் ஒரு யுகத்தையோ கால கட்டத்தையோ ஆட்கொள்ளவில்லை. பிறகு இவர் யார்? இவரது படைப்புகளின் குணச்சித்திரங்கள் என்ன?

பஷீர் என்ற பெயருடைய ஆசிரியரை ஒருவர் புரிந்துகொள்ள வேண்டுமானால் பஷீர் என்ற பெயருடைய ஒரு மனிதரை முதலில் புரிந்துகொள்ள வேண்டும். சுதந்திரப் போராட்டம் முழு வேகத்தில் நடந்து கொண்டிருந்தபோது இளம் பஷீர், வீட்டைத் துறந்து அதில் குதித்தார். கோழிக்கோடு கடற்கரையில் உட்கார்ந்து உப்பு தயாரித்தார். அதன் விளைவு போலீஸ் அடக்குமுறைக்கு ஆளாகி, சிறைக் கம்பி எண்ண வேண்டியதாயிற்று. இதயத்தில் சுதந்திரக் கனல் வீச, பஷீர் இந்திய நாடு முழுவதிலும் பயணம் செய்தார். வெளிநாடுகளுக்கும் போய் வந்தார். புதிய முற்போக்குக் காலத்தின் மற்ற யுக சிருஷ்டி ஆசிரியர்களைப்போல பஷீரின் உள்ளேயும் புரட்சிக் கருத்து கனன்று கொண்டிருந்தது.

"எனது சதையும் ரத்தமும், எலும்பும் தோலும் அனைத்தும் இந்தியாவுக்குச் சொந்தம்" என்று 'ஜன்ம தினம்' என்ற கதையில் கூறியிருக்கிறார். ஆனால் அவரது கதைகளின் சாரம் தார்மீகக் கோபத்தையோ, தேசிய விழிப்புணர்வையோ கொண்டவை அல்ல. இதயத்தில் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த புரட்சிக் கருத்தை வசமாக்கி, சாந்தப்படுத்திக் கொண்டிருந்த விசேஷ

உணர்வு ஒன்றும் இருந்தது. இதுதான் பஷீரை, தகழி, கேசவ் தேவ் ஆகியோரினின்று வேறுபட்டவராகச் செய்தது.

பஷீர் சிறிது காலம் மனநோய் வசப்பட்டிருந்தார். மனநோய் ஆஸ்பத்திரியில் மனம் பேதலித்தவர்களுடன் அவர் இருந்தபோது '' பாத்தும்மாயுடே ஆடு '' என்ற குறு நாவலை எழுதினர்.

அதன் முன்னுரையில் அவர் நினைவு கூர்கிறர் : '' நாலு பக்கங் களிலும் 20-30 பைத்தியக்காரர்கள் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். கைகளில் விலங்கு பூட்டியவர்களும், கால்கள் தளைகளால் பிணைக்கப் பட்டவர்களுமாகப் பலவிதமான மனிதர்கள் அங்கு வைக்கப்பட் டிருந்தார்கள். '' பஷீரின் மனதில் இருந்த சிந்தனைகள் அல்லது விசித்திர எண்ணங்கள் முரண்பட்டவை அல்ல. இந்த உலகின் வியாபகம், அதை நிரப்பியுள்ள இருள்—இவையே அப்போது அவரது சிந்தனைகள். பஷீர் என்ற எழுத்தாளரின் நல்ல அதிர்ஷ்டத்தின் ஒரு பகுதியே பஷீரின் பைத்திய நிலை. அவரது ஆழங்காண முடியாத வாழ்க்கைத் தத்துவத்தில் இந்த உண்மை யைக் காணலாம்.

பஷீர் ஒரு புரட்சிக்காரர் என்பதைவிட உண்மையைத் தேடுபவர் என்று சொல்லலாம். அவரது சக ஆசிரியர்கள் சோஷலிஸ யதார்த்த வாதத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதி வருகையில் பஷீர், 'எட்டுக்காலி மம்மூஞ்ஞு', 'ஆனவாரி ராமன் நாயர்' போன்ற நகைச்சுவைக் கதைகளை எழுதிக் கொண்டிருந்தார்.

'ஸ்தலத்தே பிரதான திவ்யன்மார்', 'ஆனவாரியும் பொன் குரிசும்', 'முச்சீட்டு களிக்காரண்டே மகள்' ஆகியவை உயர்தர நகைச்சுவைக் கதைகள் எனக் கருதப்படுகின்றன. இப்படியிருந்தும் பஷீர் ஒரு நகைச்சுவை எழுத்தாளர் அல்ல. '' பாத்தும்மாயுடே ஆடு '' என்னும் நூலின் முகவுரையில் அவர் எழுதுகிறர் : '' இது ஒரு ஹாஸ்யக் கதை. ஆனல் நான் இதை எழுதுகையில் என் உள்ளே ஒரு நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. '' அந்தத் தீயிலிருந்து விடுபடுவதற்கு இலக்கியப் படைப்புதான் பஷீருக்கு வழியாய் இருந்தது. பஷீர் சோஷலிஸ உண்மையைக் காணமல் கண்ணை மூடிக் கொள்ளவில்லை. மிகப் பெரிய சிக்கல் நிறைந்த சமூக அமைப்பை ஊடுருவி நோக்கும் சக்தி, உரூடைப்போல் பஷீருக்கும் உண்டு. 'என்டுப் புப்பாக் கோரானை யுண்டார்னு' (என்னுடைய தாத்தாவிடம் ஒரு யானை இருந்தது) என்ற புத்தகம் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு. இது சமுதாயத்தின் தளத்தில் ஒரு புயலை எழுப்பும் நாவல்.

பஷீரின் நாவல்கள் பலவும் கேரளத்தின் முஸ்லீம் சமுதாய நிலையை விவரிப்பவை. 'பாத்தும்மாவுடே ஆடு' 'முச்சீட்டு களிக்காரன்டே மகள்' போன்ற நாவல்களில் நமது சமூகத்தைப் பற்றி எடுத்துரைக்கும் மனப்பான்மை காணப்படுகிறது. உண்மை யான வாழ்க்கையிலிருந்து பொறுக்கிய பெண் பாத்திரங்கள் அவரது நாவல்களின் உயிர் ஓட்டமாகும். 'என்டுப் பப்பாக் கோரானை யுண்டார்னு' என்ற நாவலில் தனது சமூகத்தை ஒரு சேர்க்கை ஆய்வுக்கு உட்படுத்தியிருக்கிறார். இந்த நாவல் குஞ்ஞுபாத்தும்மா என்ற அப்பாவிப் பெண்ணைப் பற்றியது. பாத்தும்மாவைப் பற்றி பஷீர் சொல்கிறார்: "தனது குழந்தைப் பருவம் தொடங்கி எல்லா உயிர்களிடத்தும் அன்புகொண்ட சிறு பெண் அவள்." குருட்டு நம்பிக்கை என்னும் அச்சில் உருளும் ஒரு குடும்பத்தின் கதை இது. பல தலைமுறைகளாக இரத்தத்தில் ஊறிப்போன வகுப்புப் போட்டியை பஷீர் பின்வருமாறு விளக்குகிறார்: "தாத்தாவின் யானை ஆறு பேரைக் கொன்றுவிட்டது. ஆறு மாவுத்தர்களும் முஸ்லீம் அல்லாதார்கள். யானை, ஒரு முஸ்லீமைக்கூடக் கொல்லவில்லை." அம்மிஜான் சொன்னார்: "அது உண்மையான முஷயத்தை அறிந்த யானை."

பஷீரின் மற்ற நாவல்களைப்போல இதுவும் சிறிய நாவலே. இதன் நடை அழகு மிகுந்த கவிதை நடை. குரான் ஷரீபிலிருந்து மேற் கோள்களும், நிகழ்ச்சிகளும் இந்த நவினத்தின் அழகை மேலும் துலங்கச் செய்கின்றன. முஸ்லிம் சமுதாயத்தின் புரியாப் புதிர்களைப் புரியவைக்கும் பல நாவல்கள் மலையாளத்தில் எழுதப்பட்டிருக் கின்றன. அவற்றில் இது பிரதான புத்தகமாகும். முஸ்லீம் சமூகத் துக்கு எதிராக எவரும் ஒரு வார்த்தைகூடப் பேசுவதற்குத் துணியாத ஒரு சமயத்தில் பஷீர் இந்த நாவலை எழுதினார். இதைக் கண்ட அந்தச் சமூகத்தின் காவலர்களான பல பெரிய மனிதர்கள், பஷீரை அவதூறுக்கு இலக்காக்கப் பெரிதும் முயன்றார்கள். ஒரு சமயம் இந்த நூல்மீது சட்டபூர்வமான தடை இருந்தது.

பஷீரின் கதையில் வரும் எந்தப் பாத்திரத்துக்கு எதிராகவும் நமது மனங்களில் வெறுப்போ, அருவருப்போ எழ முடியாது. குஞ்ஞுப் பாத்தும்மாவின் ஏக்கங்களுக்கும் வற்றாக் கண்ணீருக்கும் காரணம் அவளுடைய தந்தைதான். இந்தப் பாத்திரத்தைக்கூட வாசகர் களின் அன்பையும் அநுதாபத்தையும் பெறத்தக்கதாக அவர் படைத்திருக்கிறார். இதன்மூலம், பஷீர் ஒரு புரட்சிக்காரர் என்பதை

விட மனித குலத்தை நேசிப்பவராக இருக்கிருர் என்பது நிரூபணமாகிறது.

மலையாள நாவல்கள் காலத்தை ஒட்டியே அமைந்திருப்பது அவற்றின் அடிப்படை அம்சம். காலத்துக்குப் புறம்பாக அது வெகு தொலைவில் சென்ருல் 'ஓடையில் நின்னு' போன்ற ஒரு நாவல் கூடச் சுவையற்றதாகிவிடும். ஆனல் பஷீரின் நாவல்களுக்கு இந்த எல்லைகள் அவசியமாகத் தோன்றவில்லை. இதற்குச் சிறந்த உதாரணம் மேலே குறிப்பிட்ட நாவல்.

'பால்யகாலசகி'யை அறியாத மலையாள வாசகர் எவரும் இருக்க முடியாது. உலகத்தின் மர்மங்களை ஆராயும் பஷீரின் நாவல்கள் எளியவை, அழகானவை. நாடோடிப் பாடல்களைப் போன்றவை. ஒரு வீணையின் இனிய நாதத்தின் கவர்ச்சி அவரது வாக்கியங்களில் தென்படுகின்றன. 'தகழி', உரூபைப்போல் பெரிய நாவல்களை பஷீர் எழுதவில்லை. இவரைப்போல் செட்டாக வார்த்தைகளைப் பயன்படுத்தும் மலையாள எழுத்தாளர்கள் அதிகம் கிடையாது. பஷீரின் கலைத்திறனுக்கு 'பால்யகாலசகி' நல்லதொரு எடுத்துக்காட்டு. வெளித் தோற்றத்துக்கு இதுவும் ஒரு காதல் கதை தான். இந்தக் காதல் கதையின் நிழலில் மனிதனின் அதிர்ஷ்டம், வாழ்க்கை ஆகியவற்றின் மர்மப்பொருள் விரவிக் கிடக்கிறது; அவரது ஒவ்வொரு சொல்லிலும் வழிபாடு செய்வோரின் மணி ஓசை எதிரொலிக்கிறது. சிறியதொரு முத்தில் உலகின் இரகசியத்தை உள்ளடக்கும் இக்கலைத்திறன் அற்புதமானது.

பஷீரின் மற்ருெரு நாவல் உண்டு. அதை படிக்கத் தொடங்கினல் முடிக்காமல் கீழே வைக்க மாட்டோம். அது தான் 'பாத்தும்மாயுடே ஆடு' (பாத்தும்மாவுடைய ஆடு). பஷீரின் நாவல்கள் அனைத்துமே இத்தகைய சிறப்புடையவைதாம். அதனல் தான் இளைஞர்கள் முதியோர்கள் என்ற வேறுபாடின்றி வாசகர்களிடையே அவருடைய நாவல்கள் பிரபலமாக இருக்கின்றன.

'பால்யகாலசகி'யைப் போல, 'பாத்தும்மாயுடே ஆடு'ம் சுமார் 100 பக்கங்களுக்கு உட்பட்டதே! 'ஏணிப்படிகள்', 'ஆள் கூட்டம்' போன்ற பெரிய நாவல்கள் பல மலையாளத்தில் இருக்கின்றன. ஆனல் இவை, நாவலின் அமைப்பு பற்றிய பழைய விதிகளை அனுசரிக்கவில்லை. இக் கருத்துடன் பார்த்தால் பஷீரை நாம் கணக்கில் அடங்காதவர் என நினைக்க வேண்டும். விக்டர் ஹியூகோவிடமிருந்து ஆக்கம் பெற்ற எழுத்தாளர்கள் அவருடைய நீண்ட பிரசங்க முறையைப் பின்பற்றவில்லை. மலையாள எழுத்

தாளர்கள் ஆத்மாவை நீண்ட பிரசங்கத்தில் காணுவதில்லை. செட்டான உரையாடலிலேயே கண்டுபிடிக்கிறார்கள்.

'பாத்தும்மாயுடே ஆடு' பஷீரின் குடும்பக் கதை. அதில் வரும் பாத்திரங்கள் அவருடைய சகோதரர், சகோதரி, தாயார் முதலானவர். ஆனால், அது எழுதப்பட்டிருக்கும் சிறப்பான பாணியும், நடையும், அதை நம் அனைவரது கதையாக்கி விடுகின்றன. கிராமத்து வீடு ஒன்றையே பரந்த உலகமாக பஷீர் சித்திரிக்கிறார்.

பஷீர், ஆட்கள், குடும்பங்கள் அல்லது கூட்டத்தினரின் வெறும் கதையை மட்டும் சொல்லவில்லை. மனித வாழ்வின் ஓர் அத்தியாயத்தை மட்டும் அவர் சொல்லவில்லை. சத்தியத்தைச் சொல்லுகிறார். விண் முட்டும் மலைகள், கடல்களின் கோரப் புயல்கள், எல்லையில்லா வானம் ஆகியவற்றில் அவரது கற்பனை சஞ்சரிக்கிறது. அவரது ஆய்வு மனம் உலகத்தின் தோற்றம் வரைபோய்விட்டது.

புதிய படைப்பு ஒன்றை அவர் எப்படித் துவக்குகிறார் என்று பாருங்கள்: "முடிவற்ற சூன்யம் என்றால் வெறுமை அதாவது ஒன்றுமில்லாமை என்பது பொருள். அந்த வெறுமையிலிருந்துதான் எல்லாம் தோன்றியது—தெரிந்தது தெரியாதது அனைத்தும்" (ஓர்மயுடே அறைகள்).

மூளைக் கோளாறால் வீணாகிப்போன மூளையை உலக இரகசியங்களால் நிரப்பிய பஷீர் அமர்ந்த வண்ணம், தனது வழுக்கை மண்டையை தடவிக்கொண்டே சிரிக்கிறார். இவர்தான் பஷீர். இவரது படைப்புகளைப் புரிந்து கொள்ளும் வழியும் இதுதான்.

மலையாள நாவல் பல புதிய பரிணாமக் கட்டங்களுக்கு உள்ளாகி வருகிறது. எம். டி. வாஸுதேவன் நாயர், சங்கேதப்பாணி விஷயமாகக் காட்டிய வழியிலிருந்து நாவலாசிரியர்கள் வெகு தொலைவு முன்னேறிப் போய்விட்டார்கள். புதிய தலைமுறையின் வாழ்க்கை இலட்சியங்களை அவர்கள் குலைத்து விட்டார்கள். மலையாள நாவல், புதிய பண்புகள், புதிய வாழ்க்கை லட்சியங்கள், புதிய சங்கேதப்பாணிகள் ஆகியவற்றுடன் முன்னேறிச்செல்கிறது. இந்தப் முன்னேற்றப் பயணத்தில், இந்த மாறுதல் புயல்களில் பஷீர் தலை நிமிர்ந்து, கலங்கரை விளக்குபோல் நின்றுகொண்டிருக்கிறார்.

**எம். முகுந்தன்**

# 1

‘பாத்தும்மாவுடைய ஆடு’ அல்லது பெண்களுடைய புத்தி என்னும் கதையைத்தான் இங்கு நான் சொல்லப் போகிறேன் !

பல்லாண்டுகள் ஏகாந்தமாக அலைந்து திரிந்து வாழ்க்கையைக் கழித்த பிறகு, மூக்குக்குமேல் பொங்கி வழியும் சினத்தோடு, இனியாவது நிம்மதியாக இருக்கலாம் என்று எண்ணி, எனது வீட்டுக்குத் திரும்பி வந்தேன் ! ஆஹா ! என்ன அற்புதமான வரவேற்பு ! எனக்கு வந்த கோபத்துக்கு அளவே இல்லை. நான் எனக்குள்ளாகவே குமைந்து குமுறினேன். என்னுடைய வீடு... இதில் யாரையென்று குறை சொல்வது ?

பத்துப் பதினைந்து ஆண்டுகளாகவே நான் என் வீட்டில் தொடர்ந்து வாழ்ந்தது கிடையாது. எப்போதாவது ஒரு சில இரவுகளில் மட்டும் தங்கியிருந்ததாக நினைவு, அவ்வளவுதான்.

இந்தக் குடும்ப வீட்டுக்கு எதிரே, பப்ளிக் ரோடின் ஓரத்தில், ஓடு வேய்ந்த ஒரு சிறிய கட்டடம் உண்டு. நான் மட்டும் வசிப்பதற்காகவே இது கட்டப்பட்டதாகும். இதைக் கட்டும்போது நானே கல்லும் மண்ணும் சுமந்திருக்கிறேன். மிகவும் சிரமப்பட்டுமிருக்கிறேன். அமைதிக்கு உறைவிடமானதாக இருக்க வேண்டும், அழகு கொஞ்ச வேண்டும் என்று பல உபாயங்களையும் உத்திகளையும் கையாண்டேன். கற்களைக் கொண்டு எழுப்பப்பட்ட உயரமான மதில்களுடன் கூடிய முற்றத்தில் வெள்ளை மணலைப் பரப்பும்படிச் செய்தேன். இந்த முற்றத்தைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் மிக

அழகான செடிகள் உண்டு. அழகுமிகும் அரைவட்டப் பந்தல் களின் மேல் முல்லையும், பிச்சியும் படரவிடப்பட்டுள்ளன. முற்றத்தின் மூலைகளில் கொய்யாச் செடிகளை நட்டு, மரமாக வளர்த் துள்ளேன்.

அந்த வீட்டுப் புழக்கடையில் இரண்டு குளங்கள் உள்ளன. ஒன்று குடிதண்ணீருக்கானது, மற்றொன்று குளிப்பதற்கு. எனது உபயோகத்துக்கு எனத் தனியாக ஒரு கக்கூஸும் உண்டு. புழக் கடையில் உள்ள தோப்பில், நிறைய தென்னை மரங்களும் வாழை மரங்களும் இருந்தன; இதோடுகூட பலவகை மரங்களையும் நானே நட்டு வளர்த்திருக்கிறேன். நல்ல மாமரங்களும் உள்ளன. சாலை யின் ஓரத்திலும் எல்லையிலும் அழகு கொழிக்கும் அன்னாசிப்பழ மரங்கள். வீட்டையும் தோப்பையும் சுற்றி 6 அடி உயரத்தில், தென்னை ஓலைகளும் முட்களும் கொண்டு முடைந்த வேலி. கட்டடத் தின் முன்புறம் அழிகளுடன் கூடிய கேட். அது எப்போதுமே பூட்டி வைக்கப்பட்டிருக்கும். சாலை வழியே போவோரும் வருவோரும் அழகான செடி கொடிகளையும், கண்ணுக்கு இனிய மலர் வகைகளையும் இந்த அழிக்கதவினூடே கண்டு ரசிக்க இயலும்.

நான் இந்த வீட்டில்தான் தனியாக வசித்து வந்தேன். சாயா, பலகாரங்கள், சாப்பாடு முதலியவற்றை என் உம்மா (அம்மா) கேட்டின் மேற்புறம் வழியாக உள்ளே நீட்டுவாள். இப்படியாக நான் இந்த வீட்டினுள்ளே எவரையுமே அனுமதித்தது கிடையாது. விச்ராந்தியாக அமர்ந்து எழுதிக்கொண்டேயிருப்பேன்; இல்லை யென்றால் எதையாவது படித்துக் கொண்டிருப்பேன்; அதுவுமில்லை யெனில் செடிகளையும் மரங்களையும் பராமரித்தவாறு தோட்டத்தில் இங்குமங்குமாகச் சுற்றி வந்துகொண்டிருப்பேன். இப்படியிருக்கும் போது வெளியூர்களைச் சுற்றிப் பார்த்துவரும் எண்ணத்தோடு நான் ஊரை விட்டுப் புறப்பட்டேன். வர்க்கலையின் அருகேயுள்ள சிவகிரி, சென்னை, எர்ணாகுளம், கோயமுத்தூர், ஆகியவிடங்களில் மூன்றாண்டுகளைக் கழித்த பிறகு, உடல் அசௌக்யம் காரணமாக ஊர் திரும்பியபோது நிலைமை எப்படியிருக்கிறது தெரியுமா! நான் மட்டுமே நிம்மதியாக வாழ்ந்து வந்த எனது சிறிய வீட்டை, எனது நேர் அடுத்த தம்பியான அப்துல் காதர் வாடகைக்கு விட்டிருக் கிறான்! எக்சைஸ் இன்ஸ்பெக்டர் ஸ்ரீமான் ராமன் குட்டி, தமது சமையல்காரனுடன் அங்கு பரம சவுக்கியத்தோடு வாழ்ந்து கொண்டிருக்கிறார். பெரியவருக்கு வீடு ரொம்பப் பிடித்துப் போயிருந்தது; இருந்தாலும் வேறு வீடு பார்த்துப் போயிருப்பார்

தான்! ஆனால், அந்தக் கிராமத்திலே வேறு வீடு கிடைப்பது என்பது குதிரைக் கொம்பாக அல்லவா இருந்தது!

அவர்தான் என்ன செய்வார்? பாவம்! உம்! அதனால், நான் எங்களுடைய புராதன வீட்டிலேயே வசிக்கலானேன். எனக்கோ பூரண ஓய்வு தேவையாக இருந்தது. இழந்த ஆரோக்யத்தைத் திரும்பப் பெற வேண்டும். மனச் சஞ்சலத்துக்கு இடமளிக்கக்கூடிய தொந்திரவுகளோ, ஓசைகளோ, எதுவுமே இருக்கலாகாது. ஆனால், தொல்லைகளுக்கும் கூச்சல்களுக்கும் இடையே வசிக்க வேண்டிய ஒரு நிலைதான் எனக்கு ஏற்பட்டது.

ஓலையினால் வேயப்பட்ட ஒரு சிறிய கட்டடம்தான் எங்களது இல்லம். அதில் வசிப்பவர் யார் யார் தெரியுமா?

என்னுடைய உம்மா, எனது நேர் அடுத்த தம்பி அப்துல் காதர், அவனுடைய சம்சாரம் குஞ்ஞானும்மா, அத்தம்பதியரின் செல்லக் குழந்தைகளான பாத்துக்குட்டி. ஆரிஃபா, சுபைதா: அப்துல் காதருக்கு நேர் அடுத்த தம்பியான முகம்மது ஹனிஃபா, அவனது மனைவி ஐசோம்மா, இவர்களது அருமைச் செல்வங்களான ஹபீபு முகம்மது, லைலா, முகம்மது ரஷீது; ஹனிஃபாவை அடுத்த தங்கை ஆனும்மா, அவளுடைய கணவன் சுலைமான், இத்தம்பதியின் ஒரே செல்லக் குழந்தை ஸயிது முகம்மது. பிறகு எல்லோருக்கும் கடைசித் தம்பியான அபூபக்கர்!

இவர்கள்தாம் என் வீட்டு மனிதர்கள். இவர்களைத் தவிர பூனைகள் சிலவும், உம்மாவின் கருணைக்குப் பாத்திரமாகி அங்கு வாழ்ந்து வந்தன. இந்தப் பூனைகளுக்குப் பயந்து மாடிமேல் சதா இங்குமங்குமாக ஓடிக் கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான எலிகள். கூரையிலிருந்துகொண்டு கத்தி அமர்க்களப்படுத்தும் காக்கைகள். இவை தவிர என் உம்மாவுக்குச் சொந்தமான பத்து நூறு கோழிகள். வீடு முழுவதும் இவை இஷ்டம்போல குறுக்கும் நெடுக்குமாக ஓடிக் கொண்டிருக்கும்; இவற்றின் எண்ணிலடங்கா குஞ்சுகள். இந்தக் குஞ்சுகளை லபக்கென்று கொத்திக் கவ்விக் கொண்டுபோய்த் தின்று வாழும் கழுகுகளும் பருந்துகளும் மரங்களில்!

ஆக வீட்டில் எப்போதும் ஒரே கோலாகலம்தான். ரஷீதும் சுபைதாவும் இன்னும் தவழ ஆரம்பிக்கவில்லை. தாய்ப்பால் குடிக்காத சமயங்களில் எல்லாம் இவர்கள் அழுதுகொண்டே இருப்பார்கள். இப்போதுதான் நடக்கத் துவங்கியுள்ள ஆரிஃபா அழும் கலையில் கைதேர்ந்தவள். இவளைவிட வயதில் சற்றே பெரியவர்களான லைலாவும் ஸயிது முகம்மதும்கூட அழுவதில்

யாருக்கும் சளைத்தவர்கள் அல்லர். அபியும் பாத்துக்குட்டியும் அழுவதில் வல்லவர்கள்; பிடிவாதக்காரர்கள். ஹபீபு முகம்மது என்னும் பெயர் ஸ்கூலில் மட்டும்தான். வீட்டில் அவனை 'அபி' என்று அழைப்பது வழக்கம். அவன் தன்னைப் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம் 'ம்பி' என்று சொல்லிக் கொள்வான். அவனும் பாத்துக்குட்டியும் முதல் வகுப்பில் படித்து வருகிறார்கள். குழந்தைகள், பூனைகள், கோழிகள், பெண்கள், பருந்துகள் எல்லாமாகச் சேர்ந்து அருமையானதொரு பக்கவாத்ய கோஷ்டியையே உருவாக்கியுள்ளனர்.

இந்த அமர்க்களத்துக்கிடையே நான் காண்பது என்ன? என் முன்னே நின்றுகொண்டிருக்கிறது ஒரு ஆடு! பெண்தான். தவிட்டு நிறம். நல்ல சுருசுருப்புடன் இருக்கிறது. அது, அதிகாலை அடுப்பங்கரைக்குச் சென்று காலைச் சிற்றுண்டியாக எதையேனும் சாப்பிடும். பிறகு அறைகளுக்குள் நுழைந்து தூங்கிக் கொண்டிருக்கும் குழந்தைகளை மிதித்து எழுப்பிவிட்டு, முற்றத்திற்கு ஓடும். அங்கு இரவில் வீழ்ந்து கிடக்கும் பலா இலைகளை அவசர அவசரமாகத் தின்ன ஆரம்பிக்கும்.

முற்றத்தின் அருகேயுள்ள பலாமரம் கிழப் பருவத்தைக் கடந்ததாகும். ஆயினும் அதில் பலாப் பழங்கள் இல்லாமல் இல்லை. பல ஆடுகள் தின்பதற்கு வேண்டிய பலா இலைகளும் அதனிடம் உண்டு. ஆடு பலா இலைகளையெல்லாம் விரைவாகக் கபளீகரம் செய்துவிட்டு, முற்றத்தின் அருகேயே உள்ள சாம்ப மரத்தின் கீழே போய் நிற்கும். அங்கு விழுந்து கிடக்கும் *சாம்பக் காய்களையெல்லாம் தின்னும். பிறகு கழுத்தை உயர்த்தி மரத்தினை உற்றுப் பார்க்கும். இளம் சிவப்பு வண்ணத்தில் மூழ்கிக் கிடக்கும் பெரும் பனித் துளிகளைப் போல, சாம்பங் காய்கள் பச்சை இலைகளினூடே மினுமினுக்கும். என்ன செய்வது? ஆடு தனது இரண்டு பின்னங் கால்களையும் ஊன்றிய வண்ணம், காயை எம்பித் தின்ன முயற்சிக்கும். ஆனால் காயோ அதற்கு எட்டுவது கிடையாது. இந்தச் சாம்ப மரத்தின் தாழ்ந்த கிளைகளை மேலே இழுத்துக் கட்டியது யார்?

அண்ணாந்து பார்த்தவாறு அது நின்று கொண்டிருக்கையில், பழுத்த பலா இலை ஒன்று 'பொத்'தென்று விழும். ஆடு முற்றத்துக்கு ஓடிப்போய் அதை நக்கி எடுத்து சுவாரஸ்யமாகக் கடித்துச் சுவைத்து தின்னும். அதற்குள் உம்மாவோ, குஞ்ஞானும்மாவோ

---

*** சாம்பங்காய் என்பது கேரளத்தில், அதிலும் தென் கேரளத்தில் கிடைக்கக் கூடியது. காய் புளிக்கும், பழம் இனிப்பாக இருக்கும்.**

ஐசோம்மாவோ ஆனும்மாவோ முற்றத்தைப் பெருக்குவதற்காக, துடைப்பமும் கையுமாக வருவார்கள் ; உடனே ஆடு வீட்டுக்குள் தாவி ஓடி, இங்குமங்குமாகச் சுற்றித் திரியும்.

இது யாருடைய ஆடு? இதுக்கு இவ்வளவு சுதந்திரம் கொடுத்தது யார்? அது எங்கெல்லாம் சுற்றுகிறது! என்னவெல்லாம் செய்கிறது! இருந்தும் யாரும் எதுவுமே சொல்வதில்லையே! கேள்வி முறை இல்லாத ஒரு வீடு. கேள்வி கேட்பாருமில்லை, செவிமடுப்பாருமில்லை!

நான் ஈஸிச் சேரில் சாய்ந்தவண்ணம் காற்றுட வெளியே அமர்ந்து ஓய்வெடுத்துக் கொண்டிருக்கையில், அறைக்குள் யாரோ காகிதத்தை இழுத்துக் கிழிக்கும் சத்தம் கேட்டது. ஜன்னல் வழியே நான் உள்ளே பார்த்தேன். அந்த ஆடு, என்னுடைய படுக்கையின்மேல் ஏறி நின்றுகொண்டு புத்தகத்தைத் தின்று கொண்டிருந்தது!

பெட்டியின் மேலே 'பால்ய கால சகி', 'சப்தங்ஙள்' ஆகிய இரண்டு புத்தகங்களுடைய புதிய பதிப்பின் ஒவ்வொரு பிரதி வைக்கப்பட்டிருந்தது. இவற்றில் அது, இப்போது 'பால்யகால சகி'யைத்தான் தின்று கொண்டிருந்தது. முன்னங் கால்களைக் கொண்டு புத்தகத்தை மிதித்தவாறு, ஒரே மூச்சில் இரண்டு மூன்று பக்கங்களாக நாக்கினல் நக்கி எடுத்து வாயில் திணித்து தின்று கொண்டிருந்தது. உம்! தின்றுவிட்டுப் போகட்டும்! நல்ல ஆடு தான்...' சப்தங்ஙள்' இருக்கிறதே. அதைத் தின்பதற்கும் துணிச்சல் இருக்கிறதா என்ன!

ஊஹூம்! கொஞ்சங்கூடத் தயங்கவே இல்லை. 'பால்யகால சகி' முழுவதுமாக வயிற்றினுள்ளே போய்ச் சேர்ந்தது. உடனடியாகச் 'சப்தங்ஙளில்' அது தன் கைவரிசையைக் காட்டத் துவங்கியது. இரண்டு நிமிடங்களுக்குள்ளாகவே அதுவும் ஜீரணிக்கப்பட்டு விட்டது. பிறகு ஆடு என் போர்வையின் மீது கவனத்தைத் திருப்பி, அதனையும் ருசி பார்க்கத் துவங்கியதும் நான் குதித்து எழுந்து அதனருகே சென்றேன் :

"ஹே அஜ சுந்தரி! தாயே, தயவு செய்து அந்தப் போர்வையை மட்டும் தின்றுவிடாதே! அதன் விலை 50 ரூபாய். அதற்கு வேறு பிரதி கூட என்னிடம் கிடையாது. என்னுடைய வேறு புத்தகங்கள் இன்னும் நிறைய இருக்கின்றன ; வேண்டுமென்றல் அவற்றை யெல்லாம் வரவழைத்துத் தங்கட்கு இலவசமாகவே படைக்கிறேனடி அம்மா."

இப்படிக் கூறியவாறு, ஆட்டைத் துரத்தி வெளியே அனுப்பினேன். அது, அங்கிருந்து நேரே பலாமரத்தினடிக்கு ஓடிப்

போயிற்று. அங்கு இரண்டு மூன்று இலைகள் விழுந்து கிடந்தன. ராணியம்மாள் அவற்றைத் தின்னவாரம்பித்தாள். நான் உம்மாவைக் கூப்பிட்டுக் கேட்டேன் :

" இந்த ஆடு யாருது ? "

உம்மா சொன்னாள் : " நம்ம பாத்தும்மாவுது ".

" ஓஹோ ! அதனாலேதான் அதுக்கு இவ்வளவு சுதந்திரம் ! "

பாத்தும்மாவுடைய ஆடு—விஷயம் விளங்கிற்று. பலபலவென்று வெள்ளி முளைக்கும் முன்னரே பாத்தும்மா, அதை அவிழ்த்துவிட்டு விடுவாள்.

" அவுங்க, முற்றத்தைப் பெருக்கிப் பலா எலெங்களையெல்லாம் வெளியே கொட்டிடுவாங்க. அதுக்கு முன்னாலே நீ அங்க போயி, வயித்தை ரொப்பிக்கடா என் கண்ணு ! " என்று அவள் ஆட்டுக்கு உபதேசிப்பாள். அது நேரே சாலை வழியாக வீட்டுக்கு வரும். பிறகு தன் கைவரிசைகளைக் காட்டத் துவங்கும்.

இந்த ஆட்டின் சொந்தக்காரியான பாத்தும்மா என்னுடைய தங்கைதான். அப்துல் காதருக்கு அடுத்தவள். இங்கிருந்து ஒன்றரை பர்லாங் தொலைவில், மார்க்கெட்டின் பின்னாலேதான் அவளது வீடு. கணவன் கொச்சுண்ணிக்கு காலைச் சாயாவும் நாஸ்தாவும் செய்து கொடுத்து அவனை வேலைமேல் அனுப்பி வைப்பாள். மாண்புமிகு கொச்சுண்ணி சார், பல்வேறு வியாபாரங்களிலும் புகுந்து பார்த்தவர். இப்போது கயிற்றுத் தொழிலில் இறங்கியுள்ளார். அந்தி சாயும் நேரத்தில்தான் வீடு திரும்புவார்.

கொச்சுண்ணி புறப்பட்டுப்போன கையோடு பாத்திரங்களையெல்லாம் தேய்த்து அழகாகக் கவிழ்த்து வைத்த பிறகு, தனது பெண் கதீஜாவையும் கூட்டிக்கொண்டு பாத்தும்மா நேராக இங்கு வருவாள். படா ஸ்டைலாகத்தான் வருவாள். அவளது பின்னால் ஒரு வாலு மாதிரி கதீஜா ! ஏதோ கனவுலகில் சஞ்சரிப்பதுபோல இருக்கும் அவளது நடை. ஆனால் வீட்டை அடைந்தவுடனேயே பாவனைகளனைத்தும் மாறிவிடும். குரல் சற்றே உயரும். அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. உம்மாவின் மூத்த பெண்ணல்லவா ? அதனால் கொஞ்சம் கூடுதல் செல்வாக்கு இருக்கத்தானே செய்யும் !

பாத்தும்மா உள்ளே நுழைந்ததும் நான் எனது காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டேன். பாத்தும்மாவுடைய ஆடு இருக்கிறது. உம்மா இருக்கிறாள். சகோதரர்களின் மனைவிமார் இருக்கிறார்கள். வேறு என்ன வேண்டும் ? உள்ளே என்ன நடக்கும் ?

பாத்தும்மா உள்ளே சென்று தங்கையுடனும் உம்மாவுடனும் அண்ணிமாருடனும் ஓரளவு அதிகாரத்துடன் வினவினாள் :

"என் ஆட்டுக்கு யாராச்சும் கஞ்சித் தண்ணி கொடுத்தீங்களா ?"

உம்மா சொன்னாள் : "போடீ போ, நீயும் உன் ஆடும் ! எங்களுக்கு ஏகப்பட்ட வேலை கிடக்குது !"

பாத்தும்மா வீட்டு மருமகள்களிடம் எதெதையோ கேட்டாள் ; தங்கையிடம் கடுகடுத்தாள் : "உன்னே எனக்கு நல்லா தெரியும்டீ." இதற்கு ஆனும்மா என்ன பதில் சொன்னாள் என்பது தெரியவில்லை. ஆனால் பாத்தும்மா உம்மாவிடம் தன்னுடைய சிரமங்களையெல்லாம் கூறி முறையிடத் தொடங்கினாள். சிரமங்கள் சற்றுக் கூடுதல்தாம் ! பிறகு நிஷ்டூரத்துடன் சொன்னாள் : "நீங்க யாரும் எதுவும் செய்ய வேண்டாம். என் ஆடு பெறட்டும். அப்பறம் பாருங்க !"

பாத்தும்மாவுடைய ஆடு பிரசவிச்சதும், அவள் எதைச் செய்து காட்டப் போகிறாள் ?...

சாம்ப மரம் காய்களால் குலுங்கிய வண்ணம் அழகுறக் காட்சியளித்தது. நான் அதைக் கண்டு ரசித்தவாறே ஈஸிச் சேரில் மேற்குத் திசையில் சாய்ந்து கிடக்கும்போது "ம்யாவ் ம்யாவ்" என்று கத்திய வண்ணம், வீட்டில் அடைக்கலமாகியுள்ள பூனைகள் என்னருகே வந்தன. இதில் ஒன்று தாவி ஏறி என் மடியில் அமர்ந்து கொண்டது. அது ஒன்றும் அவ்வளவு சுத்தமானதாக இருக்கவில்லை.

அது ஏன் என் மடியைத் தேடிவந்து உட்கார்ந்து கொள்கிறது ? முன்னே பின்னே பரிச்சயம் கூடக் கிடையாது. இருந்தாலும் என்னிடம் அன்பு ஏற்பட்டுவிட்டது போலும் ! சரி இருக்கட்டும்... இப்படியமர்ந்தவாறு நான் சாலையைப் பார்த்துக் கொண்டிருக்கையில் நிறையப் பெண்கள் போவது தெரிந்தது. அவர்கள் எல்லோருமே ஹைஸ்கூல் மாணவிகள். ஆமாம் ! அவர்கள் எல்லோரும் ஏன் என்னையே பார்க்கிறார்கள் ? என்னவாக இருக்கும் ?

பாத்தும்மாவின் ஆட்டின் முதுகில் ஒரு காக்காய் வந்து அமர்ந்தது. அதைச் சுமந்தவண்ணம் ஆடு என் முன்னால் வந்து நின்றது. "பார்த்ததாக நினைவில்லையே" என்கிற மாதிரி, காக்கை என்னைச் சற்றே சரிந்து ஓரக்கண்ணால் பார்த்தது.

அருகே சிமெண்ட் திண்ணையிலிருந்து சில கோழிகள் எதையெல்லாமோ கொத்திக் கொண்டிருந்தன. காக்காய், கோழிக் கும்பலுக்கிடையே பறந்து சென்று, ஒரு மூலையில் அமர்ந்து கொண்டது. 'இங்கு, இதற்கு என்ன உரிமை ?' என்கிற மாதிரி

கோழிகள், காக்கையை நோக்கின; ஆனால் காக்கை அதைத் துளியும் சட்டை செய்யவே இல்லை. 'இங்கு எனக்கில்லாத உரிமையா?' என்னும் பாவனையில் காக்கையும் கொத்திப் பொறுக்க ஆரம்பித்தது.

இந்தக் கூட்டத்துக்கு ஒரு வெள்ளைப் பூனையும் வந்து சேர்ந்தது. அந்தக் கும்பலில் இருந்த கருங்கோழிக்கு, அது அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அது பூனையின் தலையில் ஒரு கொத்து கொத்திற்று. பூனை சீறியதே பார்க்கலாம். பிறகு வாலை உயரத் தூக்கி உரோமங்களைச் சிலிர்த்தவாறு,

"இந்த வீட்டில் எனக்கு உரிமை இருக்கிறதா இல்லையா என்பதை இதோ காட்டுகிறேன் பார்! சொரணை கொஞ்சமாவது இருக்கிறது என்றால் எங்கே நீ மறுபடியும் கொத்து பார்க்கலாம்" என்ற தோரணையில் நின்று நோக்கிற்று.

"உம்மா பாத்தீங்களா?" என்று பெருங் குரலெழுப்பிக்கொண்டே என் கடைசித் தம்பியான அபூபக்கர், சலவை செய்து இஸ்திரி மடிப்புக் கலையாத உடைகளுடனும், படிய வாரி மினுமினுக்கும் தலையுடனும் 'கிறீச் கிறீச்' என்று சத்தமிடும் செருப்புக்களுடனும் இந்தச் சதஸுக்குள் பிரவேசித்தான். அவன் வெறும் அபுவாகத் தான் சுற்றிக் கொண்டிருந்தான். 'ஐயா ஒரு டம்பாச்சாரி' என்ற பேச்சும் அடிபட்டு வந்தது. ஒரு நாளைக்கு இரண்டு முறை உடை மாற்றுவான். அவனிடம் 60 ஜோடி செருப்புக்கள் இருக்கின்றன என்று உம்மா சொல்லியிருக்கிறாள். ஒல்லியாக வெடவெடவென இருப்பான். ஆயினும் குரல் மட்டும் இடி முழக்கம் செய்வதுபோல இருக்கும். மகா ரோஷக்காரன். நான் இங்கு வந்ததும் அவனை எனது அறையிலிருந்து வெளியேற்றினேன். எனக்கென்றிருந்த அறையிலே, ஐயா, சர்வாதிகாரியாக செங்கோலோச்சி வந்தான். எனது வாப்பா இந்த வீட்டைக் கட்டும்போதே நானும் அப்துல் காதரும் படிப்பதற்காகவே இதனை, ஒரு ஒதுக்குப்புறமாகக் கட்டுவித்திருந்தார். அப்போதே நான் அப்துல் காதரை, அந்த அறையிலிருந்து வெளியே அனுப்பிவிட்டேன். அவன் அதற்குப் பிறகு உம்மாவின் அருகிலேயே படுத்துறங்க ஆரம்பித்தான். இப்போது அவன் தலை முழுவதும் நரைத்துப் போய்விட்டது. பார்த்தால் எனக்கு அவன் அண்ணன் என்றே எண்ணத் தோன்றும். எனது இந்தப் பழைய அறைக்கு இணையாக மற்றொரு அறையை, அவன் இப்போது வீட்டின் மற்றொரு புறத்தில் கட்டியிருக்கிறான். இந்த அறையைத் தான் ஹனீஃபாவும் அவன் பெண்டாட்டி பிள்ளைகளும்

இரவு படுக்கப் பயன்படுத்தி வந்தார்கள். அபுவை நான் எனது அறையிலிருந்து வெளியேற்றியதும் அவன் தனது பெட்டிகள், புத்தகங்கள், விளக்கு, படுக்கை சகிதமாக ஹனீஃபாவுடைய அறைக்குத்தான் குடி போனான். அபுவின் குரல் கேட்டதோ இல்லையோ பூனைகள் ஓட்டம் பிடித்தன; காகங்கள் பறந்தன; கோழிகள் சிதறி மூலைக்கொன்றாகப் பாய்ந்து ஓடின. பாத்தும்மாவுடைய ஆடு, உட்புறம் பெண்களுக்கருகே ஓடியது; குழந்தைகள் அழுகையை நிறுத்தின. பருந்துகளும் கழுகுகளும் மூச்சுப் பேச்சற்று எங்கோ மறைந்து ஒளிந்துகொண்டன. பெண்களின் ஊர் வம்பும் திடீரென ஓய்ந்தது. வீடே நிசப்தமாகிவிட்டது. அபுவுடைய குரல் மேலும் உயர்ந்தது :

" பெரிய காக்கா இதையெல்லாம் ஏன் அனுமதிக்கிறீங்க? பூனை குழந்தீங்க கோழி காக்கா ஆடு! ஆட்டுக்குத் தீனி போட்டு ஊட்டி வளர்க்க நல்ல இடம் பாத்தாங்க! எல்லாத்துக்கும் நான் ஒரு முடிவு கட்டறேன் பாருங்க—உம்மா, அந்தத் தடிக் கம்பையும் என் உண்டி வில்லையும் இங்கே எடுத்திட்டு வாங்க!"

பாத்தும்மா இதைக் கேட்டதும் துயரத்தோடு கூறுவது கேட்டது: " கதீஜா, நம்ம ஆட்டைக் கூப்பிடு. நமக்கு இந்த வீட்டிலே உரிமை ஏதும் இல்லேன்னு நல்லா புரிஞ்சு போச்சு. வா, போகலாம்— அம்மா! நாங்க போறோம்."

அபு கத்தினான் : " எனக்கும் இந்த வீட்டிலே ஏதாச்சும் உரிமை இருக்கறதா இல்லையாங்கிறதை நானும் பாத்திடறேன். ஹனீஃபாவையும் அவன் பெண்டாட்டி புள்ளேங்களையும் அந்த அறையிலேந்து வெளியேத்தறதுதான், இன்னிக்கு என்னோட முதல் வேலை!"

நானும் இரைந்தேன் : " அடே முந்திரிக் கொட்டை! இந்த வீட்டிலே இனிமே உன் குரல் கேக்கவே கூடாது, கேட்டுது அவ்வளவுதான். உன் எலும்புகளையெல்லாம் நொறுக்கிப் போட்டுடுவேன் ஆமாம்! ஜாக்கிரதை! பாக்கறதுக்கு என்னமோ நோஞ்சானாட்டம் இருக்கறான், கூச்சல் போடறதைப் பாரு! அடே அபு, வெளியே போகச் சொன்னா, ஹனீஃபாவும் குடும்பமும் எங்கேடா போய் இருப்பாங்க?"

அபு மெள்ளச் சொன்னான் : " ஹனீஃபா காக்கா, தன்னோடு எஸ்டேட்லே ஒரு வீட்டைக் கட்டிக்கிட்டுப் போய் இருக்கட்டுமே!"

ரொம்ப சரி! அப்படி ஒரு பேச்சும் அடிபட்டுக் கொண்டுதான் இருக்கிறது. வீடு கட்டும் விஷயமாக ஹனீஃபா என்னிடமும்

குறிப்பிட்டிருக்கிருன். இரண்டு மைல் தொலைவில், குன்றின் அடிவாரத்தில் ரோடின் அருகில், ஒரு எண்பது சென்ட் நிலம் அவன் வாங்கிப் போட்டிருக்கிருன். அதில் இப்போது நேந்திரம் வாழையும் மாமரங்களும் கொண்ட தோட்டம் போட்டிருக்கிருன். அங்கே ஒரு வீடு கட்ட வேண்டும். அதற்குத் தேவையான உபகரணங்களையும் மற்ற உதவிகளையும் அவன் என்னிடமிருந்து எதிர்பார்க்கிருன். தன்னிடம் சல்லிக்காசு கிடையாது என்றும் அவன் என்னிடம் சொல்லியிருக்கிருன். அவன் வெள்ளி முளைக்கும்போதே 4 மணிக்கு எழுந்து, தினசரி நடந்துபோய் வாழைக்கும் மற்றவற்றுக்கும் தண்ணீர் பாய்ச்சிய பிறகு, 7 மணிக்கு வீடு திரும்புவான். பிறகு அபியையும் லைலாவையும் கூட்டிக்கொண்டு ஆற்றுக்குக் குளிக்கப் போவான். அப்பாவும் பிள்ளைகளும் மிகவும் அன்யோன்யமாக இருப்பார்கள். அவர்களது மனையில் வீடு கட்டியதும் என்னையும் அவர்களுடன் கூட அழைத்துக்கொண்டு போவதாக லைலாவும் அபியும் சொல்லியிருக்கிருர்கள். அதுபோலவே ஆனும்மாவின் பிள்ளை ஸயிது முகம்மதும், என்னிடம் சொல்லி வைத்திருக்கிருன். அவனும் அவன் உம்மாவும் வாப்பா சுலைமானும் வசிப்பதற்கென, இந்த வீட்டுக்கு அருகாமையிலுள்ள தோப்பில் ஒரு வீடு கட்டிக் கொண்டிருக்கிருர்கள். மர வேலைகளெல்லாம் அநேகமாகப் பூர்த்தியாகிவிட்டன. செங்கற்களும் மற்ற சாமக்ரியைகளும்கூட வந்து சேர்ந்துவிட்டன. ஹனீஃபாவுக்கு இன்னமும் இதொன்றும் முடிந்தபாடில்லை.

நான் சொன்னேன்: "அடே அபு, ஹனீஃபாகிட்டே பணம் ஏதும் இல்லேன்னு தோணுது!"

அபு மெள்ளச் சொன்ஞன்: "ஹனீஃபா அண்ணன் பெரிய கஞ்சன். நிறைப் பணம் வச்சுக்கிட்டு இருக்காரு!"

"போடா உனக்கு வேறே வேலை இல்லை."

அவன் ரப்பர் உண்டி வில், உருண்டைக் கற்கள் சகிதமாய்ப் பறவைகளை அடித்து வீழ்த்தப் போஞன்.

"ஆடே, வா. அவன் உன்னை ஒண்ணும் செய்ய மாட்டான்" என்று ஆட்டுக்கு அபயம் அளித்தவாறே, பாத்தும்மா இந்தப் பக்கம் வந்தாள். அபு தோட்டத்தில் அருகேயே நின்றுகொண்டிருப்பதைக் கண்டதும் அவனைக் கூப்பிட்டு,

"அடே அபு, நீ அடங்கி ஒதுங்கி வாழக் கத்துக்க, அது போதும். பெரிய அண்ணன் வந்திருக்கறதைப் பாத்தே இல்லே?"

"பாத்தீங்களா பெரிய அண்ணா, என்னெ, 'அடே அபுன்னு' பெரிய அக்கா கூப்பிட்றதை? உம்! பெரிய அண்ணன் வந்திருக்கற தைரியம் அவங்களை இப்படிப் பேசச் சொல்லுது!"

அபுவினை அடுத்த அக்காளின் அண்ணானை ஹனீஃபாவுக்கும் அக்கா பாத்தும்மா. அவனைவிட எவ்வளவு பெரியவள். அவள் அவனை 'அடே அபு' என்று கூப்பிட்டது அவமானமாகப் போய் விட்டது அவனுக்கு!

"ஓஹோ, அப்படியானா உன்னை இனிமே நாங்க 'அபு ஸாஹெப்'ன்னு கூப்பிடறோம்! பெரிய இவரு! சரித்தான் போடா துப்புக்கெட்டவனே!" என்று நான் சொன்னேன்.

அவன் போனதும், பாத்தும்மா என் அருகே வந்தாள். பிறகு சுற்றுமுற்றும் பார்த்தாள்; யாருமில்லை. அவள் என்னிடம் ரகசியமாகச் சொன்னாள்: "பெரிய காக்கா! யாருக்கும் தெரிய வேணாம். குறிப்பா ஆனும்மாக்குத் தெரிஞ்சுதோ போச்சு. சண்டைதான். எனக்கு நீங்க பணமா எதுவுமே தர வேணாம். கதீஜாவுக்கு இரண்டு கம்மல் செய்து கொடுத்தாப் போதும்—ஹனீஃபாக்கும் இது தெரிய வேணாம். உம்மாவுக்கு, மூச்! தெரியவே கூடாது என்ன?"

நான் மெள்ளக் கேட்டேன்: "கம்மல் வெள்ளிலே இருக்கணுமா? இல்லே தங்கத்திலயா?"

பாத்தும்மா இங்குமங்கும் கண்களைச் சுழலவிட்டவாறு,

"பொன்னால் செய்ததுதான் வேணும். ஆனா, பெரிய காக்கா, இதை யார் கிட்டயும் சொல்லிட மாட்டீங்களே?"

"சே சே! பரம ரகசியமா இருக்கும்."

இந்த விதமாக நான் பாத்தும்மாவுடன் ஒரு ரகஸ்ய ஏற்பாட்டைச் செய்து கொண்டேன்.

"கம்மல் கொஞ்சம் சீக்கரமாகவே கிடைச்சாத் தேவலை"—பாத்தும்மா சொன்னாள்.

"பார்ப்போம்" என்றேன் நான்.

இக்கம்மல் விஷயம், ஒரு அவசரப் பிரச்சினையாக எழுவதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. நான் இங்கு வந்தவுடனே எர்ணாகுளத்திலிருந்து 3 சிறிய குடைகளை வரவழைத்திருந்தேன். அவற்றை அப்துல் காதரின் பெண் பாத்துக்குட்டிக்கும் ஹனீஃபாவுடைய மகன் அபிக்கும், ஆனும்மாவின் மகனான ஸயிது முகம்மதுக்குமாக ஆளுக்கு ஒன்று என்ற கணக்கில் கொடுத்தேன். ஆனால் பாத்தும்மாவுடைய மகள் கதீஜாவுக்குக் குடை கொடுக்கவில்லை! பாத்துக்குட்டியும் அபியும் ஸயிது முகம்மதும் கதீஜாவும் அநேக ஒத்த

வயதுடையவர்கள். விஷமத்திலும் கூச்சலிலும் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்லர்; அழுவதிலும் அப்படியே. இருந்தும் கதீஜாவுக்குக் குடை கொடுக்கப்படவில்லை! என்ன காரணம்? உண்மை என்னவென்றால், நான் அந்த விஷயத்தை அடியோடு மறந்துபோய் விட்டேன். பரவாயில்லை. அவளுக்குத்தான் தங்கத்தால் செய்த இரண்டு கம்மல்கள் கிடைக்கப் போகின்றனவே!

பாத்தும்மா உள்ளே போய் வீட்டு வேலைகளில் முனைந்திருந்த சமயம் பார்த்து, ஆனும்மா மெதுவாக என்னருகே வந்தாள். அவள் கர்ப்பமாக இருந்தாள். பாத்தும்மா பள்ளிக்கூடம் போனவள் அல்ல. ஆனால் ஆனும்மா ஸ்கூலுக்குச் சென்று கல்வி கற்றவள். அதனால் இவளது உரையாடல் பாத்தும்மாவுடையது மாதிரி அல்ல. ஆனும்மா மெதுவாகச் சொன்னாள் :

"பெரிய காக்கா, எனக்கு நீங்க, இனிமே பணமா எதுவும் தர வேணும். பாத்திரங்க வாங்கித் தந்தாப் போதும். அதுக்கும்கூட இப்போ ஒண்ணும் அவசரம் இல்லே; நாங்க புது வீட்டுக்குக் குடி போனப்பறம் தந்தாப் போதும். இந்த விஷயத்தை அக்காகிட்டச் சொல்லிடாதீங்க என்ன?"

அதாவது சுருக்கமாகச் சொன்னால் பாத்தும்மாவுக்கு இது தெரியக் கூடாது; அவ்வளவுதான். தெரிந்தால் அவள் என்ன சொல்லுவாள் தெரியுமா?

"போதுமடி உன் திருட்டுத்தனம்! நீ படிச்சுக் கிழிச்சவ இல்லே? நான் இல்லாத சமயம் பாத்து பெரிய காக்காகிட்டேந்து எல்லாத்தையும் கறந்துகிட்டே இல்லே?"

—இந்தப் பாத்திர விஷயம் காதோடு காதாக ரகஸ்யமாக வைத்திருக்கப்பட வேண்டியதற்கான காரணம் இதுதான்! ஆனும்மாவுக்குப் பாத்திரங்களை வாங்கித் தருவது, அந்த விஷயத்தை ரகஸ்யமாகவே வைத்திருப்பது, என்னும் நிபந்தனைகளுக்கு நான் உடன்பட்டேன்.

இப்படியாக அமைதிச் சூழ்நிலைக்கு வழிசெய்த திருப்தியோடு நான் இருக்கையில், எங்கிருந்தோ ஒரு கூச்சல்: "உள்ளாடத்திப் பாறு, உள்ளாடத்திப்பாறு, உன்னை நான் கூட்டிக்கிட்டுப் போமாட்டேன்."

லைலாவுடைய குரல்தான் அது. அவள் யாரை இப்படிக் கூப்பிடுகிறாள்? வெகு நேரம் குழம்பிக் கொண்டிருக்கும்படியான அவசியம் ஏற்படவில்லை. அவமானம் தாளாமல், அழுது சிவந்த கண்களோடு ஸையது முகம்மது என் முன்னால் ஓடி வந்தான். அவன் பிறந்த

மேனியஞக இருந்தான். அவன் கோபத்தோடு சொன்ஞன்: "பெரிய மாமா, லேலாம்மா என்னை உள்ளாடத்திப்பாறுன்னு கூப்பிடறு!"

என்னது! ஒரு ஆணைப் பார்த்து 'உள்ளாடத்திப்பாறு'ன்னு கூப்பிடுவதா? அதுவும் ஒரு பொண்ணு!

"அந்தத் தடிக்கம்பை எடுத்துக்கிட்டு வாடா!"

ஸையிது முகம்மது கம்பை எடுத்து வர ஓடிஞன்.

நான் கூப்பிட்டேன்: "அடீ லேலா, இங்க வா!"

அவள் வந்தாள்—அவளும் அம்மணக்கட்டைதான். ஸையிது முகம்மது கம்புடன் வருவது கண்டு அவள் சொன்ஞள்: "பெரியப்பாவைக் கூட்டிக்கிட்டு போமாட்டேன்."

"வேண்டாண்டி" என்று சொல்லியவாறே ஸயிது முகம்மதிடமிருந்து கம்பை என் கையில் வாங்கிக் கொண்டேன். லேலா உச்சஸ்தாயியில் அழத் துவங்கிஞள்:

"அம்மச்சி, அம்மச்சி."

லேலா தன் அம்மாவை 'அம்மச்சி' என்றுதான் கூப்பிடுவாள்.

நான் சொன்னேன்: "நீ உன் அம்மச்சியேக் கூப்பிடு, உன் வாப்பாவைக் கூப்பிடு, உன் உப்புப்பா (தாத்தா)வையும் கூப்பிடு. இவங்க எல்லாரையும் நான் அடிப்பேன்!"

உப்புப்பா என்ருல் லேலாவின் உம்மாவுடைய வாப்பா. இவர், ஹனீஃபாவுடைய வாழைத் தோட்டத்துக்கு அருகேதான் வசித்து வருகிருர். அந்தப் பக்கத்தில் எங்கோ ஒரு இடத்தில், ரயில் நிலையம் ஒன்றைக் கட்டுவதாக உள்ளனர். அப்போது நிலத்துக்கு நல்ல விலை கிடைக்கும். அதோடு அந்தப் பகுதி முழுவதுமே வசதிகள் பெற்று முன்னேற்றம் அடைந்துவிடும். இதையெல்லாம் முன் கூட்டியே யோசித்த பிறகுதான் லேலாவுடைய உப்புப்பா ஹனீஃபாவைக் கொண்டு, அந்த இடத்தை வாங்கும்படிச் செய்திருக்கிருர்.

லேலா சொன்ஞள்: "அம்மச்சியே அடிக்க வேணும், அப்பாவையும் அடிக்க வேணும். என் உப்புப்பாவையும் அடிக்க வேணும்."

"அப்படியாஞ இனிமே நீ யாரையும் 'உள்ளாடத்திப்பாறு'ன்னு கூப்பிடக் கூடாது என்ன?"

"கூப்பிட மாட்டேன்."

"உங்கப்பா வீடு கட்டிஞருன்ஞ ஸயிது முகம்மதைக் கூட்டிக்கிட்டுப் போவியா? பெரியப்பாவைக் கூட்டிக்கிட்டு போவியா?"

அவள் கண்ணீரும் கம்பலையுமாகச் சொன்ஞள்: "எல்லாரையும் கூட்டிட்டு போறேன்."

அப்பாடா ! ஒரு வழியாக ஒரு வழக்கைத் தீர்த்து வைத்தேன். நஷ்ட ஈடாக இரண்டு மிட்டாய்களையும் 'ஞாலிப்பூவன்' பழத்தில் ஒன்றையும், ஸயிது முகம்மதுக்குக் கொடுத்தேன். நேந்திரம் பழம், தக்காளி, கண்ணன் பழம் (வாழைப் பழத்தில் ஒருவகை), அன்ஞசிப் பழம், ஞாலிப்பூவன், மிட்டாய்—இதெல்லாம் எப்போதுமே என்னிடம் கையிருப்பில் இருக்கும். இவற்றில் மிட்டாய்கள் மட்டுமே நான் காசு கொடுத்து வாங்கியவை; அதுவும் குழந்தைகளின் அழுகையை நிறுத்துவதற்காகவே இவற்றை வாங்கி வைப்பேன். எனது தம்பிமாரும் கொச்சுண்ணியும் சுலைமானும் மற்றவற்றை வாங்கித் தருவார்கள். ஆரோக்யத்துக்காக நான் நிறைய பழங்கள் தின்ன வேண்டியது அவசியமாக இருந்தது. அவற்றையெல்லாம் முன்பு நான் மேசையின் மேலேயே வைத்திருப்பது வழக்கம். ஒரு நாள், ஸயிது முகம்மது பெட்டிமீது ஏறி நின்றவாறு, இவற்றை எம்பி எடுத்துத் திருடித் தின்றுகொண்டிருப்பதை நான் பார்த்துவிட்டேன். கையும் களவுமாகப் பிடிபட்டுவிட்டதில் ஸயிது முகம்மதுக்கு மிகுந்த துக்கமேற்பட்டுவிட்டது. அவன் குமுறி அழுதான். அவன் மீண்டும் இம்மாதிரி அழுவதற்கு ஒரு வாய்ப்புத் தரலாகாது என்பதற்காக, இப்போதெல்லாம் நான் பழங்களைப் பெட்டிக்குள் வைத்து பத்திரப் படுத்தி வருகிறேன். ஸயிது முகம்மது, மிட்டாயையும் பழத்தையும் தின்பது கண்டு லைலாவுக்கு அழுகை அழுகையாக வந்தது. அவளுக்கும் இரண்டு மிட்டாய்களும் ஒரு பழமும் கொடுத்தேன். மோப்பம் பிடித்து வந்த ஆரிஃபாவுக்கும் இதுபோலவே கொடுத் தேன். ஆளுக்கு இரண்டு வீதம் சுபைதாவுக்கும் ரஷீதுக்கும் கூட மிட்டாய்களைக் கொடுத்து அனுப்பினேன். பிறகு ஆனும்மாவை விட்டு, ஒரு கோப்பைச் சாயா வரவழைத்துத் தருமாறு செய்து, ஒரு பீடியையும் புகைத்தவாறு, நிம்மதியாகச் சாய்வு நாற்காலியில் கிடந்தேன்.

அப்போது என் உம்மா என்னருகே வந்தாள். கிழவிக்கு வயது அறுபத்தியேழோ எழுபத்தியேழோ இருக்கலாம். இன்னும் ஒரு பல் கூட விழவில்லை. விடியற்காலை 4 மணிக்கு எழுந்துவிடுவாள்; பிறகு வாய்க்கால்களில் ஊறப் போட்டிருக்கும் தென்னை ஓலைகளை எடுத்து வந்து முடைவாள். அப்புறம் அவற்றையெல்லாம் முற்றத்தில் பிரப்பம் பாய்களில் பரப்பி உலர வைப்பாள். ஆதவன் உதிக்கையிலேயே அவை உலர ஆரம்பிக்கட்டுமே! அதன் பிறகு வீட்டுக்குத் தேவை யான தண்ணீரை இழுத்து நிரப்புவாள். இரண்டு கைகளிலுமே ஒவ்வொரு பெரிய குடமாகத் தூக்கி வருவாள். பாத்தும்மா ஆனும்மா

ஐசோம்மா குஞ்ஞானும்மா எல்லோரையும் அதட்டி உருட்டியும், கூச்சலிட்டும் வேலை வாங்குவாள். இரவு 10 மணிவரை, ஓய்ச்ச லில்லாதபடி வேலை இருந்துகொண்டே யிருக்கும்.

பாத்தும்மா எல்லா இரவுகளும் இங்கு தங்குவது கிடையாதுதான். ஆயினும் மூன்று பெண்கள் வீட்டில் இருக்கிறார்களே; அம்மா எதற்காக உழைத்துச் சிரமப்பட வேண்டும்? வெறுமே ஓய்வு எடுத்துக்கொண்டு இருக்கக்கூடாது? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் உம்மாவிடம் பதில்கள் தயாராகவே இருக்கும். "இவங்களுக் கெல்லாம் ஒண்ணுந் தெரியாது. வீட்டை நிர்வாகம் பண்ண இவங் களுக்கு சாமர்த்தியமே போதாது; அதை அவங்க கத்துக்கிடலே." ரொம்ப சரி. அவங்க அதையெல்லாம் கத்துக்கட்டும்! பொறுப்பை அவங்க கையிலே ஒப்படைச்சிட்டு நிம்மதியா இருக்கக்கூடாது? அப்போதும் பதில் தயார்தான். "உனக்கு வீட்டைப் பத்தி என்ன தெரியும்? ஒண்டிக்கட்டை, மூணுசாண் வயிறு."

இதிலும் நான் தோற்றுப் பின்வாங்கவில்லையென்றால் உம்மா சொல்லுவாள்: "அவுங்களுக்கெல்லாம் புள்ளெங்க இல்லே? அவங்களை யாரு பாத்துப்பாங்க?"

நான் சொல்வேன்: "ஏன்? ஒருத்தி குழந்தைங்களை பாத்துக் கறது. மத்தவங்க சோலி பாக்கறது."

"இத பாரு, உனக்கென்ன, நீ எது வேணு பேசலாம். ஒத்தக் கட்டை, முச்சாண் வயிறு. ஆமாம், எனக்குக் கொஞ்சம் பணம் குடேன்."

எங்களுடைய உரையாடல் எப்போதும் இறுதியில் இந்தப் பண விஷயத்தில்தான் வந்து நிற்கும். எனது ஆரோக்கியத்துக்கு அது அவ்வளவு நல்லதுமல்ல. ஆகையால் உம்மா, எதைச் சுமந்தாலும் சரி, எதையாவது இழுத்துக்கொண்டு போவதைப் பார்த்தாலும் சரி, நான் கண்டும் காணாததுபோல கம்மென்று இருந்து விடுவேன். அம்மா பணம் கேட்கும்படியான ஒரு நிலையை ஏன் வீணாக உண்டு பண்ணணும்?

உம்மா வந்துகொண்டே மெள்ளக் கேட்டாள்: "அடே, எனக்கு ஒரு பத்து ரூபா கொடு."

உம்மாவுக்கு உபதேசம் ஏதும் செய்ய ஆரம்பித்து, அதன் வாயி லாகத் துவங்கும் எங்களது உரையாடல், இறுதியில் பணம் கேட்பதில் வந்து நிற்கும்படியான தவறு எதையும், இப்போது, நாம் செய்யவில்லையே? என்ற பாவனையில் நான் உம்மாவைப் பார்த்தேன்.

உம்மா மெதுவான குரலில் தொடர்ந்தாள்: "அப்துல் காதருக்குத்

தெரிய வேணும். ஹனிஃபாவுக்கும் தெரிய வேணும். ஆனும்மாவும் பாத்தும்மாவும் கூட அறிய வேணும். ''

நான் மிகமிக ரகஸ்யமாகக் கேட்டேன் : '' குஞ்ஞானும்மாவும் ஐசோம்மாவும் தெரிந்துகொள்வதில் தடையில்லையே ? ''

உம்மா பொய்க் கோபத்துடன் சொன்னுள் : '' இதபாரு கொடுக்கற துன்னு கொடு. யாருக்கும் தெரிய வேணும். ''

நானும் கொஞ்சம் கோபித்துக்கொண்டே கேட்டேன் : '' நான் இங்கே வந்த பிற்பாடு எத்தனை ரூபா கொடுத்திருக்கறேன் இந்த வீட்டிலே ? பகிரங்கமாயும் ரகஸ்யமாயும் நீங்களே எத்தனை ரூபா வாங்கிட்டு போயிருக்கீங்க ? ''

உம்மா ரகஸ்யமாகச் சொன்னுள் : '' நீ எதுவுமே தரலைன்னு நான் சொல்லலையே ? இப்ப எனக்கு ஒரு பத்து ரூபா வேணும். அவ்வளவு தான் ! ''

'' நான் கொடுத்த பணமெல்லாம் எங்கே போயிடுச்சு ? அதிக நாள் கூட ஆகலியே. கொஞ்ச நாள் முந்தித்தானே கொடுத்தேன் ? எங்கே அந்த ரூபாயெல்லாம் ? ''

உம்மா மிகமிக மெதுவாகச் சொன்னுள் : ''இந்தா மெள்ளப் பேசு! எல்லாத்தையும் அப்துல் காதர் வாங்கிட்டுப் போறான். ''

'' அவனுக்குன்னு தனியா நான் ரூபாய் கொடுத்திருந்தேனே ? நொண்டி ! அவன் இங்கே வரட்டும் சொல்றேன். ''

சின்ன வயதில் அப்துல் காதருக்கு முடக்குவாதம் வந்தது. வாப்பா ஆயிரக்கணக்கில் பணத்தை வாரியிறைத்து வைத்தியம் பார்த்தார். இறுதியில் காலில் ஒரு ஊனத்தோடு வியாதி குணமா யிற்று. வலது கால் மட்டும் சூம்பி இருக்கும். மற்றபடி அவன் பயில்வானுகவே இருந்தான். இரும்புக் கழியை ஊன்றியவாறுதான் அவன் நடப்பான்.

உம்மா மெள்ளச் சொன்னுள் : '' அவனை எதுவும் கேக்கவேணும். இந்தத் தோப்பு துறவுங்களையும் வீட்டு நிர்வாகத்தையும் அவன் தானே கவனிச்சுக்கிட்டு வர்ரான் ? அவன் இல்லேன்னு அப்பத் தெரியும் சங்கதி ! உனக்கென்ன, ஒண்டிக்கட்டை. முச்சாண் வயிறும் தானுமா நீ ஊர் சுத்தப்போனே. கண்டகண்ட எடங்களுக் கெல்லாம் போயி, நீ எத்தனை ரூபா செலவழிச்சே ? ''

'' அதுக்குத்தான் பரிகாரம் செய்துட்டேனே ! இங்கே நானும் நிறையப் பணம் செலவழிச்சிருக்கேன். ''

'' மெள்ளப் பேசேன். இல்லேன்னு இங்கே யாரும் சொல்லலை. சரி சரி, காதும் காதும் வெச்சாப்பலே எனக்கு நீ ஒரு பத்துரூபா கொடு. ''

" இதுக்கு முன்னலே, யாருக்கும் தெரியாம, நான் உங்ககிட்ட தந்த பணத்தையெல்லாம் அப்துல் காதர் எப்படி வாங்கிக்கிட்டான்? இந்த ரகஸியம் அவனுக்கு மட்டும் எப்படித் தெரிஞ்சுது ? "

" மெள்ளமாப் பேசு. அபியும் பாத்துக்குட்டியும் போய் சொல்லிக் கொடுத்திருக்காங்க. "

நான் மிகவும் தாழ்ந்த குரலில் சொன்னேன் : " உம்மா, உங்க கிட்ட நான் ஒரு ரகஸியம் சொல்லப் போறேன். ஆனா, இதெ நீங்க யாருகிட்டேயும் போயி சொல்லி வைக்காதீங்க. என்கிட்ட இப்ப, ஆகமொத்தம் ஒரே ஒரு அஞ்சு ரூபா நோட்டு இருக்குது, அவ்வளவு தான். வேறே தம்படிக் காசு கிடையாது ! "

உம்மா உடனே சொன்னள் : " அதை இப்படி எடு. "

நான் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, அறைக்குள்ளே சென்று ஐந்து ரூபாய் நோட்டையும் ஒரு நேந்திரம் பழத்தையும் எடுத்து வந்தேன். பழத்தின் வாசனையை மோப்பம் பிடித்துவிட்ட பாத்தும்மாவுடைய ஆடு, என் முன்னல் ஆஜராகியது. பழத்தை தோலுரித்துவிட்டு நான் தின்றேன். நான் எதையோ தின்றுகொண்டிருப்பதைக் கண்டு, உம்மாவின் அபயத்துக்குப் பாத்திரமாகியுள்ள பூனைகள் வந்து சேர்ந்தன. உம்மாவின் மேற்பார்வையில் வளர்ந்துவரும் கோழிகளும் வந்தன. நான் பழத்தின் தோலைப் பாத்தும்மாவுடைய ஆட்டுக்குக் கொடுத்தேன். ஆடு மேலும் எதிர்பார்த்து அங்கேயே நின்றுகொண்டிருந்தது. நான் இங்கும் அங்கும் கண்களை ஓட விட்டேன், யாருமில்லை. மனித வாடையே இருக்கவில்லை. கோழி களும் பாத்தும்மாவுடைய ஆடும் பூனைகளும் மட்டுமே காணப் பட்டன. நான் பரம ரகஸியமாக அந்த ஐந்து ரூபாய் நோட்டை, உம்மா மடியில் போட்டேன். உம்மா சுற்றுமுற்றும் பார்த்தாள் ஊஹூம். மனித நெடி மருந்துக்கும் இல்லை. உம்மா அதை நன்ருக மடித்துத் துணியின் ஓரத்தில் முடிந்து ரவிக்கைக்குள்ளாக செருகிக் கொண்டாள். பிறகு ஏதுமே நடவாததுபோல அமர்ந்துகொண் டிருந்தாள். நான் கேட்டேன்.

" உம் ! உம்மா அப்பறம் என்னெல்லாம் விசேஷம் சொல்லுங்க ? "

உம்மா சொன்னள் : " அடே எனக்கோ ரொம்ப வயசாயிடுச்சி. இன்னிக்கோ நாளைக்கோ எப்ப சாவேன்னு தெயரிலை. எனக்கு ஓரே ஒரு ஆசை மட்டும் இருக்குது. உனக்கொரு கல்யாணமாகி உங்கூட எனக்கு இருக்கணும் ! "

நான் இரைந்து கத்தினேன் : " எங்கயாவது போயி அக்கடான்னு நிம்மதியா இருக்கலாம்னு நினைச்சா, விடமாட்டாங்க போலிருக்குதே !

பாத்தும்மா! ஆனும்மா! ஓடிவாங்க! என் பெட்டியையும் படுக்கையையும் எடுங்க சொல்றேன். கூப்பிடுங்க ஒரு கூலியாளை!"

அவர்கள் இருவருமே ஓடிவந்தார்கள். "என்னம்மா இதெல்லாம்?" என்று ஆனும்மா கேட்டாள்.

பாத்தும்மா சொன்னாள்: "பெரிய அண்ணாகிட்டே, உம்மா பணம் ஏதேச்சும் கேட்டிருப்பா!"

நான் உடனே சொன்னேன்: "அதெல்லாம் ஒண்ணுமில்லே." உம்மா எழுந்து உட்புறம் போனாள். "என்னம்மா?" என்று கேட்டவாறு அவர்களும் உம்மாவின் பின்னே சென்றார்கள்.

அப்பாடா! என்று நான் சற்று நிம்மதியோடு உட்கார்ந்து கொண்டேன். மீண்டும் ஆனும்மாவை விட்டு ஒரு சாயா தருவித்துக் குடித்தேன். பிறகு ஒரு பீடியைப் பற்றவைத்துக்கொண்டேன்.

அப்போது பாத்தும்மாவின் ஆடு முற்றத்தில் நின்றவாறு, வராந்தாவில் எனக்கருகே வைக்கப்பட்டிருந்த வத்திப்பெட்டியை, நாக்கை நீட்டி எடுத்துத் தின்ன முயற்சி செய்வதைப் பார்த்தேன். உடனே நான் அதை எடுத்து. தீக்குச்சிகளை எடுத்துவிட்டு காலிப் பெட்டியை அதனிடம் நீட்டினேன்.

பாத்தும்மாவின் ஆடு, அதை நன்றாக ரஸித்துச் சுவைத்துத் தின்றது. அது அங்கிருந்து நகராமல் நின்றுகொண்டிருப்பதைக் கண்டு நான் கூறினேன். "ஏ, அஜசுந்தரி! தீக்குச்சிகள் எனக்குத் தேவையாக இருக்குது. ஆனால் வேறு காலித தீப்பெட்டிங்க எங்கிட்ட நிறைய இருக்குது. தரட்டுமா?"

இந்தச் சமயத்தில் பாத்தும்மா, கொஞ்சம் கஞ்சித்தண்ணீர் கொண்டு வந்து அதற்குக் கொடுத்தாள். நான் அவளிடம் சொன்னேன்: "பாத்தும்மா உன் ஆடு, என் இரண்டு புத்தகங்களைச் சாப்பிட்டிடுச்சு!"

நான் ஏதோ செய்யத் தகாத பெருங்குற்றம் ஒன்றைச் செய்து விட்டதுபோல பாத்தும்மா கூறினாள்: "அப்படியெல்லாம் சொல்லாதீங்க பெரிய காக்கா—என் ஆடு அப்படியெல்லாம் ஒரு நாளும் செய்யாது" என்று கூறிய பிறகு, குரலைத் தாழ்த்தி "கம்மல் விஷயம் என்ன ஆச்சு?" என்றாள்.

நானும் குரலைத் தாழ்த்தி, "நினைவிருக்குது" என்றேன்.

அவள் இன்னும் கொஞ்சம் குரலை அடக்கி, "யாருக்கும் தெரிய வேணாம்" என்று கூறியவாறே பாத்திரமும் கையுமாக உள்ளே சென்றாள்.

ரஷீதும், சுபைதாவும் அழுதுகொண்டிருக்கிறார்கள். இதற்கு அனுதாபம் தெரிவிப்பதுபோல ஆரீஃபாவும் ஸயிது முகம்மதும் லைலாவும் அவர்களுடன் சேர்ந்து அழ ஆரம்பித்துள்ளனர். இடையிடையே லைலா "அம்மச்சியே கூட்டிட்டுப் போமாட்டேன்" என்றும் கூறிக் கொண்டிருக்கிறாள். இப்படியிருக்குங்காலை, அபு ஒரு கடிதமும் கையுமாக அங்கே வந்தான். கடிதத்தை என்னிடம் தந்துவிட்டு, ஒரு தடிக்கம்பைக் கையில் எடுத்துக்கொண்டு "என்ன விஷயம்" என்று இரைந்தபடி உள்ளே போனான். உடனே எல்லோரும் அழுகையை நிறுத்தினார்கள். வீடு நிசப்தம்!

நான் கடிதத்தைப் பிரித்துப் படித்தேன். தொலைவில் சென்னையிலிருந்து அக்கடிதம் வந்திருந்தது. "மாண்புமிகு எம். கோவிந்தனுடைய மனைவி டாக்டர் பத்மாவதி அம்மாவுக்கு, ஆண் குழந்தை பிறந்துள்ளது. தாயும் சேயும் நலம்."

தாயும் சேயும் நலமோடு இருக்கப் பிரார்த்தித்தவாறு, நான் உடனே அதற்கு ஒரு பதில் எழுதினேன். பாலாவுக்கு ஒரு தம்பிப் பாப்பா கிடைத்திருப்பதை ஒட்டி, அவளுக்கு எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொண்டேன். அவளிடம் உள்ள இரண்டரை ரூபாய்ச் சொத்தை, பாங்கியில் போட்டு வைக்கும்படி அவளிடம் கூறுமாறு அவளது தந்தைக்கு உபதேசம் செய்தேன். ஸ்ரீ எம். கோவிந்தனுக்கு, அதி உன்னதமான அப்பாப் பதவி இரண்டாவது முறை கிடைத்திருப்பதற்காக அவரைப் பாராட்டினேன். அதோடு கூட ஏ. நாராயணன் நம்பியார், எம்.ஏ., கே. எஸ். எஸ். பணிக்கர், டேவிட் ஜார்ஜ், ஜானம்மா, பாருக்குட்டி அம்மா, கே. ஏ. கொடுங்ஙல்லூர், கே. பி. ஜி. பணிக்கர் (கோபகுமார்), சரத்குமார், ராம்ஜி, ஆர். எம். மாணிக்கத்தெ முதலிய எனது சென்னை நண்பர்களைப் பார்த்தால், நான் இப்போது எனது உம்மாவோடு தங்கியிருக்கும் விவரத்தைத் தெரிவிக்குமாறும், எல்லோரது சவுக்கியம் பற்றியும் நான் விசாரித்ததாக அவர்களிடம் கூறும்படியும் கேட்டுக் கொண்டு, அப்பாவுக்கும் அம்மாவுக்கும் குழந்தைகளுக்கும் எனது வாழ்த்துக்களை மறுபடியும் ஒருமுறை தெரிவித்துவிட்டுக் கடிதத்தைப் பூர்த்தி செய்து கவரில் போட்டு மிக நன்றாக ஒட்டி, அட்ரஸ் எழுதி அபுவைக் கூப்பிட்டுக் கொடுத்துவிட்டு "கொண்டுபோய்ச் சீக்கரம் போஸ்ட் பண்ணுடா" என்று ஆணையிட்டபோது, எனக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது:

"நில்லுடா" என்று சொன்னேன். "உன்னைப்பத்தி நிறைய புகாருங்க என் காதுக்கு வருது. அப்துல் காதர் கடையிலேத்து

பணத்தையெல்லாம் எடுத்து கண்டவங்களுக்கும் நீ கடன் கொடுக்கறே. கண்டகண்ட சஞ்சிகைகளுக்கெல்லாம் நீ ஏஜென்ஸி எடுத்திருக்கறே. யாரையும் லட்சியம் செய்யறதில்லேன்னு சொல் றுங்க. நிசந்தானு?"

எல்லாத்துக்கும் மொத்தமாக அவன் பதில் சொன்னுன்: "என்னைக் கண்டாத்தான் யாருக்குமே பிடிக்காதே!"

நான் வேறு ஏதும் சொல்லுமுன்பாக அவன் சொன்னுன்: "பெரிய காக்கா வந்தவுடனே பாத்தீங்களா? அக்காமாருங்க, அண்ணீங்க உம்மா எல்லாருமா இந்த முற்றம், தோப்புத் துறவுங்க எல்லாத்தையும் நல்லாப் பெருக்கிக் கூட்டி, குப்பை எல்லாத்தையும் தீயிட்டுக் கொளுத்தி, எவ்வளவு சுத்தமா வைச்சிருக்காங்க பார்த் தீங்களா? முன்னுலே நான் சொன்னபோது—யாருமே லட்சியம் பண்ணலே. 'வேணும்னு நீயே பெருக்கிக்கடா'ன்னு சொன்னுங்க. இப்ப மட்டும் என்னவாம்? பெரிய காக்காகிட்டேந்து பணம் பறிக்கறதுக்காகத்தான் இதெல்லாம். பணக்காரன் வந்தவுடனே அவரைச் சந்தோஷப்படுத்தறத்துக்காக, அவங்க இதெல்லாம் செய்யறுங்க. நான் என்ன பணக்காரனு? இல்லே எங்கையிலே காசு பணம்தான் இருக்கா? இரண்டும் கிடையாது. பெரியண்ணு, இந்த முற்றத்தை நாம இன்னும் அழகா மாத்தியமைக்கணும்; கூரையை மாத்தி ஓடு போடணும்."

நான் கேட்டேன்: "நாமன்னு சொன்னுல்?"

"பெரிய காக்கா முதல் போடணும். என்கிட்டே ஏது பணம்?"

அவன் உணவருந்திவிட்டு, கடிதத்தை எடுத்துக்கொண்டு போனுன். அவன் கடைக்குப் போய்ச் சேர்ந்த பிறகுதான் அப்துல் காதர் வீட்டுக்கு வரணும் அவன் போன கையோடு ஹனீஃபா வந்தான்.

ஹனீஃபா ராணுவத்தில் இருந்தவன். அதைவிட்டு வந்தபிறகு, தையல் கடை ஒன்றை ஆரம்பித்தான்; கூடவே சைக்கிள் கடையும் நடத்தி வந்தான். ஹனீஃபா சாதாரணமாக எப்போதுமே ஸ்டைலாகத்தான் இருப்பான். டபிள் வேஷ்டி, ஜிப்பா, நன்கு வாரிவிடப்பட்ட தலை, கிளீன் ஷேவ் இத்யாதி... ஆனுல் இப்போதோ ஒரு வேட்டி மட்டுமே கட்டிக் கொண்டிருந்தான். இதில் ஏதோ ரகசியம் இருக்கத்தான் வேண்டும். நான் ஒன்றும் பேசவில்லை. ஏதாவது சொல்லப்போய்...!

ஆனுல் அவனே ஆரம்பித்தான்: "பெரிய காக்கா, நான் என் எடத்தை வித்துடலாம்னு நினைக்கறேன். உங்களுக்குன்னு அதைக் குறச்ச விலைக்கே தர்றேன்!"

"அதை இப்போ எதுக்காக விக்கறே?"

"பணமில்லே அதனுலெதான். இருந்திச்சின்னு ஒரு ஷர்ட்டை மாட்டிக்கிட்டிருக்க மாட்டேனு?"

"எடத்துக்கு என்ன விலே எதிர்பாக்கறே?"

"பெரிய சுாக்காங்கிறதுக்காகக் குறச்ச விலேக்குத் தர்றேன். பத்தாயிரம் ரூபா கொடுங்க."

பத்தாயிரம் ரூபாய்! ஹனீஃபா அந்த இடத்தை என்ன விலே கொடுத்து வாங்கினுன் என்பது எனக்கு நன்ருகத் தெரியும்!—நான் பேச்சை மாற்றினேன்; நான் கேட்டேன்:

"ஆமாம், இப்ப வீட்டுச் செலவுக்குன்னு நீ எவ்வளவு கொடுக்கறே?"

இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, ஹனீஃபா வீட்டுச் செலவுக்குத் தன் பங்குக்குக் கொடுத்து வந்தது, தினசரி இரண்டு அணுதான். அவனுக்கும் அவனது மனைவிக்கும் இரண்டு குழந்தைகளுக்கும் தினசரி சாப்பாடு மற்றும் சாயா வகையறுக்களுக்கெனக் கொடுத்து வந்தது, இந்த இரண்டே அணுத்தான். அப்போது அவன் யாருக்கும் படுக்கை ஏதும் வாங்கியிருக்கவில்லே. எண்ணெயும் சோப்பும் வாங்கி வந்ததே கிடையாது. இதெல்லாம் கூட, அவன் தந்த அந்த இரண்டணுவிலுட்பட்டவை. அப்துல் காதர் இதற்காக அவனேத் திட்டுவான். ஆயினும் அவனுக்கு வெட்கம் மானம் சூடு சுரணை எதுவுமே கிடையாது. அதிகம் பேசினுல் அவன் சொல்லுவான்:

"நான் பட்டாளத்துக்குப் போயிடறேன். சர்க்காருக்கு என் சேவை தேவையாக இருக்குது!"

இருந்தாலும், அன்று நான் தலேயிட்டு இருவருக்குமிடையே பொது உடன்படிக்கை ஒன்றை ஏற்படுத்தி வைத்தேன். இரண்டணுவை நான் நாலணுவாக்கினேன். படிப்படியாக அது பன்னிரண்டணுவரை உயர்ந்து போயிற்று. நான் வீட்டைவிட்டுச் சென்ற பிறகு, ஹனீஃபா அதைப் படிப்படியாகக் குறைத்து இப்போது பழையபடி இரண்டணுவோ என்னவோதான் கொடுத்து வருவதாகக் கேள்வி. ஹனீஃபாவுக்கு இப்போது இன்னுமொரு குழந்தை வேறு கூடியிருக்கிறது; ஆகையால் செலவுக்குக் கொஞ்சம் அதிகம் தரும்படிக் கேட்பதற்கான நியாயமும் இருக்கிறதே. ஆயினும் என்னுடைய கேள்விக்கான பதில் அல்ல அவன் தந்தது; அவன் சொன்னுன்:

"சின்னக் காக்காவின் கொடுமை காரணமா உயிர் வாழறதே சிரமமா இருக்குது."

"ஏன்? அப்துல் காதர் உன்னை என்ன கொடுமை படுத்தினான்?"

"ஒரு நோட்டுக் கத்தையோட என் கடைக்குள்ளார வந்தாரு. அங்கே பெரிய மனுஷங்க பலபேரு அப்போது உக்காந்துகிட்டிருந்தாங்க. அப்புறமா, 'பாத்தியாடா'ன்னு சொல்லி அந்த நோட்டுக் கட்டை என் முகத்து மேலேயே விட்டெறிஞ்சிட்டு, 'பணத்தை வீசிப் பணத்தை எடுக்கணும் புரியுதா?'ன்னு சொன்னாரு. அப்பறம் அங்கேந்து நொண்டி நொண்டி இறங்கிப்போனாரு. நான் வெக்கத்தாலே குன்னிப் போயிட்டேன். நான் பெரிய காக்காவுக்கு நிதம் நிதம் பீடி வாங்கித் தறேன் இல்லே? தினசரி தீப்பெட்டியும் வாங்கித் தரேன் இல்லே? இப்படியெல்லாம் பணத்தை வீசியும் என் பணம் மட்டும் ஏன் பணத்தை இழுத்துக்கிட்டு வரமாட்டேங்குது?"

நியாயம்தான்.

இருந்தாலும் நான் சொன்ன பதில் இந்தக் கேள்விக்கானது அல்ல. நான் சொன்னேன்:

"இப்போ ரஷீது வேறே அதிகப்படியா இருக்கானேடா? நீ ரேஷன் வாங்கறதுக்குன்னு எவ்வளவு கொடுக்கறே?

அவன் உடனே இதற்குச் சொன்ன பதில்: "நான் பட்டாளத்துக்குப் போயிடறேன். சர்க்காருக்கு என் சேவை தேவையா இருக்குது."

அவன் கோபத்தோடு உள்ளே போய்ச் சாப்பிட்டு விட்டு, தையற் கடைக்குப் போனான்.

நான் சாப்பிட்டு கொண்டிருந்தபோது, பாத்தும்மாவுடைய ஆடு வராந்தாவுக்கு வந்து என்னுடன் கூட உணவருந்த ஆயத்தமாகியது. நான் உடனே இரைந்தேன்: "பாத்தும்மா. ஓடி வா!"

பாத்தும்மா ஓடி வந்து அதனை முற்றதுக்கு இழுத்துக்கொண்டு போனாள். நான் சொன்னேன்: "அதைக் கயித்தாலே கட்டிப் போடனும்." பாத்தும்மா சொன்னாள்: "கட்டிப் போடறது அதுக்கு பிடிக்காது பெரிய காக்கா."

விளக்கு வைக்கும் நேரத்தில் கொச்சுண்ணி வந்தான். சில சமயங்களில் அவன் இரவில் இங்கேயே தங்குவதும் உண்டு. என்னருகே தான் படுப்பான். எனக்கு மறுபக்கத்தில் உம்மா. கொச்சுண்ணியின் அருகே அபு ஹனீஃபா, அவன் குடும்பத்தாரோடு வீட்டின் இந்தப் பக்கமுள்ள அறையில் தூங்குவான். அப்துல்காதரும் அவன்

குடும்பத்தவரும் வீட்டினுள்ளே உள்ள அறையில் படுப்பார்கள். வராந்தாவில் கோணித் தடுப்புக்குள்ளே சுலைமானும் அவன் குடும்பமும். கொச்சுண்ணி இரவில் இங்கு தங்காதபோது, குடும்பத்துடன் தன் வீட்டுக்குப் போவான். தென்னை ஓலையினால் ஆன நெருப்புப் பந்தத்தை ஏந்தியவாறு கொச்சுண்ணி முன்னே செல்ல, அந்த வெளிச்சத்தின் பின்னால் பாத்தும்மா போவாள். ஒரு வால் போல, பத்து வயதான கதீஜா பாத்தும்மாவின் பின்னால். அவளைத் பின்தொடர்ந்து ஆடு!

## 2

பாத்தும்மாவுடைய ஆட்டின் குறும்புத்தனங்கள் காலையிலிருந்தே துவங்கி விட்டன. சுமாராக 8 மணி இருக்கலாம். இடுப்பில் ஒரு சிறு துண்டுடன், தலையிலும் உடம்பு முழுவதிலும் எண்ணெய் தேய்த்துக் கொண்டு கசரத் பழகிக்கொண்டிருந்தேன். அப்போது முற்றத்தில் குழந்தைகளின் கூச்சல் கேட்டது. "உள்ளாடத்திப்பாறு, உள்ளாடத்திப்பாறு!"

"வாலைப்பிடி! வாலைப்பிடி!"

"ஒண்ணுக்குப் போறது பாரு!"

"கொம்பைப் பிடி! கொம்பைப்பிடி!"

விஷயம் என்ன? ஜன்னல் வழியாகப் பார்த்தேன். பெரிய சங்கதி ஏதுமில்லை. பாத்தும்மாவுடைய ஆடு, அபியுடைய அரை நிஜாரின் முன்பக்கம் முழுவதையும் தின்றுவிட்டிருந்தது. மீதமிருந்ததை வாயினால் இறுகக் கடித்து இழுத்துக் கொண்டிருந்தது. அபி, ஆட்டின் கழுத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டிருந்தான்; பாத்துக்குட்டி வாலைப்பிடித்து இழுத்துக்கொண்டிருந்தாள்; ஸயிது முகம்மது கொம்பைப் பிடித்தவண்ணம் நின்றான். ஆரீஃபா பயத்துடன் சற்றே விலகி நின்று கொண்டிருந்தான். ரஷீதும் சுபைதாவும் எதிலுமே அக்கறையின்றி, கட்டை விரல்களை வாயிலிட்டுச் சப்பிய படி முற்றத்தில் இருந்தார்கள். லைலா ஆட்டின் வயிற்றை இறுகப்

பற்றியபடி அதனைத் திட்டிக் கொண்டிருந்தாள். "உள்ளாடத்திப் பாறு, உள்ளாடத்திப்பாறு!"

நான் இடுப்பில் பெரிய சவுக்கத்தைச் சுற்றிக்கொண்டு, அறையிலிருந்து வெளிப்போந்து வராந்தாவுக்கு வந்து முற்றத்தில் இறங்கினேன். ஆட்டின் காதைப் பிடித்துக்கொண்டு அபியை விடுவித்தேன். அந்த அரை நிஜாரின் முன் பக்கத்தை மட்டுமல்லாது, ஒரு பாக்கெட்டையும் அது தின்று முடித்திருந்தது.

விவரம் முழுவதையும் கேட்டதும், தவறு பாத்தும்மாவின் ஆட்டினுடையது அல்ல என்பது தெளிவாயிற்று. அரை நிஜார் பாக்கெட்டில் வெள்ளையப்பம் இருந்தது. அதிலிருந்து, ஆட்டுக்குக் கொஞ்சம் எடுத்துக் கொடுத்துவிட்டு, பாக்கியை நிஜாரின் முன் பக்கத்தில் செருகிகொண்டு, ஆட்டின் முன்னால் சென்று "ஏய் தின்னு" என்று கூறியிருக்கிறான். ஆடு அப்பத்தையும் நிஜாரின் முன் பக்கத்தையும் தின்றே விட்டது. ஜேபியில் இருந்ததையும் ஜேபியோடு சேர்த்துத் தின்றது. அபி சொன்னான் :

"அப்பா அடிப்பாரு!"

"அதை அப்பவே யோசித்துப் பார்த்திருக்கணும். அடிக்கட்டும், வேணும் உனக்கு."

சற்று நேரம் கழித்து நான் சொன்னேன் : "பயப்படாதேடா. வாப்பாகிட்டே இதைப்பத்தி யாரும் சொல்ல மாட்டாங்க!"

பாத்துக்குட்டி, லைலா, ஸயிது முகம்மது எல்லோரிடமும், இந்த ரகசியத்தைக் காப்பாத்தும்படிச் சொன்னேன். இனிமேல் யாரையுமே 'உள்ளாடத்திப்பாறு' என்று கூப்பிடலாகாது என்று லைலாவுக்கு புத்திமதியும் கூறினேன்.

கசரத் எடுத்து முடித்த பிறகு, ஆற்றுக்கு குளிக்கப் போவதற்குத் தயாரானேன். கூட ஸயிது முகம்மதையும் பாத்துக்குட்டியையும் அழைத்துக் கொண்டேன். அபியும் லைலாவும்கூட அவர்களுடன் புறப்பட்டார்கள். அன்று, அவர்கள் வாப்பாவுடன் குளிக்கப் போகவில்லை. என்கூட வரவேண்டும் என்பதற்காகவே காத்துக்கொண்டிருந்திருக்கிறார்கள். குறிப்பிட்டுச் சொல்லும்படியான காரணம் எதுவுமில்லை; அபியுடைய சிலேட்டுப் பென்சிலை, லைலா எடுத்து ஒடித்து சிறு சிறு துண்டுகளாக்கியிருந்தாள். இதன் காரணமாகத்தான் வாப்பா அவர்களைத் தன்னுடன் குளிக்க அழைத்துப் போகவில்லை. பாத்துக் குட்டிக்கும் அபிக்கும் சிலேட்டும் பென்ஸிலும் வாங்கிக் கொள்வதற்காக ஹனீஃபா அரையணா கொடுத்திருந்தான்.

நான் எல்லோரையும் ஆற்றில் முழுக்காட்டிய பிறகு, கரையில் நிற்க வைத்தேன். பிறகு குளிர்ந்த நீரில் அமிழ்ந்து அணைந்தவாறு குளித்துக் கொண்டிருக்கையில், அபியுடைய குரல் கேட்டது: "பெரிய வாப்பா!"

நான் திரும்பிப் பார்த்தேன். யாரும் கரையிலிருந்து வெள்ளத்தில் இறங்கியிருக்கவில்லை. உடனே நான் நீந்தி படித்துறைக்குச் சென்று "என்னடா?" என்றேன்.

"எனக்கு அரை நிஜார் இல்லையே."

அவன் தன் நிலையை விளக்கினான். வெக்கத்தை மூடி மறைக்க அவனிடம் ஏதும் இல்லை. 'பிறந்த மேனியோடு சாலை வழியே எப்படிப் போவது?' நான் கேட்டேன்:

"இப்படித்தானே நீ வந்தே?" அதெல்லாம் சரி. ஆனால் இப்போது அபி தன்னோடு ஸ்கூலில் படிக்கும் ஒருவனைத் தோணியில் பார்த்து விட்டான். அவன் வேட்டி கட்டிக் கொண்டிருந்தான்! அதனால், அவனுடைய வெட்கத்தை மறைத்துக் கொள்வதற்காக நான் எனது சவுக்கத்தைக் கொடுத்தேன். இதைப் பார்த்ததும் பாத்துக்குட்டிக்கும் நாணம் வந்து விட்டது. அவளுக்கும் உடுத்திக் கொள்ள ஏதாவது வேண்டும்!

நான் குளித்த பிறகு, என்னுடைய வேட்டியைக் கட்டிக்கொண்டேன். சவுக்கத்தை அவிழ்த்து நனைத்துப் பிழிந்து தலையை நன்றாகத் துடைத்துக் கொண்ட பிறகு, சவுக்கத்தை நீரில் அலசிப் பிழிந்து, பாத்துக் குட்டியிடம் கொடுத்து உடுத்திக் கொள்ளும்படி சொன்னேன்.

லைலாவும் ஸயிது முகம்மதும் இன்னும் வெட்கம் உணர ஆரம்பிக்கவில்லை. இருந்தால் என்ன செய்திருப்பானோ? என்னிடம் இருந்தது இரண்டு சவுக்கங்கள் தானே?

நான் வீடு திரும்பியபோது, அப்துல் காதரும் ஹனீஃபாவும் பரஸ்பரம் சண்டைக்கு ஆயத்தமாயிருந்தார்கள். சண்டைக்கான காரணம் விசேஷமாக ஏதுமில்லை. ஹனீஃபா நேற்று வீட்டில் ரேஷன் வாங்குவதற்கு எதுவுமே தரவில்லை என்பது அப்துல் காதருக்குத் தெரிந்தது. ஹனீஃபாவுக்கு அது அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அதனால் அவனும் அவனது குடும்பத்தவரும் அங்கிருந்து புறப்படுவதாக இருந்தனர்!

"வீட்டை விட்டு வெளியே வாடி ஐசோம்மா" என்று ஹனீஃபா மனைவியை அழைத்தான். "குழந்தைகளையும் கூப்பிடு."

அவனும் அவனது குடும்பத்தாரும் அவர்களுடைய வாழைத் தோட்டத்தில் ஓலைக்கீத்துக் குடிசை போட்டுக்கொண்டு வசிக்கப் போகிருர்களாம். நான் பார்க்கையில் அவன் உடுத்திக் கொண்டிருந்த வேட்டி என்னுடையதாக விருந்தது! திருடினதுதான். நான் அவனிடம் இதுபற்றிக் கேட்டதும், "பேசிக்கிட்டு நிக்க நேரமில்லே, எனக்குக் கொஞ்சம் வேலையிருக்குது" என்று கூறிக் கொண்டே அவன் அகன்ருன். வாயிற் படிக்கட்டை அடைந்த பிறகு அவன் சொன்ஞன் :

"எனக்கு இந்த வீட்டிலே எந்தவிதமான உரிமையும் இல்லேங்கிறது முடிவாயிடுச்சு."

ஹனீஃபா அவனுடைய தையல் கடைக்குப் போஞன். நான் அப்துல் காதரிடம் கேட்டேன் ; "அடே இந்த ரகளைகளிலேந்து என்னை நீ கொஞ்சம் காப்பாத்தக் கூடாதா? அந்த இன்ஸ்பெக்டருகிட்டே, எடத்தைக் காலி பண்ணித் தரும்படியா, எனக்காக நீ இன்ஞெருவாட்டி கேட்கக் கூடாதா?"

அப்துல் காதர் கேட்டான் : "இங்கே இக்காக்காக்கு என்ன கொறை, சொல்லுங்க? எண்ணெய், நெய்யி, பாலு, சாயா, பீடி வத்திப்பெட்டி நேந்திரம் பழம், தக்காளிப்பழம், அன்ஞசி, ஞாலிப் பூவன் பழம், கண்ணன் பழம், பலாப்பழம் சாப்பாடு, பேச்சுத் துணைக்கு உம்மா, நான் அபு கொச்சுண்ணி—இன்னும் என்ன வேணும் சொல்லுங்க?"

அப்துல் காதர், ஒரு பள்ளிக்கூட ஆசிரியஞக இருந்தான். இலக்கணத்தில் நிபுணன். முன்பு சின்ன வயதில் ஒரு முறை இவன் அம்மாவிடம் சொன்ஞன் : "மாதாவே, சிறிதளவு நல்ல நீர் தர இயலுமா?" அன்று உம்மா சாதம் போடும் பெரிய கரண்டியிஞல் அவனை அடித்தாள். வாப்பா அவனைச் சமாதானப் படுத்திஞர் :

"நீ அப்படியே சொல்லுடா கண்ணு! ஆமாம், என்னை எப்படிக் கூப்பிடுவே?"

"பிதாவென்று."

இதைக் கேட்டதும், உம்மா கரண்டியால் மேலும் ஒன்று கொடுத்தாள். பிறகு அவன் உம்மா என்றும் வாப்பா என்றுமே அழைத்து வந்தான். நொண்டி!

என்னையும் அவனையும் ஒரே தினத்தில்தான் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார்கள். அப்போது, அதற்கு "முஹம்மடன் ஸ்கூல்" என்று பெயர். உம்பியண்ணன் என்ற பெயருள்ள ஒரு பக்திமான் தான் அந்தப் பள்ளிக்கூடத்தைக் கட்டிஞர்.

புதுஸ்ஸேரி நாராயண பிள்ளை சார் என்பவர்தாம், அப்பொழுது முதல் வகுப்பு ஆசிரியராக இருந்தார். எனக்கும் அப்துல் காதருக்கும் ' அ, ஆ ' எழுதவும் படிக்கவும் கற்பித்தவர் அவர்தாம்.

அப்துல் காதர் ஸ்கூலிலும் சரி, வெளியிலும் சரி, படு போக்கிரியாக இருந்தான். நான் ஸ்கூலில் பணிவான பையன் என்று பெயர் எடுத்திருந்தேன். நாராயணபிள்ளை சாரிடம், அவன் நிறைய உதை வாங்கியிருக்கிறான்.

அப்துல் காதர் இடது காலை ஊன்றி நின்றுகொண்டு வலது நொண்டிக்காலை ஒரு சுழற்றுச் சுழற்றி, பிள்ளைகளை அடித்து வந்தான். என்னையும் அவன் அப்படித்தான் அடிப்பது வழக்கம். பிறகு அவன் வலது உள்ளங்காலை மூக்கிற்கு நேரே காட்டிக் கேட்பான் :

'' இப்படிச் செய்ய முடியுமா? '' முடியாது! எப்படி இயலும்? மற்றவர்களின் கால் தொய்ந்து தளர்ந்து தொங்கிக் கொண்டிருக்க வில்லையே! வேறு யாருக்குமே இந்த சர்க்கஸ் வேலை சாத்தியமல்ல.

'' முடியாதுன்னு மோந்து பாரு. '' அவனுடைய நொண்டி உள்ளங்காலினை மற்றவர் மோந்து பார்க்கணும். இல்லையென்றால் செம்மையான உதை விழும். பிள்ளைகள் அவனிடமிருந்து தூர விலகி நின்றால், தன் மார்பில் தானே அறைந்து கொண்டு அழ ஆரம்பித்து விடுவான். அவன் நொண்டி என்பதால் எல்லோரும் இயல்பாகவே அவனிடம் அனுதாபத்தோடு நடந்து கொண்டார்கள். அதை, அவன் தனக்குச் சாதகமாக நன்கு பயன்படுத்தி வந்தான். அவன் என்ன தவறு செய்தாலும் குற்றம் சுமத்தப்படுவதென்னவோ பிறர் மீதுதான். பிள்ளைகள், நின்று அவனிடம் குத்துக்களை வாங்கிக் கொள்வார்கள். நானும் அவ்வாறே நின்று பெற்றுக் கொண்டிருக்கிறேன். அவனிடம் நான் வாங்கியுள்ள குத்துக்களுக்கு கணக்கு வழக்குக் கிடையாது. அவனுடைய சிலேட்டையும் புத்தகங்களையும் நான்தான் சுமக்கணும். நான் மூத்தவன் தானே? நியாயமாகப் பார்த்தால் தம்பிமார்கள்தாம் அண்ணன்மார்களின் சிலேட்டும் புத்தகங்களும் சுமக்கவேண்டும். ஆனால் இங்கோ, அண்ணனாகிய நான் தம்பியாகிய அவனுடைய சிலேட்டும் புத்தகங்களும் சுமக்கணும். இல்லையோ போயிற்று, அடிதான்!

நான் நிறைய வாங்கினேன். நிறையச் சுமந்தேன். ரோஷப்புயல் என்னுள் சீறி எழும். ஆனால் என்ன செய்வது? அவன் சிலேட்டு புத்தகங்களை நடுத்தெருவில் வைத்துவிட்டு, கையைச் சுருட்டிய வாறே என்னிடம் வந்து மெள்ளக் கேட்பான் :

"என் சிலேட்டு புத்தகங்களையும் எடுத்துக்கிட்டு வர்றே இல்லே?"

"முடியாது" என்றுதான் தினசரி சொல்லுவேன். பிறகு நியாயத்தை எடுத்தோத ஆரம்பிப்பேன்.

"அடே, நான் உன்னோட அண்ணனில்லே?"

"எடுக்கறியா இல்லையா?"

"முடியாது."

உடனே ஒற்றைக்காலில் நின்றுகொண்டு மற்றொரு காலைச் சுழற்றிய படி என்னுடைய நெஞ்சில் பலமாக ஒரு அடி அடிப்பான். அடி வேகம் தாங்காமல் நான் சற்றே தடுமாறிச் சுருண்டு வீழ்வேன். அவன் சற்றுத் தள்ளி நின்றுகொண்டு உத்தரவிடுவான்: "எழுந்து எடு எல்லாத்தையும். நேரமாயிடுச்சு. லேட்டாப் போனா, சாரு அடிப்பாரு."

நான் அப்படியே கிடந்த வண்ணம் யோசிப்பேன். 'இது எந்த ஊரு நியாயம்? தம்பி குத்தறது! அண்ணன் வாங்கிக்கிடறது! அப்புறம் புத்தகமும் சிலேட்டும் சுமக்கறது!' நான் அப்படியே கிடப்பதைப் பார்த்துவிட்டு அவன் என் மார்பிலே ஏறி அமருவான். பிறகு கேட்பான்: "இன்னும் குத்து வேணுமா?"

நான் உண்மையைக் கூறுவேன்: "வேணாம், சுமக்கறேன்."

நான் எழுந்துகொண்டு, அவனுடைய சிலேட்டுப் புத்தகங்களையும், வேறு இருப்பவற்றையும் சுமந்து செல்வேன். எத்தனை நாட்கள்! எத்தனை குத்துக்கள்!

இப்படியிருக்கையில் ஒரு நாள் எனக்குப் புத்தி வந்தது. வழக்கம் போல குத்துவதற்காக அவன் கையை வீசு முன்பாக, என் காலால் அவனுடைய ஊனமில்லாத காலில் கொடுத்தேன் ஒரு அடி!

அதோ விழுந்துகிடக்கிறான் அப்துல் காதர் சாலையில்! மல்லாந்து! அலங்கோலமாக! நான் உடனே அவனுடைய நெஞ்சில் ஏறி அமர்ந்து கொண்டேன். நான் செய்யத் தகாத குற்றம் எதையோ செய்து விட்டது போல, அவன் கேட்டான்:

"இதென்ன இது! நான் சின்னவன் இல்லே? என் நெஞ்சி மேலே நீ ஏறி உக்காரலாமா?"

அவனைக் குத்துவதற்காக நான் கையை சுருட்டி மடக்கிக் கொண்டேன். அவன் அழுது கொண்டே சொன்னான்: "என்னைக் குத்தாதே! நான் காக்காவோடு தம்பி இல்லே?"

"தம்பி! ஹும். இந்த அறிவு முன்னே எங்கே போய் இருந்திச்சு?"

" இனிமே, அதை நான் எப்பவுமே நெனப்புலெ வெச்சுக்கறேன்."

" அடே ! " நான் கேட்டேன் ! " நாயைப் பாத்தா, அது மேலே முதல்லே கல்லு வீசறது யாரு ? "

" இக்காக்கா ! "

" ஆத்துலே குளிக்கும் போது, தண்ணீலே அளஞ்சு நீந்தி, முதல்லே அக்கரை போய்ச் சேர்றது யாரு ? "

" இக்காக்கா ! "

" வீட்டிலேந்து ஏதாவது திருடிக்கிட்டு வந்து உனக்குக் கொடுக்கறது யாரு ? "

" இக்காக்கா. "

" நாராயணபிள்ளை சாரோட மேசையிலிருந்து சாக்குப்பீஸ்களை உனக்கு எடுத்துத் தர்றது யாரு ? "

" இக்காக்கா ! "

" பின்னே என்ன ? "

அவன் சொன்னான் : " இனிமே நான் காக்காவோடே சிலேட்டு புத்தகங்களைச் சுமந்துகிட்டு வர்றேன். என்ன ? "

நான் சொன்னேன் :

" உன்னுடையதை நீ சுமந்துக்க ".

" அப்படியானா முன்னாலே போறது யாரு ? "

" நான்தான் ! "

இப்படியாக அன்று முதல் அப்துல் காதர், தம்பியாக மாறினான். அவன்தான் இவன். நொண்டி !

" அடே, " நான் சொன்னேன் : " அந்த வீட்டைக் காலி செய்து கொடுக்கும்படியா அந்த இன்ஸ்பெக்டருகிட்டே நீ கொஞ்சம் போயி சொல்லக் கூடாது ? இந்த வீட்டு அமர்க்களத்திலே அகப்பட்டுகிட்டு, நான் எவ்வளவு சிரமப்பட்டுக்கிட்டு இருக்கறேன் தெரியுமா ? இது உனக்குத் தெரியமாட்டேங்குது ! "

" இக்காக்கா ! அந்த மனுஷன், வேறே வீடு பாத்துகிட்டுத் தான் இருக்காரு. எக்சைஸ்காரங்களும் அவருக்காக வீடு பாத்துக்கிட்டுத் தான் இருக்காங்க. இன்னும் கொஞ்ச நாளுகூட பொறுத்துக்கிட்டு இங்கேயே இருங்க."

அவன் தன் இரும்புத்தடியை ஊன்றியவாறு நொண்டி நொண்டி நடந்து கொண்டே தனது கடைக்குப் போனான். அன்னாசிப் பழம் ஒன்றின் பாதியை வெட்டி எடுத்து, அதன் தோல்களைச் சீவிக் கொண்டிருக்கும்போது, பாத்தும்மாவுடைய ஆடு சன்னல் அருகேயும், குழந்தைகள் வாயில் கதவின் அருகிலுமாக ஆஜரானார்

கள். நேந்திரம்பழம் கண்ணன் பழம் நெய் ஆகியவற்றைப் புட்டில் சேர்த்துக் கலந்து, குழந்தைகளுக்குத் தினசரி, ஆளுக்கு ஒரு உருண்டை கொடுப்பது வழக்கம். கூடவே ஆளுக்கொரு துண்டு அன்னாசியும் கொடுப்பேன். அது கிடைத்ததும் பிள்ளைகள் கூச்ச விட்டுக் கொண்டே விளையாடச் செல்வர். ஆனால் அபி, பாத்துக்குட்டி, லைலா, கதீஜா முதலியவர்களுக்குத் தெரியாமல், ஆனும்மாவுடைய மகன் ஸயிது முகம்மது, எனக்கு முன்பாக வந்து நின்று, வராத மாதிரி பாவனை செய்துகொண்டு தூணைப் பிடித்த வாறு ஏதோ சில பாட்டுக்களை முணுமுணுத்துக்கொண்டு முகத்தை நீட்டுவான். அவனுக்கு ஸ்பெஷலாக ஒரு பெரிய உருண்டையை நான் கொடுப்பேன். காலைச் சிற்றுண்டி உண்ட பிறகு பழத்தோல் களையும் மற்றவற்றையும் பாத்தும்மாவுடைய ஆட்டுக்குக் கொடுப்பேன். பிறகு கையலம்பிவிட்டு வாயையும் துடைத்துக் கொண்டு சாயாவும் கையுமாய் நாற்காலியில் வந்து அமர்ந்து கொள்வேன். அப்போதுதான் பள்ளிக்கூடக் குழந்தைகள் போய்க் கொண்டிருப்பார்கள். பெண் குழந்தைகள் வழக்கம் போல என்னை நோக்கியவாறே செல்லுவார்கள்.

மாணவிகள் இவ்விதம் பார்ப்பதில் புதைந்திருந்த மர்மம் பிறகு தான் எனக்குத் தெரியவந்தது. அதை பின்னால் கூறுகிறேன்.

அன்று அபியும் பாத்துக் குட்டியும் வழக்கம்போல் பள்ளிக்கூடம் சென்றார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் அபி, ஒளிந்து மறைந்து ரோடில் நின்று கொண்டே என்னை கையினால் சாடை காட்டி வருமாறு சொன்னான்.

என்னவாயிற்று? நான் இறங்கிச் சென்றேன். பாத்துக் குட்டி ஒரு தென்னை மரத்தின் கீழே பதுங்கிக் கொண்டிருந்தாள். நான் போனதும் அபி சொன்னான்:

"பெரியப்பா, சிலேட்டு பென்சில் வாங்கறதுக்காக வாப்பா கொடுத்த அரையணா...!"

"அரையணா?"

"அரை நிஜாரின் பையிலே வெச்சிருந்தேன்!"

"நீ என்னடா சொல்றே?."

"ஆடு தின்னுதே, அந்த ஜேபீலேதான் வெச்சிருந்தேன்!"

ஓஹோ! பாத்தும்மாவுடைய ஆடு அரையணாவையும் முழுங்கி யிருக்கிறது!

நான் சொன்னேன்:

"இதெ நீங்க யாருகிட்டயும் சொல்ல வேணும்; பரம ரகஸ்யமா வெச்சிக்குங்க என்ன! அரையணுவுக்கு ஏதாவது வழி இருக்குதா பாக்கறேன்."

அபி நினைவு மூட்டினான் :

"உம்மாம்மா பாத்தா அடிப்பாங்க."

"ஒளிஞ்சு நில்லு!."

நான் உள்ளே வந்து, பாத்தும்மாவிடம் இரண்டணா கடனாக வாங்கிக் கொண்டேன். அரையணா (அதாவது 3 பைசா) எடுத்துக் கொண்டுபோய், அபிக்கும் பாத்துக்குட்டிக்கும் கொடுத்து, அவர்களைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி வைத்தேன்.

பாத்தும்மாவுடைய ஆடு முற்றத்தில் நின்றுகொண்டிருந்தது. எந்த நேரத்திலும் அதனுள்ளிருந்து இரண்டு காலணாக்கள் விழக்கூடும்! நான் அவற்றை எதிர் நோக்கிக் காத்துக்கொண்டிருக்கலானேன். ஆனால், சிறு சிறு சாணப் புழுக்கைகள் விழுந்தனவே தவிர, வட்டமாக எதுவும் விழக் காணோம்!

விழாமல் இருந்து விடுமோ? என்னுடைய கண்கள் ஆட்டின் பின்புறத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தன.

இதனிடையே, உற்சாகத்துடன் என்னைப் பார்த்தவாறே, மாணவிகள் கும்பல் கும்பலாகச் சாலையில் போய்க்கொண்டிருந்தார்கள். எனக்கு ஒரே மகிழ்ச்சி. அவர்களுக்குத் தெரியும் நான் யாரென்று! அதனால்தான், இப்படி வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டு போகிறார்கள். அவர்கள் தமக்கிடையே இவ்வாறு பேசிக்கொள்ளவும் கூடும்! (இது எனது சொந்தக் கற்பனை என்பது நினைவிருக்கட்டும்.)

சுருட்டை முடிக்காரி : "அந்த ஈஸிச்சேரில் படுத்துக்கிட்டிருக்காரே, அவரு யாருன்னு உனக்கு தெரியுமா?"

மான் விழியாள் : "பின்னே இது கூடத் தெரியாதா என்ன? பிரபல எழுத்தாளர் வைக்கம் முகம்மது பஷீர்."

கோகிலவாணி : "என்னோட ஆட்டோகிராப் புத்தகத்திலே அவரோட கையெழுத்தை வாங்கப் போறேனாக்கும்!"

பூனைக் கண்ணினாள் : "போடி! அது அவரொண்ணுமில்லே. குடிசை மாதிரி இருக்கற வீட்டைப்பாரு! அவரு போயி இந்த மாதிரி ஒரு இடத்திலியா இருப்பாரு?"

மதுவாணி : "போடி பூனைக்கண்ணி. அவரேதான் அது. இன்னிக்கே என் ஆட்டோகிராப் புத்தகத்திலே அவரை விட்டு எழுதச் சொல்றேன் பாக்கிறியா?"

" சரி டீ ! அதையும்தான் பாக்கலாமே ! "

இப்படியாக, அன்று மதியம் சாப்பிட்டுவிட்டு ஸ்கூலுக்கு போகும் போது, அவர்கள் என் வீட்டுக்கு வந்தார்கள்.

இந்தச் சமயத்தில் மற்றொரு சம்பவம் என் நினைவுக்கு வந்தது. அப்போது நான் எதிர்வீட்டில் இருந்தேன். நான் ஊர் திரும்பியுள்ள விவரத்தைக் கேள்விப்பட்டு, ஹைஸ்கூலின் தலைமை ஆசிரியர் என்னிடம் வந்து சொன்னார் : " பள்ளிக்கூடத்தின் ஆண்டு விழா வருகிறது ; அந்த விழாவில் தாங்கள் உரையாற்ற வேண்டும் ; குழந்தைகளுக்கு நல்லுரைகளை உபதேசிக்க வேண்டும்."

" நான் எங்கும் உரையாற்றும் வழக்கமே கிடையாது. தவிர அந்தச் சமயத்தில் நான் ஊரில் இருப்பதும் சந்தேகம் தான்."

அவர் சொன்னார் : " நோட்டீசில் பெயரை விளம்பரம் செய்து விடுகிறோம் ; ஊரில் இருக்கும் பட்சத்தில் வந்தால் போதும்."

நோட்டீஸ் அச்சடிக்கப்பட்டது. என் பெயரும் அதில் காணப் பட்டது. நான் என்ன செய்வது? மன நிம்மதியோடு ஏதாவது ஓய்வாகக் கொஞ்சம் எழுதலாம் என்று வந்தவன் நான் ! உம் ! இப்படி யோசித்தவாறு செடிகளுக்கு மத்தியில் நான் நின்றுகொண் டிருக்கையில் கேட்டின் அழிகளுக்கிடையே தெரிந்தன இரண்டு கண்கள் ! சுருட்டைத் தலை முடியுடன் ஒரு பெண். முல்லைப் பூவையோ பிச்சிப் பூவையோ நாடி வந்திருக்கிறாள் போலும் என்று நான் நினைத்தேன். நான் கேட்டேன் :

" என்ன வேணும் ?"

" நோட்டீஸில் பேர் போட்டிருக்குது. உரையாற்ற நிச்சயமா வரணும். வராம இருந்திடாதீங்க, என்ன ?"

" அன்னிக்கு ஊரிலிருந்தா வர்றேன்."

பிறகு தினமும் அவளும் வேறு பெண் குழந்தைகளும் சேர்ந்து கேட்டின் அருகே வந்து, என்னை அழைத்துச் சொல்வார்கள் : " வராம இருந்திடாதீங்க, என்ன ?."

ஆனால் ஆண்டு விழாவுக்கு முந்தைய தினமும், நான் அங்கிருந்து விட்டேன் சவாரி ! பெட்டி படுக்கை எதுவுமே எடுத்துக்கொள் ளாமல் வெறுங் கையாகத்தான். உம்மாவிடம் மட்டும் சொன்னேன். ஆண்டு விழா நடந்து முடிந்த மறுநாள் திரும்பி வந்தேன். அன்றே, சுருட்டை முடியாளும் மற்ற பெண்களும் வந்து கேட்டார்கள் :

" என்ன இப்படிச் செஞ்சிட்டீங்களே ? " நான் சொன்னேன் : " ஊரிலே இருந்தா வர்றேன்னுதானே சொன்னேன் ?"

" நல்ல ஆளு ! "

அது அப்படி ஆச்சு. இப்போது வாயிற்படி தாண்டி வரும் பெண்களில் அந்தச் சுருட்டை முடியாளும் இருக்கிருளோவென்று நான் ஆராய்ந்தேன். இல்லே. இப்போது அவர்கள் எல்லோரும் பெரியவர்களாக வளர்ந்திருப்பார்களே! அடேயப்பா! இந்தப் பெண்கள் தாம் எத்தனை விரைவாக வளர்ந்து விடுகிருர்கள்!

இவர்களுடைய ஆட்டோகிராப் புத்தகத்தில் கையெழுத்துப் போடத் தயாராக இருப்பதற்காக, பேனுவை எடுக்க எண்ணினேன். பிறகு, 'வரட்டுமே, வந்து சற்று நேரம் காத்துக் கொண்டுதான் நிற்கட்டுமே' என்று தோன்றியது.

அவர்கள் வந்தார்கள். ஆனுல் என்னை நோக்கியல்ல. நேராக சாம்ப மரத்தினடிக்குச் சென்று, உம்மாவிடம் என்னவோ பேசிவிட்டு எதையோ கொடுத்தார்கள். உம்மா துணி முடிப்பிலிருந்து கை நிறைய சாம்பங்காயை எடுத்து அவர்களிடம் தந்தாள். அவர்கள் அங்கேயே நின்று ஒவ்வொன்ருகக் கடித்துக்கொண்டு சாம்ப மரத்தை குதூகலத்துடன் பார்த்தார்கள்.

கழுதைகள்! உம்மாவின் அழுக்குத் துணி முடிச்சில் கட்டியிருந்த சாம்பங் காயைத்தான் அவர்கள் கடித்துத் தின்கிருர்கள். ஆனுல் சுத்தமாக அமர்ந்து கொண்டிருக்கும் என்னைத் திரும்பிப் பார்க்கக் கூடாது?

திடுக்கிட வைக்கும் ஒரு விஷயம் வெட்ட வெளிச்சமாக எனக்கு விளங்கியது. இந்தப் பெண்கள் தினசரி பார்த்துக் கொண்டே போவது என்னையல்ல!

அவர்கள் சென்றதும் நான் உம்மாவிடம் கேட்டேன்:

"அவுங்க என்ன தந்தாங்க உம்மா?" உம்மா சொன்னுள்: "ஒரு அணு."

"அந்தப் பெண்களுக்குச் சாம்பங் காயை வித்தீங்களா?"

"பின்னே இல்லாம?"

"ஒரு அணுவுக்கு எத்தினி கொடுத்தீங்க?"

"இருபது".

சபாஷ்! நான் எத்தனை இருபது சாம்பங்காய்களைப் பாத்தும்மாவுடைய ஆட்டுக்குக் கொடுத்திருக்கறேன்!

அந்தப் பெண்கள் என்னைத் திரும்பிக்கூடப் பாராமல் அலட்சியப் படுத்தியது, என்னைச் சிந்திக்க வைத்தது.

"அந்தச் சாம்ப மரத்தை நட்டு வளர்த்தது யாரு?" என்று நான் உம்மாவைக் கேட்டேன்.

" தளியாக்கல்லின் வீட்டிலேந்து ஒரு கொட்டையைக் கொண்டு வந்து நீ இங்கே நட்டு வச்சே. அது வளர்ந்து மரமாயிடுச்சு."

தளியாக்கல் என்ற பேர் கொண்ட கத்தோலிக்கக் குடும்பம் ஒன்று, பக்கத்தில் வசித்து வந்தது. அவர்கள் வீட்டில் தொம்மன், மாத்தங் குஞ்ஞு, குஞ்ஞப்பன் ஆகியோர் எனது அருமை நண்பர்கள். அங்கிருந்துதான் இதை நான் கொண்டு வந்தேன். நான் நட்டு வளர்த்த மரம் அது ! கழுதைகள் ! என்னைத் திரும்பிக்கூடப் பார்க்க வில்லை ! நான் குதித்தெழுந்து உம்மாவிடம் கேட்டேன் : " அந்த ஒரு அணாவை இப்படி எடுங்க ! "

அம்மா உடனே கொடுத்துவிட்டாள். நான் போய் பீடி வாங்கிக் கொண்டேன் ஆற்றோரம் சென்றமர்ந்தேன். என்னைத் திரும்பிப் பார்க்காத அந்தப் பெண்களை நினைத்துக்கொண்டே புகையைச் சுருள் சுருளாக ஊதித் தள்ளினேன்—ப்பூ !

இதன் பிறகும் தினசரி அந்தப் பெண்கள் என்னுடைய சாம்ப மரத்தை நோக்குவார்கள். அதில் சாம்பங் காய்கள் கொத்துக் கொத்தாகத் தொங்கிக் கொண்டிருக்கும். நான் எனக்குள்ளாகவே இவ்விதம் கூறிக்கொள்வேன் :

' கழுதைகளே, பார்த்துக்கொள்ளுங்கள் ! சா[illegible]ன்னுடையதுஎன்பதை அறிந்துகொள்ளுங்கள். இதோ இருக்கும் நான்தான் அதை நட்டு வளர்த்து மரமாக்கியவன்...! கழுதைகள் ! '

இவர்களை எப்படிப் பழிவாங்குவது? நாற்காலியில் அமர்ந்து சமயத்தை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருந்தேன். அறையில் போய்ப் படுப்பது கிடையாது. இப்படியிருக்கும்போது; கடைசியில் ஒருநாள் அவர்கள் வந்தார்கள் ! நான் எழுந்துபோய் சற்றே அதிகாரத்தோடு கேட்டேன் : " என்ன வேணும் ? "

" அரையணாவுக்குச் சாம்பங்காய்."

" முதல்லே காசை எடு."

காசை வாங்கி இடையில் செருகிக்கொண்டேன். பிறகு மிகவும் சிறியதாகப் பொறுக்கி எடுத்து, பத்துக் காய்களை அவர்களிடம் தந்தேன்.

" என்ன இது ? எல்லாம் சின்னதா இருக்குதே. அந்தப் பெரியம்மான்னு பெரிசாக் குடுப்பாங்களே ? "

" அந்தப் பெரியம்மாவுக்கு இந்த மரத்திலே பெரிதாக உரிமை ஏதும் கிடையாது. அதனாலேதான் அவங்க அப்படிச் செஞ்சாங்க. கழுதைகள் ! "

" அப்படியானா இன்னும் ஒண்ணு கூடக் கொடுங்களேன்."

"இந்த மரத்தைச் சிரமப்பட்டு நட்டு வளத்த ஆளுக்கு, அது இஷ்டமில்லே."

ஒரே ஒரு காய்கூட நான் அதிகப்படியாகக் கொடுக்கவில்லை.

"என்னு மனுசன் ஐயா!" என்று கூறியவாறே, அந்தப் பேராசைக் காரிகள் போனார்கள். பெருவயிற்றுக்காரிகள்! என்னைச் சற்றுத் திரும்பிப் பார்க்கக் கூடாதாம், ஆனால் கொஞ்சம்கூட வெட்க மில்லாமல் எனது சாம்ப மரத்தை மட்டும் பார்க்கலாமாம்.

இப்படி நான் சாம்பங்காய் விற்கையில் உம்மா வந்து காசு கேட்டாள். நான் கேட்டேன்:

"எதுக்காக? உம்மாவுக்கு இந்தச் சாம்ப மரத்துமேலே என்ன உரிமை இருக்குது? இது, என்னோடெ உழைப்பின் பலன் தெரியுதா? என்னோடெ வியர்வைத் துளிங்கதாம் இப்ப இதிலே சாம்பங்காயா தொங்குது. உம்மா இதை எத்தினி வருஷங்களா வித்துக்கிட்டு வர்றீங்க? அந்தப் பணமெல்லாம் எங்கே?"

தோற்றுப்போய் பதில் சொல்ல இயலாத நிலையில் உம்மா நின்றாள். ஆனால் நான் விடவில்லை: "போதும் போதாததற்கு எடுத்ததுக் கெல்லாம் பணம் வேறே, அது வாங்கணும் இது வாங்கணும்னு சொல்லிக்கிட்டு. எத்தினி ரூபா! உம்! இந்தப் புளிய மரத்தை யாரு நட்டாங்க?"

முற்றத்தின் ஒரு பக்கத்தில் புளிய மரம் ஒன்று உண்டு. மரத்தின் அடிமுதல் நுனிவரை பச்சைப் பசேல் என புளியங் காய்கள் நிரம்பிக் கிடக்கின்றன. அவற்றையும் உம்மா பறித்து விற்பதுண்டு. அதுவும் நான் நட்டு வளர்த்ததுதானே?

உம்மா சொன்னாள்: "அது உன் வாப்பா நட்டு வளத்தது. நானும் அதற்குக் கொஞ்சம் தண்ணி இழுத்துக் கொட்டியிருக் கறேனுக்கும்!"

அப்படியானால், அதன்மீது உடமை உரிமை ஏதும் நமக்குக் கிடையாது. உம்மா கோபத்தோடு எழுந்து உள்ளே சென்றாள்.

ஆனும்மாவைக் கூப்பிட்டு ஒரு சாயா கொண்டு வருமாறு சொன்னேன். அவள் அடுத்த வீட்டுக்குச் சென்று, ஒரு பையனை அழைத்துக் கடையிலிருந்து சாயா கொண்டு வருமாறு செய்தாள். அதைப் பருகிவிட்டு, ஒரு பீடியையும் பற்றவைத்துப் புகைத்தவாறு விச்ராந்தியாக இருக்கையில் வந்தாளே பார்க்கலாம் ஒரு அஞ்சன வண்ண மேனியாள்! பத்து, பதினாறு வயதிருக்கும். சாம்பக் காய்க் காகத்தான் இவளும் வருகிறாள். காலணுக்காரியா? அரையணுக் காரியா? இந்தக் கழுதைக்கும் சின்னதாகப் பார்த்துப் பொறுக்கித்

தான் கொடுப்பேன் ! ஆனால், அவள் சாம்ப மரம் இருந்த திசையைப் பார்க்கவே இல்லை ! நேராக நானிருக்குமிடம் வந்து, என்னை வணங்கிவிட்டுச் சொன்னாள் :

" எனக்குச் சாரை நல்லாத் தெரியும். சாருடைய எல்லாப் புத்தகங்களையும் நான் படிச்சிருக்கறேன் நீங்க ஊர் திரும்பியிருக் கீங்கன்னு எங்க அப்பா சொன்னாரு. அதனாலேதான் வந்தேன். என் ஆட்டோகிராப் புத்தகத்திலே நீங்க எதுனாச்சியும் எழுதிக் கையெழுத்துப் போட்டுத் தரணும். "

ஆ ! மானம் காக்க வந்த சியாமள சுந்தரியே ! உனக்கு மங்கள முண்டாகட்டும்.

" உன் பேரென்ன ? "

" சுஹாஸினி ".

" எந்த வகுப்பிலே படிக்கறே ? "

" ஸிக்ஸ்திலே ".

" யாருடைய பொண்ணு ? "

" கூலிக்காரர் மாதவனுடைய பொண்ணுங்க. "

தொழிலாளியின் பெண்ணல்லவா ? தொழிலாளிகளுக்கு வெற்றி யுண்டாகட்டும் !

நான் அறைக்குள் சென்று, பேனாவை எடுத்து வந்தேன். சுஹாஸினியின் ஆட்டோகிராப் புத்தகத்தை வாங்கி " சுஹாஸினிக்குச் சர்வ மங்களமும் ஏற்படட்டும் " என்றெழுதி கையெழுத்தையும் போட்டுக் கொடுத்தேன். பிறகு அவளிடம் கேட்டேன் : " சாம்பங்காய் தின்கிறாயா ? "

" தின்றிருக்கிறேன் " என்று அவள் சொன்னாள்.

ஒரு பெரிய காகிதத்தை எடுத்து வந்து, சாம்ப மரத்தின்மேல் ஏறி முத்தலாகவும் சிவப்பாகவும் உள்ள ஒரு 50 காயைப் பறித்துக் கட்டிக் கொடுத்தவாறே நான் அவளிடம் சொன்னேன் : " சுஹாஸினி, இந்தச் சாம்ப மரத்தை நானே நட்டு வளர்த்தேன் தெரியுமா ? "

" உம் ! நிசம்மாவா ? "

" சத்தியமா. "

அவள் வணங்கிவிட்டுச் சென்றாள்.

அன்று இரவு ஒரு புதிய சங்கதி கேள்விப்பட்டேன். பாத்தும்மா வுடைய ஆடு உடனே பிரசவிக்கப் போகிறது ! கர்ப்பமாக இருக் கிறது என்று அல்ல ; உடனடியாகப் பிரசவிக்கவே போகிறது என்று! இந்த முக்கியமான விஷயம் எனக்கு எப்படித் தெரியாமல் போயிற்று ! அது கர்ப்பமாகியிருப்பதுபோலத் தோன்றவே

இல்லையே! சிலசமயம் வயிறு பெரிதாக உப்பி இருக்கும்; சிலசமயம் வயிறு ஒட்டி இருக்கும். கர்ப்பமாக இருந்தால் இப்படி இருக்குமா? நான் உம்மாவைக் கேட்டேன்!

உம்மா சொன்னாள்: "அதுக்கு இப்ப பேறுகாலம்."

எனக்குச் சந்தேகம். நிசம்தானா?

## 3

அதாவது பாத்தும்மாவுடைய ஆடு உடனே பிரசவிக்கப்போகிறது. நல்ல செய்திதான். பிரசவிக்கட்டும். எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது.

ஆனும்மா, என்னுடைய அறையைப் பெருக்கி, படுக்கையைத் தட்டி உதறி வெய்யிலில் போட்டுவிட்டு வந்ததும் நான் கேட்டேன்: "ஏம்மா, ஆட்டுக்கு ஏதனாச்சியும் கொடுத்தியா?"

"அதுக்குக் கஞ்சித் தண்ணி கொடுத்தாச்சு" என்று ஆனும்மா சொன்னாள்.

"கஞ்சித் தண்ணி மட்டும் கொடுத்தாப் போதாது. அதுக்குப் புதுப் புல்லு கொடுக்கணும். கொஞ்சம் பிண்ணாக்கு வாங்கி தண்ணீரில் கலக்கிக் கொடுத்தா, ரொம்ப நல்லது."

இத்தகைய உபதேசங்களையெல்லாம் அவளுக்கு வழங்கிய பிறகு, நிறைய பழத்தோல்களையும் ஒரு சிறிய பழத்தையும் ஆனும்மாவிடம் கொடுத்து ஆட்டுக்குக் கொடுக்கும்படி சொன்னேன்.

என் கண்ணெதிரிலேயே ஆனும்மா இவற்றையெல்லாம் ஆட்டுக்குப் பிரியத்தோடு ஊட்டுவதையும் கண்டேன். ஆயினும் பெண்கள் ஆட்டின் கர்ப்பம் சம்பந்தமாகத் தப்புக் கணக்குப் போட்டிருக்கிறார்கள் என்றே எனக்குத் தோன்றியது. இந்த விஷயங்களிலெல்லாம் பெண்கள்தாம் அதாரிட்டிகள். இதை நான் ஒப்புக் கொள்ளவே செய்கிறேன். இருந்தாலும்......ஆட்டின் கர்ப்பம் சம்பந்தப்பட்ட மட்டில் இதோ, பெண்கள் பெரிய பிசகு செய்திருக்கிறார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. எனக்கு அபரிமிதமான மகிழ்ச்சி ஏற்பட்டது. ஏனென்றால் எனக்கு முன்னால் நின்று கொண்டிருக்கும் ஆடு கர்ப்பமாக இருக்கவில்லை! வயிறு நன்றாக ஒட்டிக்

கிடந்தது! ஆடு சாம்ப மரத்தின் அடியில் விழுந்து கிடக்கும் சாம்பங் காய்களைத் தின்று கொண்டிருந்தது. கூடவே உம்மாவும் இருந்தாள். அவள் சாம்பங்காய்களைப் பொறுக்கி எடுத்துக்கொண்டிருந்தாள்.

சிவந்த நிறமுடைய பெரும் பனித்துளிகளைப் போல, பச்சை இலைகளினூடே சாம்பங்காய்கள் தொங்கிக் கொண்டிருக்கின்றன, எனக்கு நேர் எதிராக, முற்றத்தை அடுத்து!

நான் அவற்றைப்பார்த்து ரசித்துக்கொண்டிருக்கையில் பாத்தும்மா வந்தாள்! என்ன ஆச்சரியம்! அவளுடன் கூட ஒரு ஆடும் வருகிறது; கதீஜாவும் வருகிறாள். ஆனால் பாத்தும்மாவுடன் கூட வரும் ஆடு, கர்ப்பமாகவிருக்கிறது!

நான் ஆனும்மாவைக் கேட்டேன்: "இந்த ஆடு யாருது?"

ஆனும்மா: "என்னுது. அக்கா கொடுத்தாங்க."

பாத்தும்மா, ஆனும்மாவுக்குத் தந்திருக்கிறாள்.

உம்மா சொன்னாள்: "பாத்தும்மாவோட ஆட்டின் முதல் குட்டி இது."

அப்போ, ஆனும்மாவுக்கும் ஒரு ஆடு இருக்கிறது. இதே வீட்டில் எனக்கருகிலேயே அதுவும் வாழ்ந்து வருகிறது; இருந்தும் எனக்கு அது பற்றித் தெரியவில்லை! இரண்டுக்குமிடையே உள்ள வேறுபாடு எனக்குத் தெரியவில்லை. இரண்டுமே ஒரே மாதிரி தவிட்டு நிறமுடையவை. பிறகு நான் சரியாகக் கூர்ந்து கவனித்ததில், பாத்தும்மாவுடைய ஆட்டின் கண்களைச் சுற்றிலும் கருமை காணப் பட்டது. வந்தவுடனேயே பாத்தும்மாவுடைய ஆடு நேராக வீட்டுக் குள்ளே ஓடியது. நான் அவளிடம் கேட்டேன்: "என்ன பாத்தும்மா ஆடும் நீயும் இன்னிக்கு ஏன் லேட்டு?"

பாத்தும்மா அதற்கான காரணத்தை விவரமாகச் சொன்னாள்: கொச்சுண்ணி வாங்கிக் கொடுக்கும் புல் (இரவுக்கானது) போது மானதாக இல்லை. கர்ப்பமுற்றுள்ள ஆடு அல்லவா? அதனால், மைதானங்கள் வயல் வரப்புக்கள் போன்ற இடங்களுக்குச் சென்று, மற்றவர்கள் புல்லைப் பிடுங்கிச் செல்லுமுன்பாக, அவற்றைப் பிடுங்கி, ஆட்டுக்கு கொடுத்துவிட்டு வந்திருக்கிறாள்.

பாத்தும்மா உள்ளே சென்று அண்ணிமாருடனும் தங்கையுடனும் சண்டை பிடிக்கத் தொடங்கினாள். பாத்தும்மாவின் ஆட்டுக்கு வைத்திருந்த கஞ்சித் தண்ணீர் மிகவும் குறைவு!.

"ஆனும்மா அதை எடுத்துத் தன்னுடைய ஆட்டுக்குக் கொடுத் திருக்கிறா! ஆனா அண்ணிங்க இத கவனிக்காம என்ன செஞ்சிக்கிட்டு இருந்தாங்க?"

நாத்தி - அண்ணிப் போர் ஒன்றை ரஸிக்கலாம் என நான் ஆவலோடு காத்திருந்தேன். மாமி-மருமகள் சண்டையோ, மருமகள் களுக்கிடையே சண்டையோ, இதுவரை கேட்க இயலவில்லை. உம்மா வுடைய குரல் மாத்திரமே உச்சஸ்தாயியில் கேட்கும். எல்லோரையும் நன்கு அதட்டுவாள். இப்போது ஆனும்மாவுடைய குரல் இரைந்து கேட்டது :

" என் ஆட்டுக்குக் கொஞ்சம்தான் கஞ்சித் தண்ணி கொடுக்கறது வழக்கம். கொஞ்சத்தை நாங்க குடிச்சோம். மீதியை அப்படியே வெச்சிருக்கரும் "

நான் கொடுத்த பழத்தோல்களையும் ஆனும்மாவுடைய ஆடுதான் தின்றிருக்கிறது என்ற விஷயத்தை, நான் வெளியே சொல்லவே யில்லை.

" போதும், போதும். நீ ஒண்ணும் சொல்ல வேணும்." பிறகு பாத்தும்மா குறைபட்டுக் கொண்டாள் : " அம்மாவுக்கும்தான் என்னைக் கண்டா பிடிக்காதே ! "

" அடீ, மரச்சீனிக் கிழங்கை வேகவச்சித் தின்னபிறவுதான், கொஞ்சம் கஞ்சித்தண்ணி குடிக்கறது வழக்கம். நாங்களும் கொஞ்ச மாத்தான் குடிச்சோம். உன் ஆட்டுக்குத்தான் மீதியை அப்படியே வெச்சிருந்தோம் ! "

மரச்சீனிக் கிழங்கை வேகவைத்து உரித்துத் தின்றபிறகு கஞ்சித் தண்ணியைக் குடிக்கவேண்டும் என்று சொன்னார்களே ? மரச் சீனியை இவர்கள் எப்போது சாப்பிடுகிறார்கள் ? பரிதாபகரமான ரகசியம் எதுவும் நெருக்குதல் நேரும்போதல்லவா வெளிப்படுகிறது ! உம்மா, ஆனும்மா, ஐசோம்மா, குஞ்ஞானும்மா இத்துணைபேரும் சரிவர சாதம் சாப்பிடுவது கிடையாது. அவர்கட்குச் சாப்பாடு கிடைப்பதில்லை என்பதே இதன் பொருளாகும். ஆண்களுக்கும் குழந்தைகளுக்கும் மட்டுமே சாதம் போடப்படுகிறது ; மற்றவர்கள் மரச்சீனிக்கிழங்கை* உண்டு வாழ்கிறார்கள். காலை பதினொரு மணி வாக்கில் உலர்ந்த மரச்சீனிக் கிழங்கை இடித்துப் பொடி செய்து அதைக் கொண்டு 'புட்டு' தயாரித்துத் தின்கிறார்கள். ஒரு சிட்டிகைத் தேயிலையை (அது அநேகமாக சுலைமான் தந்ததாகவே இருக்கும்) வெந்நீரில் போட்டு சர்க்கரையோ பாலோ சேர்க்காமல் குடிப்பார்கள். பிறகு வேலையில் முனைந்து ஈடுபடுவார்கள். எல்லோருக்குமே இடுப்பொடிய நிறைய வேலை இருக்கும். ஆண்கள் மதியச் சாப்பாட்டுக்குத்தான் வீடு திரும்புவார்கள். பெண்கள்தாம்

* கேரளத்தில் மரவள்ளிக் கிழங்கை, மரச்சீனி என்பர்.

துன்பங்களையெல்லாம் அனுபவிக்கிறார்கள். இது என் வீட்டில் மட்டுமல்ல. பெரும்பாலான நடுத்தரக் குடும்பங்கள் அனைத்திலுமே இந்த நிலைமைதான். ஸ்திரீகள் மகத்தான சேவை, தியாகம் செய்து வருகிறார்கள்; ஆனால் ஆண்கள் இதனை உணருவது இல்லை?

அப்துல் காதரின் மனைவி குஞ்ஞானும்மாவின் குரல் கேட்டது:

"பாத்தும்மா அக்கா, ஆடு பெத்ததும் எங்களை மறந்துடாதீங்க. சுபைதாவுக்குக் கொஞ்சம் பால் தரணும் என்ன?"

ஹனீஃபாவின் பெண்டாட்டி ஐசோம்மா கேட்டாள்: "ஏனும்? பால் என் ரஷீதோட தொண்டைக்குள்ளே எறங்காதா என்ன?

சுலைமானின் மறுபாதி ஆனும்மா சொன்னாள்:

"என் ஸயிது முகம்மதும் பால் குடிக்கறதாலே ஒண்ணும் கொறஞ்சு போயிடமாட்டான்."

ஆனும்மா ஸ்கூல் சென்று படித்தவள். பாத்தும்மா ஆனும்மா வுக்குத் தமக்கை என்றாலும், அதிகம் எழுத படிக்கக் கற்றவள் அல்ல. அதனால் பாத்தும்மா சொன்னாள்: "போதும் போதும். வாழைப்பழத்திலே ஊசி ஏத்தறதே உன் வழக்கம்."

சற்றுப் பொறுத்து நான் சந்தடியின்றி மெதுவாக எனது அறைக்குள் சென்றபோது, பாத்தும்மாவின் ஆடு அங்கு இருப்பதைக் கண்டேன். என் பெட்டியின் மேல் வைக்கப்பட்டிருந்த நேந்திரம் பழங்களில், இரண்டினை அது தின்றுவிட்டிருந்தது. அது பாத்தும்மா வுடைய ஆடேதான்! கிழக்குப்புறத்து வாயில் கதவின் வழியாக, அது உள்ளே வந்திருக்கிறது; அந்தக் கதவைச் சாத்த ஆனும்மா மறந்திருக்கிறாள்.

நான் கூச்சல் போட்டேன்: "பாத்தும்மா ஆனும்மா ஓடி வாங்க! உங்க ஆடு பெரிய நேந்திரம்பழம் திங்குது பாருங்க!"

இருவரும் அலறிப் புடைத்துக்கொண்டு ஓடி வந்தார்கள். ஆனும்மாவுக்கு பரம திருப்தி. அவள் சொன்னாள்: "இது அக்கா வுடைய ஆடு."

"போனாப் போவுது இக்காக்கா"—பாத்தும்மா சொன்னாள்: "நான் வேறே ரெண்டு பழம் வாங்கித் தந்திடறேன். அதுக்குப் பசி தாங்கலைப் போயிருக்குது, பாவம்."

ஆனும்மா சொன்னாள்:

"இதுக்கு எதைச் சாப்பிட்டாத்தான் என்ன! பசி அடங்கவே அடங்காது. என் ஆட்டோட புல்லையுமல்ல அது திருடித் திங்குது."

பாத்தும்மா கடுகடுத்தாள்:

"போதும் போதும், உன் ஆடும் உன் புல்லும்!"

நான் சொன்னேன் :

"போனாப் போவுது விடுங்க. பாத்தும்மா, நீ குழந்தைகளுக் கெல்லாம் ஆட்டின் பால் தரணும் என்ன !"

"அது எப்படி காக்கா முடியும்? செலவு எவ்வளவு இருக்குது? பாலு விக்கிற பணத்தைக் கொண்டுதான், எங்க வீட்டு வாசக் கதவைச் சரிபண்ணணும் !"

என்ன செய்வது? பாத்தும்மாவும் கொச்சுண்ணியும் கதீஜாவும் வசித்து வரும் வீட்டின் கதவு, கயிற்றால் கட்டி வைக்கப்பட்டுள்ளது. அதை முதலில் சரிப்படுத்தியாக வேண்டுமே !

வீட்டில் உள்ள பெண்களுக்கெல்லாம் நான் இங்கிருந்து புறப்படு முன்பாக, குறைந்த பட்சம் ஒரே ஒரு தடவையாவது வயிறு நிரம்பச் சாப்பாடு கிடைக்கும்படிச் செய்யவேண்டும். அதுக்குப் பணத்துக்கு எங்கே போவது? என்னிடமோ சல்லிக்காசு கூடக் கிடையாது. இருந்ததை எல்லாம் எல்லோருக்குமாகப் பங்கு போட்டுக் கொடுத் தாகிவிட்டது. பங்கிட்டுக் கொடுத்தேன் என்று சொன்னால் அது வெறும் மரியாதை நிமித்தமாகத்தான். உண்மையைச் சொல்லப் போனால், எல்லோரும் என்னிடமிருந்து பறித்துக் கொண்டு போனார்கள் என்று சொல்வதுதான் பொருத்தமாகும். பிறகு என்னை நிர்ப்பந்தமாக இத்தகைய ஒரு நிலைமையில் அமர்த்தி வைத்துள்ளனர்.

நினைக்க நினைக்கப் பற்றிக்கொண்டு வருகிறது. நான் என்ன வெல்லாம் வாங்கித் தந்திருக்கிறேன் ! பணமாகக் கொடுத்திருக் கிறேன். பாத்திரங்கள் வாங்கிக் கொடுத்தேன். கண்ணாடிச் சாமான்கள் வாங்கிக் கொடுத்தேன். பெண்கள் தலைக்குத் 'தட்டம் முண்டுகள்' வாங்கித் தந்தேன். இவ்வளவெல்லாம் செய்தும் "நான் ஒன்றுமே தரவில்லை" என்பதுதான் எல்லோருக்குமுள்ள குறை. எனக்கு இப்போ வந்திருக்கும் கோபத்துக்கு அளவே கிடையாது. இடம் கிடைத்ததோ, போயிற்று ! நான் யாரையும் விடபோவதில்லை. அபுவைத் திட்டுவேன். அப்துல் காதரைத் திட்டி நொறுக்குவேன். ஹனீஃபாவையும் விடப்போவதில்லை. அப்துல் காதர், ஹனீஃபா, சுலைமான் ஆகிய மூவரது குழந்தைகளையும் அடிப்பேன். ஆனால் பாத்தும்மாவின் மகள் கதீஜாவை அடிக்க மாட்டேன். ஏனெனில் அவள் தான் வெளியே தென்படுவதே கிடையாது ! வாய்க்கு வந்தபடி கூச்சலிடும்போது வீட்டில் உள்ள பெண்கள் யாரையும் விட்டு வைக்க மாட்டேன். குறிப்பாகத் தம்பி மாரின் மனைவியரைத் திட்டாமல் இருக்கமாட்டேன். என்னுடைய

குரல் படிப்படியாக உயர்ந்து உச்சஸ்தாயியை எட்டும்போது வீடு நிசப்தமாகிவிடும்! ஒரே அமைதிதான். நான் எதையோ சாதித்து விட்ட தோரணையில் அப்படியே அமர்ந்து கொண்டிருப்பேன்.

பாத்தும்மாவுடைய ஆடு முற்றத்தில் நின்று கொண்டிருக்கிறது. உலர்ந்த பலா இலைகளைத் தின்று கொண்டிருக்கிறது. தின்று வயிற்றை நிரப்பிக் கொள்ளட்டும்! அப்போதுதான் பிரசவிக்கையில் நிறைய பால் சுரக்கும். சுபைதா, ரஷீத், கதீஜா, அபி, ஸையது முகம்மது பாத்துக்குட்டி முதலிய குழந்தைகள் எல்லோருமே கொஞ்சம் பால் குடிப்பது நல்லது. ஆனால் பால், நெய் இதில் ஒன்றையும் என் வீட்டில் யாருமே பயன்படுத்துவது கிடையாது. நான் நெய் சாப்பிடுகிறேன்; பாலும் நான் குடிப்பது உண்டு. ஆனால் என் விஷயத்தில் மட்டும் இங்கு ஸ்பெஷல் சலுகை உண்டு. நெய், பால் விஷயத்தைக் கூறும்போது ஒரு சம்பவம் என் நினைவுக்கு வருகிறது. பத்து, இருபது இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு நடந்த சங்கதி இது.

நானும், அப்துல் காதரும், ஹனீஃபாவும், பாத்தும்மாவும், மட்டுமே அப்போது பிறந்திருந்தோம். ஆனும்மா பிறந்து விட்டாளா இல்லையா என்பது சரியாக நினைவு இல்லை. அபு பிறக்கவில்லை என்பது மட்டும் நிச்சயம்.

அப்போது வீட்டில் கறவைமாடு இருந்தது. பாலுக்கும் தயிருக்கும் பஞ்சமே கிடையாது.

வாப்பா மர வியாபாரத்துடன் படகு வியாபாரத்தையும் நடத்தி வந்தார். மலைகளிலிருந்து மரங்களை வெட்டி, அங்கிருந்தே அவற்றைப் படகுகளில் ஏற்றி நதிகளின் வழியாக மொத்தம் மொத்தமாகக் கொண்டுவந்து இறக்கித், தச்சர்களை விட்டு நன்றாகச் சீவி இழைக்குமாறு செய்து மொத்தக் கணக்கில் பெரும் தொகைக்கு அவற்றை விற்பது வழக்கம்.

அப்போது வீட்டில் எப்போதுமே நெய் இருக்கும்; மஞ்சள் நிறத்தில் பெரிய மணல் போல. கம்மென்று வாசனை வீசும் நெய். ஒரு பெரிய பளிங்கு ஜாடி நிறைய அப்படியே வைக்கப்பட்டிருக்கும். கடையத்தூர் மலைகளில் நிறையக் காணப்படும் குருந்தோட்டி இலைகளைத் தின்று வளர்ந்த பசுவுடைய நெய்தான் அது. இந்த விவரங்களையெல்லாம் வாப்பா சொன்னதாக எனக்கு நினைவிருக்கிறது. நெய் ஜாடிக்கு அருகே வைக்கப்பட்டிருந்த ஜாடியில் சர்க்கரை இருந்தது. இந்த இரண்டு பளிங்கு ஜாடிகளுமே மூலையில் இருந்த பலகையில் வைக்கப்பட்டிருந்தன.

சாதத்திலும் பலகாரங்களிலும் இந்த நெய்யைச் சேர்த்துக்கொண்டு தான் நாங்கள் சாப்பிடுவோம்.

அந்தக் காலத்தில், வாப்பாவிடம் நான் நிறைய அடி வாங்கி யிருக்கிறேன். அப்துல் காதர் ஒரு போதும் அடி வாங்கியதே கிடையாது. அந்தப் பாக்கியம் எனக்கு மட்டும் சுலபமாகக் கிடைத்து வந்தது. சில சமயம் காரணத்தோடும், சில சமயம் காரணமே இல்லாமலும் கூட அடிகள் கிடைத்து வந்தன. தந்தை மாரும் குழந்தைகளை அடிப்பார்கள். அம்மாக்களும் மக்களை அடிப்பர். ஓ...என் உம்மாவும் என்னை நிறைய அடித்திருக்கிருள்! கரண்டிக் காம்பினுல் என்னை அடித்து அடித்து சமையலறையி லிருந்து வெளியே விரட்டுவாள். அந்தக் காலத்தில் எனக்கு, எப்போதுமே ஏதாவது தின்றுகொண்டே இருக்கவேண்டும். அடுக் களைக்குள் புகுந்து பாத்திரங்களையும் டப்பாக்களையும் சோதனை யிடுவேன். ஏதாவது கிடைத்தால் அதை வாரித் தின்பேன். அப்துல் காதரும் இப்படியே தின்றிருக்கிருன். ஆனுல் யாரும் அதை நம்பமாட்டார்கள். அவன் திருடித் தின்ருலும் நான்தான் ஜவாப் தாரி. எனக்குத் தான் அடி கிடைக்கும்.

அன்ருெரு நாள் காலை நாஸ்தாவுக்கும் மதியச் சாப்பாட்டுக்கும் இடையில் உள்ள சுபமுகூர்த்த வேளை. கொஞ்சம் கொஞ்சமாகப் பசியெடுக்க ஆரம்பித்திருந்தது. நொறுக்குத் தீனி ஏதேனும் தின்னு வதற்கு ஏற்ற சமயம் அது!. நான் சமையல் அறைப் பக்கமாக நழுவினேன். அங்கு உம்மா இருந்தாள். வேலைக்காரியுமிருந்தாள். வேலைக்காரியின் பெயர் நங்கேலி என்பது. இந்த நங்கேலியும் என்னை அடிப்பாள். அடித்து அடித்து என்னை விரட்டுவாள்.

நான் சின்ன எசமானன்! சின்ன எசமானை வேலைக்காரி அடிக்கக் கூடாது. ஆனுல், இந்த நியாயம் ஒன்றும் எனது வீட்டில் கிடை யாது. உம்மாவிடம் சொன்னுல்: "நல்லா வேணும், நீ கைபோட்டு ஏன் வாரித் தின்னே?" என்றுதான் கூறுவாள். அதோடு, இந்த நங்கேலியிடம் நான் பால் குடித்திருக்கிறேன் என்று வேறு சொல்லு வாள். [பல பெண்களிடம் நான் பால் குடித்திருப்பதாக உம்மாவும் மற்றவர்களும் சொல்லிக் கேட்டிருக்கிறேன்.]

நான் என்ன செய்யலாம் என்று ஆராய்ந்தேன். ஒரு பச்சை மாங்காயையாவது கடித்துத் தின்னலாம். ஆனுல் அதற்கும் வழி யில்லை. நங்கேலி சொன்னுள்: "பசிக்கட்டும், கொஞ்ச நேரத்துக்கு அப்படியே இரு. இதோ சாப்பாடு போடறேன். இல்லே முதுகிலே ரெண்டு வைக்கட்டுமா?"

ஐய்ய! நான் பேசாமல் அங்கிருந்து வெளியேறினேன். இங்கு மங்குமாகச் சற்று நேரம் சுற்றிவிட்டு வீட்டுக்குள் சென்றபோது, புதிய கண்டுபிடிப்பு ஒன்றை நடத்தினேன். நெய் ஜாடியும் சர்க்கரை ஜாடியும் அருகருகே இருக்கின்றன; இந்த இரண்டையும் ஒன்ருகக் கலந்தால் தின்பதற்கு ருசியான பண்டம் ஒன்று தயாராகிவிடும்! இதன் பிறகு நேரத்தை வீணக்க நான் விரும்பவில்லை. யாருக்கும் தெரியாமல் குழிக் கிண்ணம் ஒன்றை எடுத்து வந்தேன். பிறகு சுற்றும் முற்றும் கவனமாக ஆராய்ந்துவிட்டு, மெதுவே வாப்பாவின் படுக்கை யறைக்குள் சென்றேன். நெய் ஜாடியை மெல்ல எடுத்து வாப்பாவின் கட்டிலின் மீது வைத்தேன். மூடியை மெதுவாகத் திறந்து என்னுடைய பரிசுத்தமான கையினுல் நெய்யை வாரி யெடுத்துப் பாதிக் கிண்ணம் வரை நிறைத்தேன். பிறகு நெய் ஜாடியை எடுத்து மூலைப் பலகையில் வைத்தேன். சர்க்கரையையும் இதேபோலக் கிண்ணத்தில் தாராளமாகக் கொட்டி நிரப்பினேன். இரண்டு ஜாடிகளுமே இப்போது அதனதன் இடத்தில் வைக்கப் பட்டு விட்டன. யார் பார்த்தாலும் அதில் எந்தவித மாற்றமும் இருப்பதாகத் தோன்ருதவாறு கச்சிதமாகக் காரியத்தை முடித் திருந்தேன். சர்க்கரையையும் நெய்யையும் எடுத்துக் கொண்ட பிறகு, வாப்பா எப்படி கரண்டியை ஜாடிக்குள் விட்டு அவற்றை சமப்படுத்துவாரோ அதேபோல, நான் எனது கையின ஜாடிக்குள் விட்டு நெய்யையும் சர்க்கரையையும் சமமாகப் பரப்பி வைத்தேன். பிறகு வாப்பாவின் கட்டிலில் அமர்ந்து கிண்ணத்து நெய்யையும் சர்க்கரையையும் சேர்த்துக் குழைத்து, கொஞ்சம் வாயில் போட்டுக் கொண்டு 'கரும் முரும்' என்று கடித்து மென்று தின்னத் துவங் கினேன். அஸ்கா சர்க்கரை! அதனுல் இன்னும் கரைந்தபாடில்லை. ஆயினும் மிகவும் ஸ்டைலாக சுவைத்துத் தின்று கொண்டிருந்தேன்.

அப்போது மிகவும் மெதுவான அடங்கிய குரலில் ஒரு கேள்வி! எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. கேள்வியைத் தொடுத்தது அப்துல் காதர்! அருகேயேதான் நின்றுகொண்டிருந்தான். இவன் எப்படி, எப்போது, அறைக்குள் வந்தான்? தீர்மானமாகத் தெரிய வில்லை. அவன் மெள்ளக் கேட்டான்: "இக்காக்கா என்ன தின்றே?"

"ஒரு மருந்து."

"நான் உங்க பின்னுலேயே நின்னுகிட்டு எல்லாம் பார்த்துக் கிட்டேதான் இருந்தேன்; எனக்கும் கொடு; இல்லே எல்லாத்தை யும் நான் வெளியே போய்ச் சொல்லிடுவேன்!

பரம ரகசியமான விஷயம் போல நான் மெதுவாகக் கேட்டேன் : " அடே நீ என் தம்பியல்ல ? "

" அப்படியானு எனக்கும் தா ! "

நான் அவனுக்கும் கொடுத்தேன், கிண்ணத்தை நக்கித் துடைத்தது அவன் தான்.

" இனிமே நான் எடுக்கவே மாட்டேன் "—நான் சொன்னேன் : " நீயும் எடுக்காதே என்ன ! "

இந்த உடன்பாட்டின் பேரில் நாங்கள் அறையை விட்டு வெளி யேறினோம். கிண்ணத்தை இருந்த இடத்திலேயே கொண்டு போய் வைத்து விட்டு உலகில் எதுவுமே நடக்காத மாதிரி நாங்கள் வெளி யேறினோம்.

இதன் பிறகு நெய்யும் சர்க்கரையும் இருந்த திசை பக்கமே நான் செல்லவில்லை; அவற்றைத் தொடவுமில்லை என்பது கலப்படமற்ற உண்மையாகும். நெய்யின் நன்மை தீமை என்ன என்பதும் எனக்குத் தெரியாது தின்பதற்கு ஏதும் கிடைக்காதபோது அவற்றை எடுத்து தின்றேன் அவ்வளவுதான். வீட்டில் அப்போ தெல்லாம் தின்பதற்குப் பல பண்டங்கள் இருக்கும். பழுத்த பலாப் பழங்களும் மாம்பழங்களும் இருந்தன. பொரித்து வைக்கப்பட்ட இறைச்சி ஒரு ஜாடி நிறைய அலமாரியில் இருந்தது. எனக்கு அக்கறையெல்லாம் இவற்றில்தான்.

இப்படியே நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. அப்பாவியான எனக்கு இதோ அடி கிடைக்கத் தொடங்கியுள்ளது ; அப்துல் காதருக்கு நோய் கண்டிருக்கிறது !

நான் அடிபடும் காரணம், யாரோ நெய்யை அள்ளி அள்ளித் திருடித் தின்கிறார்கள். ஜாடிக்கு வெளியிலும் கட்டிலிலும் ரேகை அடையாளங்கள் காணப்படுகின்றன. நான் நிறைய அடி வாங்கினேன். அப்துல் காதரின் நோய்தான் விசித்திரமானதாக இருந்தது. அவன் பலூன் மாதிரி உப்பிக்கொண்டே போனான். எப்போது பார்த்தாலும் தண்ணீரைத் தண்ணீரைக் குடித்தான். அவனால் எதையுமே தின்ன முடியாமல் போயிற்று.

" குழந்தைக்கு ஏதோ பெரிய நோய் வந்திடிச்சி. " உம்மாவும் நங்கேலியும் சொன்னார்கள். அப்பா நாட்டு வைத்தியரைக் கூட்டி வரப் போனார். அப்போதெல்லாம் 'கணியான்'தான் பெரிய வைத் தியன். அப்போது உம்மா அப்துல் காதரை மடிமேல் கிடத்திய வண்ணம், அவனைத் தடவிக் கொடுத்தபடியே வருத்தத்தோடு சொன்னாள் :

"ஏ அல்லா! என் தங்கத்துக்கு என்ன ஆயிடுச்சு?"

நங்கேலி சொன்னாள்:

"ஆண்டவனே, என் பொன்குடத்துக்கு எதுவும் வராம காப்பாத்து!"

அப்துல் காதர் எந்தவிதக் கவலையுமின்றி, நோயாளியாக, தடியனாக, செல்லக் குழந்தையாக இருந்து வந்தான்.

"அடே திருடா! நீ அந்த நெய்யெல்லாத்தையும் திருடித் தின்னுக்கிட்டு தடியனா உப்பிக்கிட்டே போறே இல்லே?" என்று சொல்லும் பாவனையில் நான் அவனது முகத்தை உற்றுப் பார்த்தேன்.

ஆனால், இதற்கெல்லாம் அவன் மசியவே இல்லை. கணியான் வந்தான். அதன் பிறகு வேறு ஒரு வைத்தியர் வேலன் வந்தார். அதன் பிறகு ஒரு முஸ்லிம் நாட்டு வைத்தியர் முசலியாரும் வந்து பார்த்தார்.

நாட்கள் நகர்ந்தன; நெய்யும் குறைந்து கொண்டே போயிற்று. வழக்கம் போல நான் அடி வாங்கிக்கொண்டுமிருந்தேன். அப்துல் காதர் பெருத்துக் கொண்டே போனான். அவன் மருந்து எதையும் சாப்பிடவே மாட்டான். யாருக்கும் தெரியாமல் அதை அவன் வெளியே கொட்டுவான். எப்போதேனும் கொஞ்சம் சாப்பிடுவான். அவ்வளவுதான். அவன் நோயாளியானதால் எல்லோரும் அவனிடம் பிரியமாக இருந்து வந்தனர். அவனுக்குச் சோர்வு ஏதும் கிடையாது. நன்றாகவே சுற்றுவான். தினமும் நெய்யையும் சர்க்கரையையும் அவன் தின்கிறான் என்பது எனக்குத் தெரியும். ஆனால் யாரிடம் போய் இதைச் சொல்வது? சொன்னாலும் யாரும் நம்பவும் மாட்டார்கள்.

ஒரு நாள் அவனுக்கு நான் கொஞ்சம் பொரித்த இறைச்சி கொடுத்தேன். யாரும் அறியாதவாறு அலமாரிக்குள்ளிலிருந்து நான் அதனைத் திருடி எடுத்திருந்தேன். அவன் அதை வாங்கித் தின்றான். அப்போது நான் கேட்டேன்:

"அடே, நீ என் தம்பி இல்லே! நிஜத்தை சொல்லு. நீ இப்படிப் பெருத்து போனது எப்படி? நெய்யும் சர்க்கரையும் தின்று தானே?"

"பேசாம போ, இக்காக்கா. எனக்கு உடம்பு நோவுன்னு சொல்லலே?"

இவனுடைய திருட்டை அம்பலப்படுத்த வழி என்ன? சொல்லப் போனால் யாரும் நம்ப மாட்டார்கள். இருந்தாலும் நான் உம்மாவிடம்

சொன்னேன், நங்கேலியிடமும் சொன்னேன், நெய்யையும் சர்க்கரையையும் தின்று முடிக்கும் பெரும் திருடன் அவன் தான் என்று !

நான் எண்ணியது போலவே யாரும் எனது கூற்றைத் துளியும் நம்பவே இல்லை. ஏழை சொல் அம்பலம் ஏறுமா ? ஆயினும் எனது நல்லிதயத்தின் சக்தியால் ஒரு சம்பவம் நடக்கவே செய்தது.

ஒரு வெள்ளிக்கிழமை. வாப்பா நமாஸ் ஓதுவதற்காகப் பள்ளி வாசலுக்குப் போயிருந்தார். அடுத்த வீட்டில் உம்மாவும் வேறு சில பெண்களுமாகத் தலையில் பேனெடுத்துக் கொண்டும், ஊர்க் கதைகளைப் பேசிக்கொண்டும், வம்பளந்து கொண்டிருந்தார்கள். அப்துல் காதரின் விசித்திரமான நோய் பற்றித்தும் பேச்சு அடிபட்டது. எல்லாவற்றையும் கேட்டுவிட்டு நான் வீட்டுக்கு வந்தேன். நங்கேலி தூங்கிக்கொண்டிருந்தாள். சமையலறைக்குள் சென்ற நான் இங்குமங்குமாகச் சற்று நேரம் குடைந்தேன். சிலவற்றைக் கைபோட்டு வாரி வாயில் போட்டுக்கொண்டேன். பிறகு அங்கிருந்து உள்வழியாக வராந்தாவுக்கு வந்து கொண்டிருந்தேன். வாப்பா படுக்கும் அறையில் ஏதோ ஒரு சலசலப்பு : கருமுற சத்தம் !...

நான் மெல்ல எட்டிப் பார்த்தேன். வாப்பாவின் கட்டிலின் கீழ் இரண்டு கால்கள் : ஒன்று தொய்ந்து—தொங்கும் கால்.

அப்துல் காதர் நெய்யும் சர்க்கரையும் தின்று கொண்டிருக்கிறான் !

நான் ஓசைப்படாமல் பூனைபோல வெளியே வந்து, உம்மாவிடம் ஓடினேன்.

“ அப்துல் காதரின் நோய் பார்க்கணுமா ? ஓடிவா ! ”

எல்லோரையும் நான் கூட்டி வந்து, ஓசைப்படாமல் கதவிற்கு வெளியே நிற்கவைத்தேன். நான் மட்டும் உள்ளே சென்று, நிமிட நேரத்தில் கதவுகள் இரண்டையும் படீரெனத் திறந்து விட்டேன்.

குழிக் கிண்ணத்திலிருந்து நெய்யையும் சர்க்கரையையும் தின்றவாறு, அப்துல் காதர் கட்டிலின் கீழ் அமர்ந்து கொண்டிருந்தான் !

நான் கையும் களவுமாக அவனைப் பிடித்து வெளியே இழுத்து வந்தேன். உம்மா அவனைச் செம்மையாக வாங்கினாள். இந்த இரைச்சலில் நங்கேலி எழுந்து வந்தாள். விஷயமறிந்ததும் அவளும் அவனை அடித்தாள்.

அந்த மனோகரமான காட்சியைக் கண்டு மகிழ்ந்தவாறு, நான் நின்றுகொண்டிருந்தேன். வாப்பா வந்தபோது அவரும் அவனை அடித்தார்.

இதெல்லாம் முடிந்த பிறகு அவன் தனியே என்னிடம் வந்து, "நான் இக்காக்காவுடைய தம்பியில்லே? எதுக்காக என்னை நீங்க காட்டிக் கொடுத்தீங்க?" என்று கேட்டான்.

"பெருந் திருடா! உன்னுலே நான் எத்தனி அடி வாங்கியிருக்கறேன் தெரியுமா? நான் உன்னோட அண்ணனுங்கிற நினைப்பு அப்ப உனக்கு வந்திச்சா? பக்காத் திருடா!"

இதையெல்லாம் நினைத்துக்கொண்டு நான் எனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டிருந்தேன். அப்போது உம்மா அங்கே வந்தாள்.

"எதுக்காக நீ தனியே உட்கார்ந்து உனக்குள்ளாரவே சிரிச்சுக்கிட்டு இருக்கறே?" என்று கேட்டாள்.

"பழைய ஒரு சம்பவத்தை நினைச்சப்ப சிரிப்பு வந்திச்சு. சின்னப்போ அப்துல் காதர் நெய்யைத் திருடித் தின்னு பலூன் மாதிரி ஊதிப்போனுனே—"

"ஆம்! அதை நீ இன்னும் மறக்கலே?"

"இல்லே!"

"உங்கிட்ட பணம் இருந்தா அஞ்சு ரூபா தாயேன். பாத்தும்மாவோடு ஆடு கஞ்சிக் கலயத்தை உடைச்சிடுச்சி."

"இக்காக்கா! அது, ஆனும்மாவோட ஆடாயிருக்கும்"—பாத்தும்மா சொன்னுள்.

ஆனும்மா ஓடிவந்து சொன்னுள்:

"அது என் ஆடு அல்ல. இத்தாத்தா (அக்கா) ஆடுதான் அது."

பாத்தும்மா: "போதுண்டீ போதும் பெரிய அண்ணு இருக்காரு, கண்ணு தெரியலே? நீ கொஞ்சம் அடக்க ஒடுக்கமா இருக்கக் கத்துக்க. என் ஆடுதான்னு உனக்கு எப்படித் தெரிஞ்சுது? சொல்லேன் பார்க்கலாம்?"

ஆனும்மா சொன்னுள்:

"பெரிய அண்ணனும் தெரிஞ்சுக்கட்டுமேன்னுதான் இதை நான் இப்ப சொல்லறேன். அக்காவோட ஆடு இங்கே வந்தா, என் ஆட்டை நான் உள்ளே கொண்டுபோய்க் கட்டிப் போட்டுடுவேன். அக்காவோட ஆடு, என் ஆட்டோட புல்லைத் திருடித் திங்கறது; எங்களோடு மரவள்ளிக் கிழங்குப் புட்டைத் திருடித் திங்கறது. எங்களோட பாலில்லாத சர்க்கரை இல்லாத சாயாவையும் கூட திருட்டுத்தனமாக் குடிச்சிடறது. புள்ளைகளுக்குத் தின்ன எதுவுமே கிடைக்கறது இல்லே. எல்லாத்தியும் இந்த ஆடே தின்னு முடிக்குது!"

பாத்தும்மா சொன்னாள் :

"போதுண்டீ போதும், உன்னுது திருடத் தெரியாத ஒரு ஆடு பாரு! இந்த ஆடு உனக்கெங்கிருந்து வந்திச்சடி?"

ஆனும்மா சொன்னாள் :

"அது, அக்கா தந்ததுதான்".

"அடி," பாத்தும்மா சொன்னாள் : "இந்த உலகத்திலெ, எத்தினி அக்காமாரு தங்களோட தங்கைமாருக்குக் கொடுக்கருங்க? அதைக் கொஞ்சம் சொல்லேன்!"

ஆனும்மா சொன்னாள் :

"ஐய்யே! எத்தினியோ அக்காமாருங்க தங்கச்சிகளுக்கு யானையே கொடுக்கருங்க! ப்பூ! குச்சி போல, ஒரு நோஞ்சான் ஆட்டைக் கொடுத்திட்டு என்ன பெருமையோ?"

பாத்தும்மாவுக்கு வெறி பிடித்தது; அவள் சொன்னாள் : "பெரிய காக்கா இங்கே இருக்காரு, நீ பொழச்சே. இல்லே, உன்னை நான் விட்டு வெச்சிருப்பேன்னு நினைச்சியா? அடீ, கன்னுபின்னுன்னு பேசாதே. ஆண்டவனுக்குப் பொறுக்காது. எனக்கு ரெண்டு ஆடு இருந்திச்சி. அதிலே ஒண்ணை, என் அருமைத் தங்கையாச்சேன்னு உனக்குக் கொடுத்தேன். அதைக் கொஞ்சம் நினைப்பு வெச்சுக்க!"

பாத்தும்மா பிறகு என்னருகே வந்து மெல்லக் கேட்டாள் :

"கதீஜாவுடைய கம்மல் விஷயம் மறந்திட்டீங்களா?"

நானும் தாழ்ந்த குரலில், "இல்லே" என்று சொன்னேன்.

பாத்தும்மா தாழ்ந்த குரலில் போதித்தாள் :

"யாருக்கும் தெரியவேணாம்".

உடனே ஆனும்மா என்னருகே வந்து கேட்டாள் :

"பெரிய காக்கா, அக்கா என்ன ரகஸ்யம் சொல்லிக்கிட்டிருந்தா?"

பாத்தும்மா ஓடி வந்து,

"ஒண்ணும் சொல்லலேடி அம்மா" என்றாள்.

"இல்லே இல்லே. எனக்குத் தெரியும். எங்களுக்கெல்லாம் தெரியாமே, அக்காவுக்கு ஏதோ தர[illegible]முன்னு கேட்டிருக்கா. பெரிய காக்கா, என்ன தர்றதா சொல்லியிருக்கீங்க?

அப்போது உள்ளேயிருந்து இரண்டு அசரீரி வாக்குகள் ஒரே சமயத்தில் சேர்ந்து ஒலித்தன. அப்துல் காதரின் மனைவி குஞ்ஞானும்மாவும் ஹனிஃபாவின் மனைவி ஐசோம்மாவும் தாம் அவற்றின் சொந்தக்காரிகள்.

"நகை நட்டுங்கன்னு, எங்க புள்ளைகளுக்கும் வேணும்."

இந்த ' முக்கால அறிவு ' அவர்களுக்கு எப்படி ஏற்பட்டது என்று எனக்குத் தெரியவில்லை. பெண்களுக்கு இதெல்லாம் சகஜமாயிருக்கலாம் !

ஆனால் பாத்தும்மாவுக்கு இதைக் கேட்டதும் மீண்டும் வெறி பிடித்தது : " அடீ, கதீஜா, நம்ம ஆட்டைக் கூப்பிடு. நாம போகலாம் வா. இங்க இருக்கறவங்க எல்லாம் சரியான மூதேவிங்க. இனிமே நாம இங்க அடியெடுத்து வைக்கக்கூடாது ! "

ஆனும்மாவுக்குப் புரிந்து விட்டது : அவளுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது, அவள் சொன்னாள் :

" அல்லாவே ! அதுதான் சங்கதி. பொன்னு விஷயம்தான். நகையாத்தான் இருக்கணும் ! பெரிய காக்கா என்ன தர்றேன்னு சொல்லியிருக்கீங்க ? "

நான் சொன்னேன் ! அதாவது விஷயத்தை எடுத்துக் கூறினேன் :

" எல்லோரும் தெரிஞ்சுக்குங்க ! கதீஜாவுக்கு இரண்டு கம்மலு. அது பண்ணித் தர்றதா நான் சொல்லியிருக்கறேன். கொடுக்கறதுண்ணும் தீர்மானிச்சிட்டேன். இதிலே யாருக்கேனும் ஆட்சேபனை ஏதும் இருக்குதா ? "

ஆனும்மா சொன்னாள் : " பெரிய அண்ணா, எனக்கும் ரெண்டு கம்மலு வேணும்."

" போதும்டீ உன் குசும்பு ! போதும். நீ உன் புது வீட்டுக்குக் குடிப்போறப்ப, அவசியமான பாத்திரமெல்லாம் வாங்கித் தரணும்னு நீ பெரிய காக்கா கிட்டே கேக்கலே ? வாங்கித் தரேன்னு அவரும் சொல்லியிருக்காரில்லே ! இதெல்லாம் எனக்கும் தெரியும்டீ, என் அருமைத் தங்கச்சீ ! "

இந்த ரகசியம் பாத்தும்மாவுக்கு எப்படித் தெரிந்தது ?

## 4

இரைச்சல் கேட்டு, நான் சமயலறைக்குள் சென்றபோது, உம்மாவின் தலைமையில் எல்லாப் பெண்களும் செயலற்று நின்று கொண்டிருந்தார்கள். இவர்களின் நடுவே பாத்தும்மாவுடைய

ஆடு! ஆனால் அதன் தலையைக் காணவில்லை. காணேம் என்று சொன்னால், அது, பேராசையோடு கலயம் ஒன்றிற்குள் எப்படியோ தலையை நுழைத்துக்கொண்டு விட்டு, பிறகு அதை எடுக்கத் தெரியாமல் 'கலயமும் தலையுமாய்' நின்று கொண்டிருந்தது. பெண்கள் அனைவருமாக அதனைப் பிடித்துக்கொண்டிருந்தார்கள். கலயத்தை எப்படி விடுவிப்பது? இதுதான் முக்கியமான பிரச்சனை.

பாத்தும்மாவின் ஆடு செய்துள்ள குறும்புத் தனத்தை நான் பார்த்து விட்டேனல்லவா? தனக்கு ஏதோ அவமானம் நேர்ந்து விட்டது போலப் பாத்தும்மா எண்ணினாள்: "இது இப்படியெல்லாம் செய்ததே கிடையாது, இக்காக்கா!"

நான் ஒரு சிறிய கல்லை எடுத்து கலயத்தை உடைத்து ஆட்டை விடுவித்தேன்.

"அய்யோ! இந்த வித்தை எங்களுக்கு மட்டும் தெரியாதாக்கும்!" என்று அம்மா சொன்னாள்.

"என்ன ஒரு அறிவு கெட்டதனம்! நல்ல கலயத்தை வீணா உடைச்சிட்டியே?" என்றும் அவள் கூறினாள்.

நான் குன்றிப்போய் வராந்தாவில் வந்து அமர்ந்து கொண்டேன். அப்போது அப்துல் காதரின் மூத்த பெண் பாத்துக்குட்டி 'ஊத்தப்பா' என்று விளித்தவாறே ஓடி வந்தாள். அவளுடைய மேல்வரிசைப் பற்களில் சில, காணமல் போயிருந்தன. "அபி என்னை அடிச்சிட்டான்" என்று அவள் சொன்னாள். இதற்குள் அபி ஓடி வந்து சொன்னான்: "அக்காவும் 'ம்பீயை' அடிச்சா" என்றான்.

இனிமே, இருவரும் சண்டைபோட்டுக் கொள்ளக்கூடாது என்ற எச்சரிக்கையோடு அவர்களை அனுப்பி வைத்தேன். அப்போது ஸயிது முகம்மதும் ஒரு பிராதுடன் வந்தான்.

"மாமா! லைலா என்னை 'உள்ளாடத்திப்பாறு'ன்று கூப்பிட்டா."

அநியாயம்! ஒரு பொண்ணு ஒரு ஆணைப்பார்த்து 'உள்ளாடத்திப் பாறு'ன்னு மறுபடியும் கூப்பிடறதாவது! "லைலா"—நான் கூப்பிட்டேன். லைலா வந்தாள். அவள் கண்களில் நீர் நிறைந்திருந்தது. வந்தவுடன் அவள் சொன்னாள்: "பெரியப்பாவைக் கூட்டிட்டுப் போமாட்டேன்."

"வேணும்! அடே ஒரு கம்பெடுத்துக்கிட்டு வாடா."

ஸயிது முகம்மது புளியங்கம்புகளைக் கொண்டு வந்தான். அதைக் காட்டி லைலாவை மிரட்டினேன்; இனிமேல் யாரையும் 'உள்ளா

டத்திப்பாறு'ன்னு அழைக்கலாகாதென்ற எச்சரிக்கையுடன் அவர் களையும் ஒருவழியாக அனுப்பி வைத்தேன்.

கோழிகள் சில, பயங்கரமாகக் கத்திக் கூச்சலிட்டவாறே ஓடிப் பறந்து ஈஸிச்சேரில் கிடந்த என்மேல் வந்து விழுந்தன. அவற்றின் பின்னாலேயே பாத்தும்மாவுடைய ஆடும் ஓடி வந்துகொண் டிருந்தது. பெரிதாக ஒன்றும் இல்லை. அந்த ஆடு மற்றும் ஒரு கஞ்சிக் கலயத்தை உடைத்திருக்கிறது.

ஆனும்மா—ஐசோம்மா—குஞ்ஞானும்மா, ஆகிய மூவரின் குரல் களும் உச்சஸ்தாயியில் கேட்டன. கூடவே உம்மாவின் வசை மாரியும், குழந்தைகளின் சிரிப்பொலியும் கேட்டன. அதையெடுத்து பாத்தும்மாவின் சமாதானங்களும் வந்தன.

தனக்கு எதுவுமே தெரியாது என்னும் பாவனையில் பாத்தும்மா வின் ஆடு, பலா மரத்தினடியில் நின்று கொண்டிருந்தது. மாலை மணி நான்கிருக்கும். சரி, கொஞ்சம் காற்ருட உலவிவிட்டு வரலாம் என்று நான் புறப்பட்டேன். மார்க்கெட்டின் வழியே செல்லும்போது, அரிய காட்சி ஒன்றைப் பார்த்தேன்!

அபியும் பாத்துக்குட்டியும், சிறிய ஒரு கூடை நிறையச் சாம்பங் காய்களுடன் கும்பலுக்கிடையே அமர்ந்து கொண்டிருக்கிருர்கள்; ஆயிரமாயிரம் யானைகளுக்கு இடையே, இரு சின்னச்சிறு எலிக் குஞ்சுகள் போல. இரண்டு பேருமாக சாம்பங்காய் விற்றுக்கொண் டிருந்தார்கள். ஆனால், தலைமை விற்பனைக்காரன் அபிதான்.

"ம்பீயின் ஒரு கைக்குக் காலணு. 'ம்பீயின் இரண்டு கைகளுக்கும், மேலே ஒரு காய்க்குமாகச் சேர்த்து அரையணு!"

அதாவது ஐந்து சாம்பங்காய்களுக்கு மூன்று பைசா. ஆறு பைசா வுக்கு பதினொன்று. அபியின் கைகளில் இருப்பது, ஐந்து விரல்களல் லவா? இந்த வியாபார ரீதியைப் பார்த்தவாறு நான் நின்று கொண் டிருந்தேன். அவர்கள் மொத்தம் ஆறு அணுவுக்கு வியாபாரம் நடத்தினுர்கள். அந்த ஆறு அணுவையும் நான் வாங்கி வைத்துக் கொண்டேன்! அன்றிரவு உம்மாவிடம் நான் எட்டணுவைக் கொடுத்தேன். உம்மாவுக்குப் பரம திருப்தி. இரவு உண்டு விட்டுப் படுக்க போகுமுன்பாக, வீட்டிலுள்ள தந்தைகளிடம், குழந்தைகளை வளர்க்க வேண்டிய விதம் பற்றி எடுத்துரைத்தேன்; தாய்மாருக்கு வேளா வேளைக்கு நல்லுணவுக்கு வழி செய்யவேண்டியதன் அவசியம் பற்றியும் சொன்னேன். குழந்தைகளுக்கு நல்ல பழக்க வழக்கங்களைப் போதிக்க வேண்டியது பற்றியும், வீட்டையும் ஆதனை

ஒட்டிய பகுதிகளையும் சுத்தமாக வைத்திருக்க வேண்டியதன் தேவை பற்றியும் ஒரு குட்டிப் பிரசங்கமே செய்தேன்.

ஹனீஃபா இவையனைத்துக்குமாகச் சேர்த்து ஒரே பதிலாகச் சொன்னான் :

" நான் ராணுவத்துக்கே போயிடறேன்." அபு சொன்னான் : " பெரிய காக்கா, நீங்க ஒரே ஒரு விஷயத்தைக் கவனிச்சீங்கன்னா போதும் ; ஆனா, அதுக்குக் கொஞ்சம் பணம் செலவாகும் அவ்வளவு தான். இந்த வீட்டோட மேல்கூரையை மாத்தி, ஓடு போட்டுட்டா நல்லாயிருக்கும். பெரிய காக்கா வந்திருக்கறதனாலேதான் முற்றம் *சீராச்சி !*"

அதைச் *சீராக்குவதற்காக* நான் கொஞ்சம் பணம் செலவு செய்தேன். கற்களினால் தூண்கள் எழுப்பி அதைப் பலப்படுத்தினேன்.

" அதெல்லாம் விடு "—அப்துல் காதர் சொன்னான் : " இங்கே எல்லாமே சரியாயிடும் ; பாத்தும்மாவுடைய ஆடு பிரசவிக்கட்டும் பாரேன் *!*"

மேலும் சில தினங்கள் கழிந்தன. டும் *!* டும் *!* பாத்தும்மாவுடைய ஆடு பெற்றே விட்டது *!*

மதியவேளை, நல்லதொரு முகூர்த்தம் *!* சிறு சிறு தூரலாக மழை இருந்தது. இந்தச் செய்தி கேட்டதும், எனக்குக் கொஞ்சம் திகில் ஏற்பட்டது. தீங்கு ஏதும் நேராமல் இருக்க வேண்டுமே *!* பிரசவத்தில் இறந்துபோன சம்பவங்கள் பல, என் நினைவில் ஓடின. எனக்குப் பெருத்த மனக் கலவரம் உண்டாயிற்று. உம்மாவைக் குறைந்த பட்சம் நூறு முறையாவது அழைத்திருப்பேன்.

" உம்மா அதுங்கிட்டக்கவே இரு என்ன *!*" என்று நான் வேண்டிக்கொண்டேன். உம்மா ஒன்றுமே சொல்லவில்லை. எனக்கு திகில் அதிகமாகியது. என்ன நேரிடும்? அங்கு போய்ப் பார்த்தாலென்ன? ஆனால் சென்று பார்ப்பதற்கு வேண்டிய துணிச்சலும் இருக்கவில்லை. இருந்தும்கூட நான் சற்றே எம்பிப் பார்த்தேன். ஆட்டை மட்டும் காணவில்லை. ஒரு பெருங்கூட்டமே அங்குக்கூடியிருந்தது. உம்மா, குஞ்ஞானும்மா, ஆனும்மா, ஐசோம்மா, பாத்துக்குட்டி, அபி ஆரிஃபா, ஸையது முகம்மது, ரஷீது சுபைதா, ஆகியோரைத் தவிர அண்டை அயல் வீட்டுப் பெண்களும் அங்குக் குழுமியிருந்தார்கள் ; ஏதோ பெரும் திருவிழா போல எல்லோரும் மகிழ்ச்சியுடன் காணப்பட்டார்கள். யாருமே கவலைப்படுவதாகக் காணோமே? ஏன்? நான் உம்மாவைக் கூப்பிட்டுக் கேட்டேன் : " பாத்தும்மாவுக்கு ஆள் அனுப்பிச்சியா ? "

அங்கு இந்தச் சமயத்தில் இருக்க வேண்டிய முக்கியமான ஆள் அவள்தானே! ஆனால் அவளுக்குச் சொல்லியனுப்பவே இல்லை. அம்மாவும் மற்ற பெண்களும் 'ப்பூ இதென்ன பெரிய விஷயம்!' என்பது போல அலட்சியமாக இருந்தார்கள். இவர்கள் யாருக்குமே இதொன்றும் பிரமாதமான விஷயமல்ல என்று எனக்கு அப்போதுதான் புரிந்தது. இவர்கள் எல்லோருமே பல முறை பிரசவித்திருப்பவர்கள். உம்மாவுக்கே நாங்கள் எல்லோருமாக நிறையக் குழந்தைகள் இருக்கிறோம். உம்மாவுடைய பெண்களான பாத்தும்மாவும் ஆனும்மாவும் பேறு பெற்றவர்கள் தாம். மருமகள் களான குஞ்ஞானும்மாவும் ஐசோம்மாவும்கூடத் தாயானவர்கள் தாம். யாருக்காவது குழந்தை பிறந்திருப்பது பற்றிய செய்தி ஏதும் வந்தால், அதை அவர்கள் ஒரு பெரிய சங்கதியாகக் கருதுவதே கிடையாது. 'குழந்தை ஆணா, பெண்ணா?' ஒரு மாமூல் கேள்வி மட்டுமே அவர்களிடமிருந்து வரும்.

ஆனால், இந்த அனுபவம் ஏதும் பெறாத நான், சற்றே திகிலடைந்து போனேன் என்பதை ஒப்புக்கொள்ளத்தானே வேண்டும்!

வராண்டாவில் மேற்குப் புறமாக நான் தனியே நாற்காலியில் அமர்ந்தவாறு இருந்தேன். அந்தப் பக்கத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறது? ஒரு விவரமும் தெரிந்தபாடில்லை. நான் கொஞ்சம் அதிகமாகவே பீடிகளை ஊதித் தள்ளினேன். இங்கிருந்து அங்கும், அங்கிருந்து இங்குமாக நடந்து தீர்த்தேன். இவ்வாறு நடந்துகொண்டிருக்கும்போது, அபியும் பாத்துக்குட்டியும் நான் இருக்கும் திசையை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். என்னருகே வந்ததும் அபி பெருமையடித்துக் கொண்டான்: "மொதல்லெ பாத்தது 'ம்பீ' தான்."

பாத்துக்குட்டி சொன்னாள்: "அபி இல்லே, நான்தான்" இதற்குள்ளாக லைலாவும் ஸையிதுமுகம்மதும் வந்தார்கள்.

ஸையிது முகம்மது சொன்னான்: "நான்தான் முதல்லே பாத்தேன்."

லைலா: "அண்ணனைக் கூட்டிட்டுப் போமாட்டேன். நான்தான் முதல்லே பாத்தேனுக்கும்!"

இந்தக் குட்டிப் பிசாசுகள் எதை முதலில் பார்த்தன?

நான் அபியிடம் கேட்டேன்:

"என்னத்தேடா நீ மொதல்லே பாத்தே?" அபி பெருமையோடு சொன்னான்:

"ஆயு பெத்ததை முழுக்க முழுக்க பாத்தேனே! ம்பி தான் பார்த்தான்! முதல்லே."

"ஆடு பெத்திடிச்சா ?"—நான் கேட்டேன். பாத்துக்குட்டி உடனே சொன்னுள் : "ஆமாம்! பெத்துடுச்சி... பெரீப்பா, அது பெத்ததெ முழுக்க முழுக்க நான்தான் மொதல்லே பாத்தேன் !"

அப்பாடா ! அது கடைசியில் ஒரு வழியாகப் பெற்றுவிட்டது. எந்தவிதமான குழப்பமும் இல்லை. எனக்குப் பெருத்த நிம்மதி ஏற்பட்டது. நான் போய்ப் பார்த்தேன். குட்டித் திண்ணையில், அம்மாவும் குழந்தையும் காணப்பட்டன. வெள்ளை வெளேர் என்று அழகிய குட்டி. இந்த மாபெரும் பிரபஞ்சத்தை அலட்சியமாகப் பார்த்தவண்ணம் அது கீழே கிடந்தது.

தாய் ஆட்டினை வெந்நீரில் குளிப்பாட்டுவது, அதற்குப் பாலாகாரம் கொடுப்பது போன்ற யோசனைகளைக் கூற வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ஆனுல் பால் ஏது? வெந்நீர் வேண்டுமானுல் கிடைக்கும். அதோடு நான் ஏதாவது சொல்லப் போனுல் பெண்களுக்குத் தமாஷாக வேறு போய்விடும். இருந்தாலும் நான் உம்மாவிடம் கேட்டேன் :

"அதுக்கு ஏதாச்சும் கொடுத்தீங்களா?" "ஒண்ணும் கொடுக்கலை. கொஞ்ச நேரம் பொறுத்து தேரகத்தின் எலையோ, இல்லாட்டிப் போனு, வேறே ஏதாவது விசேஷமான இலைங்க கொடுப்போம். அதுதான் வழக்கம்."

நான் சொன்னேன் : "ஆட்டுக்குட்டியை ஒரு பாயிலே விடுங்க. ஜில்லுனு பச்சத் திண்ணையிலே அது கிடக்குது !"

பாயிலே அதைப் படுக்கப் போட்டாங்களோ, என்னமோ ! நான் அதற்குள் ஒரு பெரிய நேந்திரம் பழத்தை எடுத்து வந்து, தாய் ஆட்டிடம் கொடுத்தேன். அது நன்றியோடு வாங்கித் தின்றது.

'இதென்ன வேடிக்கையாயிருக்குது !' என்பது போல் பெண்களெல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். உம்மா மட்டும் வெறுமே முறுவலித்துக்கொண்டாள்.

அந்திக்குப் பிறகு பாத்தும்மாவும் கதீஜாவும் கொச்சுண்ணியும் வந்தார்கள். ஆடு பெற்ற விஷயத்தைக் கேட்டபிறகும் அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை.

படுக்கும்போது நான் கேட்டேன் : "ஆட்டுக் குட்டியே எங்க விட்டிருக்கீங்க ?"

"சமயலறையில்"—யாரோ சொன்னுர்கள். "அடுப்பிலே நெருப்பிருக்குமே ?"

உம்மா சொன்னுள் : "கூடையாலே மூடியிருக்கரும்."

கூடையைப் போட்டு மூடி வெச்சிருக்காங்களாமே !

"ஆனும்மா!" நான் இரைந்து கத்தினேன்: "அதுக்கு மூச்சு முட்டாது? உங்க புள்ளேங்க யாரையாச்சியும் இப்படிக் கூடை போட்டு மூடி வப்பீங்களா?"

"பின்னே வேறே என்னதான் செய்யறதாம்?" இவ்வாறு பதில் கேள்வி தொடுக்கப்பட்டது. கேட்டது யார் என்று தெரியவில்லை. நான் ஒன்றும் பேசாமல் மௌனமாகக் கிடந்தேன். குழந்தை குட்டிகளைப் பெற்றுள்ளவர்களின் மத்தியில், நான் ஏதாவது சொன்னால் அது ஒரு தினுசாகத்தான் இருக்கும். நான் இல்லாத போது அவர்கள் அது பற்றிப் பேசி கேலி செய்வார்கள்; சிரிப்பார்கள். நானோ கலியாணமாகாதவன். அப்படி இருக்கையில் நமக்குத் தெரியாத விஷயங்களைப் பற்றிப் பேசாமல் இருப்பதுதானே உத்தமம்!

நான் போர்வையை இழுத்துப் போர்த்தியவண்ணம் கண்ணையும் மூடிக்கொண்டு பேசாமல் உறங்க ஆரம்பித்தேன்.

அடுத்த நாள் எழுந்து காலைக்கடன்களை முடித்த பிறகு சாயாவும் குடித்துவிட்டு ஆனும்மாவிடம் கேட்டேன்:

"அதுக்கு ஏதேனும் கொடுத்தியா?" அதற்கு என்றால் பாத்தும்மாவுடைய ஆட்டுக்குத்தான் என்பது ஆனும்மாவுக்குத் தெரியும்.

"புல்லு கொடுத்தோம்" என்று ஆனும்மா சொன்னாள். ஆனும்மாவின் ஆட்டுக்கான புல் அது.

பாத்தும்மாவுடைய ஆடும், குட்டியும் முற்றத்தில் பலாமரத்தினடியில் நின்று கொண்டிருந்தன. தங்களுக்கான ஆகாரம் எங்கிருந்து வருகிறது என்று தாய் ஆடு, குட்டிக்குக் காட்டிக் கொடுத்துக் கொண்டிருக்கிறது போலும்! குட்டி தள்ளாடித் தள்ளாடி துவண்டு விழுந்து கொண்டிருந்தது. தடுமாறாமல் நடப்பதற்குக் கொஞ்சம் சிரமப்பட்டது. அதை எடுத்து முத்தம் கொடுத்தால் என்ன என்று எனக்குத் தோன்றிற்று. இந்தச் சமயத்தில் ஹனீஃபா என் முன்னே வந்து நின்றான். ஒரு லுங்கி மட்டுமே அணிந்திருந்தான். அவன் சொன்னான்: "பெரிய காக்கா ஒரு பத்து ரூபா வேணுமே. சின்னண்ணைகிட்டே கேட்டா திட்டுவாரு. அபுவுக்குத் தெரிந்ததோ போச்சு. அவனும் சேர்ந்து என்னைக் கிண்டல் பண்ணுவான். பாருங்க! என்கிட்ட பணம் இருந்திச்சின்னா ஒரு ஷர்ட் போட்டுக் கிட்டிருக்கமாட்டேனா?"

"என்னோட ஒரு டபிள் வேஷ்டியையும் ஒரு ஷர்ட்டையும் கொஞ்ச நாளுக்கு முன்னாலே நீ எடுத்துக்கிட்ட நினைப்பு இருக்குதே."

"நானு?......எனக்கு எதுவும் வேணும். நான் பட்டாளத்துக்குப் போய்க்கறேன். இங்கே யாருக்கும் நான் வேணுமின்னாலும், சர்க்காருக்கு என்னோட சேவை தேவையா இருக்குது. அதை எல்லாரும் கொஞ்சம் நினைப்பு வெச்சுக்கிட்டீங்கன்னு போதும் பெரியண்ணு கொடுத்த டபிளும் ஷர்ட்டும்—"

நான் ஊடே சொன்னேன் :

"அட எங்கப்பா, கொஞ்சம் நில்லுடா கண்ணு. நான் ஒண்ணும் உனக்கு அதைத் தரலே. வெளுத்து வந்தபோது, எங்கிட்டெ ஒரு வார்த்தை கூடக் கேக்காமே நீயே அதை எடுத்து வெச்சுக்கிட்டே. எங்கிட்ட வேட்டி சட்டைங்க கொஞ்சமா இருக்கறதனுலே அதையெல்லாத்தையும் எண்ணித்தான் வெச்சிருக்கறேன். நிறைய இருந்தபோது உம்மா திருடியிருக்காங்க. அப்துல் காதர் திருடி எடுத்திருக்கருன், பாத்தும்மாவும் ஆனும்மாவும் கூடத் திருடி எடுத்துக்கிட்டிருக்காங்க. உன் மனைவி ஐசோம்மாவும் அப்துல் காதரின் மனைவி குஞ்ஞானும்மாவும் மட்டும் திருடினது கிடையாது."

ஹனிஃபா சொன்னுன் :

"அந்த ஓட்டை வேட்டியையும் ஷர்ட்டையும் அபு, எங்கிட்டேந்து பிடுங்கிக்கிட்டு போயிட்டான். பாத்தீங்களா பெரியண்ணு என் நிலைமையை?"

"ஒடிசலான அபு, தடியனுன உங்கிட்டேந்து பிடுங்கிக்கிட்டுப் போயிட்டானு?"

"உங்களுக்கு என் வார்த்தைலே நம்பிக்கை இல்லேன்னு அபி கிட்டே கேட்டுப் பாருங்க! அடே அபி—"

அவன் வந்தான். ஹனிஃபாவுக்கு, எல்லாவற்றுக்கும் உள்ள ஒரே சாட்சி அபிதான். அவன் வந்தவுடனே சொன்னுன் :

"வாப்பா சொன்னதை 'ம்பி' பாத்தானுக்கும்!"

இந்தச் சமயத்தில் சற்றே திறந்திருந்த கதவு வழியாக ஐசோம்மா, ரஷீதை இடுப்பில் சுமந்தவாறு வந்தாள். அவள் சொன்னுள் : "அப்பாவும் புள்ளையும் சொல்றது அத்தனையும் பச்சப் புளுகு. புள்ளேகிட்டே, இப்படிச் சொல்லுன்னு சொல்லிக் கொடுத்துக்கிட்டிருந்ததை நான் என் காதாலேயே கேட்டேன். பெரிய காக்காவோட டபிள் வேட்டியும் ஷர்ட்டும் அபியோட வாப்பாவோட பெட்டியிலேயே இருக்குது!"

"அடே திருடா! பகல் கொள்ளைக்காரா! அடே நீ என்னையும் அப்துல் காதரையும் தென்ன மட்டை சுமக்கச் செய்த கதை உனக்கு நினைப்பு இருக்குதாடா?"

ஹனீஃபா சொன்னான்: "அதெல்லாம் எனக்கு எதுவும் தெரியாது. எனக்கு ஏகப்பட்ட வேலை கிடக்குது. ரத்தத்தை தண்ணீயாப் பாய்ச்சி, நாயா உழைக்கிற ஒரு தொழிலாளி நான்."

"ஓ! உனக்கு நேந்திரம் வாழத் தோட்டம் இருக்குதோ?"

அவன் சொன்னான்: "அதை வேணும்னா பெரிய காக்காவுக்கே தந்திட்றேன். ஒரு பத்தாயிரம் ரூபா கொடுங்க போதும்."

இதிலே பத்தில் ஒரு பங்கு விலைக்குத்தான் அவன் அந்தத் தோட்டத்தை வாங்கினான் என்பது எனக்குத் தெரியும். பெரும் திருடன்!

நான் உம்மாவைக் கூப்பிட்டு, அவள் வந்ததும் கேட்டேன்: "இந்த ஹனீஃபா சின்னவனா இருந்தபோது அஞ்சு ரூபா திருடி எடுத்துக்கிட்டானில்லே? அப்புறம் முதலாளியா மாறி, தன்னுடைய அண்ணாக்களான என்னையும் அப்துல் காதரையும்விட்டு, மலைபோலக் குவிந்திருந்த தென்னை மட்டைகளை உலரப் போடுமாறு செய்தான். இவன் மட்டும் உலரப் போடலை. எங்களுக்குத் தினசரி 4 சக்கரம்* கூலி கொடுப்பான். இப்படி அஞ்சாறு நாள் ஆனப்புறம் தான், வாப்பாவுக்கு விஷயம் தெரிஞ்சுது. நான்தான் பணத்தைத் திருடினேன்னு நினைச்சு அப்பா என்னை அடிக்கவும் செய்தாரு. உங்களுக்கு நினைப்பு இருக்குதா?"

உம்மா சொன்னாள்: "ஹனீஃபா வாப்பாவோடு பெட்டிலேந்து பணத்தை எடுக்கலே. அந்தக் காலத்திலே என்னோடே வெத்தலைப் பொட்டிலே, எப்பவுமே வெள்ளிப் பணம் நிறைய இருக்கும். இவன் எப்படித் திருடுவான்னு சொல்லட்டுமா? உம்... வேணாம் நான் சொல்லலை, எதுக்கு வீணா இவன் பெண்டாட்டியும் புள்ளெங்களும் கேப்பாங்க."

"சும்மாச் சொல்லுங்க உம்மா. அவங்களும்தான் இவனைப்பத்தித் தெரிஞ்சுக்கட்டுமே!"

நான் ஏன் இப்படிச் சொன்னேன் என்றால் உம்மாவுடைய வெற்றிலைச் செல்லத்திலிருந்து வெள்ளிப் பணம் திருடுவது, எனது தினசரி வழக்கமாக இருந்தது. நான் உம்மாவின் அருகேதான் படுப்பேன். உம்மா சற்றே கண்ணயரத் தொடங்கியதும், அவளது மடியிலிருந்து வெற்றிலைச் செல்லத்தை மெள்ள எடுத்து, அதிலிருந்து நான்கு பணத்தை எடுத்துக்கொண்ட பிறகு, அதை இருந்த இடத்திலேயே வைத்துவிட்டு ஓடிவிடுவேன்.

---

* சக்கரம்—பழைய திருவிதாங்கூர் மாநிலக் காசு.

"இந்த ஹனீஃபா பெரியவனு ஆனப்பறம்கூட, என்னிடம் பால் குடிக்க வருவான். பாலைக் குடித்துக் கொண்டிருக்கும்போதே, வெற்றிலைச் செல்லத்திலிருந்து பணத்தை மெள்ளத் திருடி எடுத்துக் கொண்டுவிடுவான். இவன் இப்படிச் செய்யும்போது ஒரு தடவை நான் பாத்துட்டேன். அன்னிக்கு அவனைச் செம்மையா அடிச்சேன். அன்னிலேந்து தாய்ப்பால் கொடுக்கறதையே நிறுத்திட்டேன்."

"பெருந் திருடன்! உம்மா, அப்துல் காதர் திருடினது இல்லே?"

"அவனும் திருடியிருக்கருன். நீ மட்டும்தான் திருடலை."

ஆஹா! எத்துணை நல்லவன் நான்! ஹா, எப்படியொரு மெச்சும் படியான வாழ்வு!

"பாத்தியாடா ஹனீஃபா. பாத்தியா அபி. உம் பாத்துக்கடி லைலா. நன்னுப் பாத்துக்கடா ரஷீது!—பாத்துத் தெரிஞ்சுக்குங்க."

ஹனீஃபாவுக்குப் பொறுக்க முடியவில்லை. அவன் சொன்னுன்: "ஐயோ உம்மா! என் அருமை அம்மா! உங்களுக்கு எதுவுமே நினைப்பு இல்லை; இல்லே, ஐசோம்மாவும் ஆனும்மாவும் சின்ன அண்ணியும் கேட்டுக்கிட்டிருக்கருங்களேங்கிறதுக்காக உம்மா பொய் சொல்றீங்க. இந்த ரெண்டுலே ஒண்ணுதான் நீங்க இப்படிப் பேசறதுக்குக் காரணமா இருக்கணும். பெரிய காக்காவும் உம்மாவோடு வெத்தலைப் பெட்டிலேந்து பணம் திருடி எடுத் திருக்காரு! எனக்கு நல்லா நினைப்பு இருக்குது. என்னையும் சின்ன அண்ணனையும் கூட்டிட்டு போயி, சாயா வாங்கித் தந்திருக்கருரு. எத்தனை தடவை தெரியுமா? கடைக்காரனுக்கு அவரு எப்பவும் வெள்ளிப் பணமாத்தான் கொடுப்பாரு. அந்தக் காலத்திலே பெரிய அண்ணுருக்கு ஏது பணம்? எங்கிருந்து வந்திச்சு? சொல்லு உம்மா!"

விஷயத்தை மாற்ற வேண்டியதன் உடனடித் தேவையை நான் உணர்ந்தேன்:

"நீ பலதடவை எங்கிட்டேந்து ரெண்டும், மூணும், அஞ்சும், பத்துமா பணம் வாங்கிட்டிருக்கறதைத் தவிர, மொத்தமா ஒரு நூறு ரூபா வரைக்கும் நீ எனக்குத் தரவேண்டியது பாக்கியிருக்கிறது. இதுக்குச் சாட்சியா, உன்னுடை கிறிஸ்தவத் தோழருங்களும் நாயர்மாரு சிநேகிதங்களும் ஹரிஜனங்களான ஈழவமாரும் இருக் கருங்க இல்லே? அவங்க எல்லாரையும் உம்மாகிட்டே கூட்டிக்கிட்டு வர நான் தயாராத்தான் இருக்கறேன்! எடுடா என் நூறு ரூபாயை!"

"என் அருமை உம்மா! பெரிய அண்ணன் என்னென்னமோ கதையளக்கருரே? எனக்கு ஒண்ணுமே விளங்கலியே? நான் அவருக்குப் பணம் தரணுமா! நல்லாயிருக்குதே கதை. நான் என் கைப் பணத்தைச் செலவழிச்சுட்டில்லே பெரிய காக்காவுக்கு என்னென்னமோ வாங்கித் தந்திகிட்டு வர்றேன்? நேந்திரம் பழம் அன்ஞசிப் பழம் வாங்கித் தந்திருக்கறேன். பீடி, கணக்கு வழக் கில்லாமே வாங்கி வந்திருக்கறேன். கீரை காய்கறிங்க ஆட்டிறைச்சி வாத்து முட்டை மீன் பலாப்பழம்—இதெல்லாத்தோடு கணக்கையும் பாத்தா பெரிய காக்காகிட்டேந்துதான், எனக்கு 40 ரூபா வர வேண்டியிருக்குது. அதிலேந்துதான் ஒரு 10 ரூவா தாங்கன்னு நான் இப்ப கேட்டுக்கிட்டு இருந்தேன்!"

"ஆமாண்டா! இவரு பெரிய வள்ளலு! கொடுத்திட்டே பாரு! உன் எஸ்டேட்டிலே ஒடிஞ்சு விழுந்த வாழை மரத்திலேந்து, முற்ருத காயிங்களைப் புகைபோட்டு வாட்டிப் பழுத்த நிறமாப் பண்ணி நீ கொண்டுவந்து தருவே. மீதியெல்லாம் அப்துல் காதரும் கொச்சுண்ணியும் சுலைமானும் அவுங்க அவுங்க கையிலேந்து பணம் போட்டு வாங்கிட்டு, நீ வீட்டுக்கு வர்றபோது உன் கையிலே கொடுத்தனுப்புவாங்க. அவ்வளவுதான்! நீ என்னடான்ஞ. அதை யெல்லாம் கொண்டுவந்து, ஏதோ நீயே சொந்தப் பணம் போட்டு வாங்கின மாதிரி நடிப்பே. எனக்கு எல்லாம் தெரியும்டா!"

இதைக் கேட்டவுடன் ஹனீஃபா இரைந்து கத்தினன்: "வாடி ஐசோம்மா, வெளியே வா. குழந்தைகளையும் கூப்பிடு. நாம இனிமே இங்கே இருக்க வேணும். நம்ம எடத்திலேயே எதுனச்சும் ஓலைக் குடிசை கீலைக்குடிசை போட்டுகிட்டு இருக்கலாம்! வாடி வெளியே!"

"நில்லுடா! எங்கே போறே? உன் நூறு ரூபாச் சாயத்தே வெளுக்கப்போறேண்டா! அதுக்கப்புறம் எங்கே வேணுப்போ. உம்மா கேட்டுக்குங்க. அப்ப, இவங்கிட்ட நான்கு சைக்கிள் இருந்திச்சி. ரொம்ப வருஷங்க ஒண்ணும் ஆயிடலே. நான் ஊருக்கு வர்ற சமயத்திலே, எப்பனச்சியும் இவனோட சைக்கிளை எடுத்துக்கிட்டு சுத்துவேன், பத்தே நிமிஷங்களுக்குள்ளே திரும்பிட்டாலும் கூட இவன் என்ன சொல்லுவான் தெரியுமா? 'ரெண்டு மணி நேரம் ஆயிடிச்சு!' மொத்தத்திலே இவனுக்கு வாடகை வேணும். அது தான் விஷயம். அப்பவெல்லாம் இவனுக்கு என்ன வேலை தெரியுமா? இவன், தன்னோட சிநேகிதங்களான கிறிஸ்தவங்க, நாயருங்க ஈழவருங்க இவர்களோடகூட எர்ணகுளத்துக்கு என்கிட்டே

வருவான். இப்பொ, பொய் சாட்சி சொல்ல அபிக்குச் சொல்லிக் கொடுத்திருக்கற மாதிரியே அவங்களுக்கும் இவன் பொய் சொல்லக் கத்துக்கொடுத்து வெச்சிருக்கருன். அவங்க அங்கே வந்தவுடன் ஹனீஃபாவின் பரிதாபத்திற்குரிய கஷ்ட நிலைமையைப் பத்தியே தான் பேசுவாங்க. 'பாவம்! ஹனீஃபா ரொம்பக் கஷ்டப்படருன்' அப்படி இப்படியின்னெல்லாம் சொல்லுவாங்க. அந்தப் புராணம் முடிந்த கையோட இவன் கடன் கேப்பான். கடைசியிலே 'ஒரு ஐந்து ரூபாயாவது கொடுங்க'ம்பான். அது கூட எதுக்குத் தெரியுமா? புள்ளெங்களுக்கு என் சார்பிலே எதனுச்சும் வாங்கிட்டுப் போறதுக்குன்னு சொல்லுவான். நான் மூன்று ரூபா கொடுப்பேன். இவன் அதிலேந்து ஒரு அணவுக்கு ஆரஞ்சு மிட்டாயி வாங்கி வந்து புள்ளெங்களுக்கு தருவான்.

"அந்தக் காலத்திலே 325 ரூபா விலையிலெ நான் ஒரு சைக்கிள் வாங்கியிருந்தேன். அதை இவன் எப்படியோ தெரிஞ்சுக்கிட்டான். ஒரு நாள் இவன் தன் சிநேகிதக் கும்பலோடு அங்கே வந்தான். இவனையும் சேர்த்து நாலு பேர் இருந்தாங்க. மூன்று சைக்கிள்ளெ சவாரி செஞ்சுகிட்டு வந்தாங்க. வந்தவுடனேயே ஒரு சத்யாக்ர கத்தைத் தொடங்கினுங்க. ஹனீஃபாவுக்கு என் சைக்கிள் வேணுமாம். அது அவன் கடையிலே இருந்திச்சின்னுத்தான் அவனோடு ஓட்டை சைக்கிளுங்களை சனங்க வாடகைக்கு எடுத்துப் போவாங்களாம், நான் சொன்னேன்: 'சைக்கிள் எனக்குத் தேவைப்படுதே.' இவனோடை சிநேகிதக்காரங்கள்ளே ஒர்த்தன் சொன்னுன்: 'ஹனீஃபா அதுக்குப் பணம் தந்திடுவான்.' அவன் சொல்லி வாயை மூடக்கூட இல்லை, ஹனீஃபா ஒரு கத்தை நோட்டுங்களை எடுத்து என் மடியிலே போட்டான். எண்ணிப் பார்த்தேன். 240 ரூபா இருந்திச்சு 'பாக்கி'ன்னு கேட்டேன். 'ஓ! அதை வீட்டுக்குப் போன கையோட அனுப்பிவெச்சிடறேன்'ன் னுன். சிநேகிதக் காரங்களும் சொன்னுங்க: 'அதைப் பத்திக் கவலைப்படாதீங்க. அவன் அனுப்பும்படியா நாங்க பாத்துக்கரோம்.' அவங்க ஜாமீன் தந்தாப் போராதா என்ன? உடனேயே ஹனீஃபா அங்கேயே ஒரு பத்து ரூபா எங்கிட்டே கடனுகவும், மூன்று ரூபா, புள்ளேங்களுக்கு ஏதாச்சும் வாங்கிக் கொடுக்கறதுக்காவும் வாங்கிக் கிட்டான். பல மாதங்கள் ஆயிடுச்சு. அந்த ரூபா இன்னும் வந்த பாடில்லே. நான் இங்கே வந்தப்பறம் இவனோடை சிநேகிதக்காரங்க எல்லாம் என் தலை தெரிஞ்சாப் போதும். ஒளிஞ்சிக்கிட ஆரம்பிச்சுட ருங்க. எடுடா அந்த ரூபாயை!"

"நான் பட்டாளத்திலே சேர்ந்துடறேன்!"

அபி சொன்ஞன்: "ம்பீயும் பட்டாளத்துக்குப் போயிடுவான்."

லைலா சொன்ஞள்:

"நானும் பட்டாளத்துக்கே போறேன்."

ஐசோம்மா: "அப்படியாஞ, ரஷீதும் நானும்கூட வந்துடறோம் ராணுவத்துக்கு. சர்க்காருக்குக் கஞ்சித் தண்ணியும் குழம்பும் வச்சுத் தர்றேன்."

"போதுண்டி! நாலு பேர் இருக்கற எடத்திலே வந்து பேச ஆரம்பிச்சிட்டியா நீ? பெரிய காக்கா இருக்கருரேன்னு பாக்கறேன். இல்லே...உன்னை...நான்! போடி உள்ளே!" என்று அதட்டிய வண்ணம் ஹனீஃபா மார்க்கெட்டில் உள்ள தன்னுடைய தையல் கடைக்குப் போஞன்.

சற்று நேரம் ஆனதும் ரஷீதையும் சுபைதாவையும் எடுத்துக் கொண்டு உம்மா என்னருகே வந்தாள்:

"நாங்க குளிக்கப் போயிட்டு வர்றோம். இந்தக் குழந்தேங்களே கொஞ்சம் பாத்துக்கடா."

நான் குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளத் தொடங்கினேன். அவர்கள் எல்லோரும் ஆற்றுக்குக் குளிக்கப் போஞர்கள். இரண்டுமே அழ ஆரம்பித்தன. அழுகையை நிறுத்துவதற்காக இரு குழந்தைகளுக்கும் இடையே, ஆட்டின் குட்டியைக்கொண்டு வந்து விட்டேன்.

குழந்தைகள் இரண்டும் மூத்திரம் பெய்தன. ஆட்டுக்குட்டி இரண்டையுமே கழித்தது. இந்த அமர்க்களத்துக்கிடையில் அந்த இடத்துக்கு வந்து சேர்ந்தான், மிக மிக சொகுசுக்காரஞன அபு. அவன் கேட்டான்: "இதெல்லாம் என்ன கூத்து?"

அபு குழந்தைகளுடைய அழுகையை நிறுத்திஞன். இதற்கு, குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய வித்தை எதையும் அவன் கையாளவில்லை. கண்களை உருட்டி முறைத்தான், உதடுகளைக் கடித்தான், உறுமிஞன். அவன், பாத்தும்மாவுடைய ஆட்டையும் அடித்து விரட்டிஞன். பூனைகளை அடித்தான். கோழிகளை விரட்டி ஓட்டிஞன். இந்தச் சமயத்தில் நான் ஆட்டுக் குட்டியின் மல மூத்திரங்களை அள்ளியெறிந்தேன்; குட்டியை எடுத்து, முற்றத்தில் நிறுத்தினேன்.

"பாத்தீங்களா? ஆடு, கோழி, பூனை குழந்தைங்க—எல்லாமாச் சேர்ந்து முற்றத்தையும் வராண்டாவையும் எப்படிப் பாழ்பண்ணி

யிருக்குதுங்க. பெரிய அண்ணு, இதையெல்லாம் ஏன் தான் அனுமதிக்கறீங்களோ ?''

'' நான் என்ன செய்யணும்ங்கறே ? ''

'' அடிக்கோணும்.''

நோஞ்சாஞக இருக்கும் இந்த அபு, கூச்சல் போடுவதிலும் அடிப்பதிலும் நிபுணன். எல்லோருக்குமே அவனைப் பார்த்தால் பயம்தான். அவனிடம் குழந்தைகளை விட்டுப் போக, அம்மாக்களுக்கும் உம்மாவுக்கும் தைரியம் கிடையாது.

'' பெரிய அண்ணு, நான் உங்களோட ஒரு ஷர்ட்டும் வேட்டியும் திருடியிருக்கறேன்னு சின்ன அக்கா சொன்னுங்களா ?'' ஆனும்மா அப்படிச் சொன்னுள் என்ருே, சொல்லவில்லை என்ருே, நான் கூற வில்லை. அவனுக்குக் கோபம் வந்தது.

'' எல்லாருமே அவுங்கவுங்க பங்குக்குத் திருடியிருக்காங்க; நான் மட்டுமில்லே. உம்மாவும் சின்ன அக்காவும்கூட ஆளுக்கொரு வேட்டி திருடியிருக்காங்களே, அதைச் சொன்னுங்களா ?''

'' நீ திருடியிருக்கறேன்னு ஆனும்மா சொல்லலே.''

'' ஒரு வேட்டியும், ஷர்ட்டும் நான் திருடியிருக்கறேன் ; உண்மை தான். இதை நான் யார்கிட்டேயும் சொல்லத் தயாராவே இருக்கறேன். ஆமாம்! பெரிய காக்கா எனக்குன்னு என்ன தந்திருக்கறீங்க ? ''

'' நீ படுத்துக்கறியே அந்தக் கட்டில். அதுக்கு என்ன விலை தெரியுமா ? 40 ரூவா. கட்டிலிலே விரிச்சுப் போட்டிருக்கற ஜமுக்காளம், மெத்தை தலையணைங்க, பெட்ஷீட், நீ போத்துக்கிறயே அந்தக் காஷ்மீர் சால்வை. அதுக்கு மட்டும் என்ன விலைன்னு நினைக்கறே ? 50 ரூவா. நீ ஸ்டைலாகக் குத்திக்கிட்டு நடக்கறியே, அந்தப் பார்க்கர் பௌண்டன் பேஞு. அதுக்கு விலை என்னன்னு நினைக்கறே ? 42 ரூவா. இது தவிர நீ வர்றப்ப எல்லாம் பணம். இதுக்கெல்லாம் கணக்கே கிடையாது.''

'' இதெல்லாம் பழசுங்கதானே ? புதுசா என்ன வாங்கித் தந்தீங்க ? ''

'' உனக்குத் தந்தபோது புதிசாத்தானே இருந்திச்சி ? ''

'' பெரிய காக்கா ! எனக்கு ஒரு 25 ரூவா கொடுங்க.''

'' எதுக்குடா ? ''

'' எனக்கு வேணும்.''

ஹனீஃபா பணம் கேட்டான். அபு கேக்கருன். இன்னிக்கு என்ன விசேஷம் ? அபுவுக்கு பணத்தின் தேவை ஏதும் அவ்வளவாக்க

கிடையாது. பத்து அல்லது இருபது ஷர்ட்டும் வேட்டியும் பனியனும் அவனிடம் இருக்கின்றன. ஒரு பெட்டி நிறைய செருப்புக்கள். 60 ஜோடியுண்டு, என்று உம்மா சொல்லியிருக்கிருள்.

குளிக்கப் போயிருந்த பெண்கள் திரும்பி வருகையில், ஆண்களும் மதிய உணவு அருந்த வீடு திரும்பினுர்கள். அப்துல் காதர் உள்ளே நுழையும் போதே கேட்டான்: "அண்ணு! ஒரு 50 ரூவா வேணும். எனக்கு அவசரமாத் தேவைப்படுது."

"உன் வழியைப் பாத்துக்கிட்டு போடா."

ஹனீஃபா மீண்டும் நினைவுபடுத்தினுன்:

"நான் கேட்டது ஒரே ஒரு 10 ரூவாதான்."

நான் எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தேன். ஒரு மணி நேரம் சென்றதும் மர்மம் வெளியாயிற்று. தபால்காரக் குட்டம்பிள்ளை படியேறி வந்து சொன்னுன்:

"சாருக்கு ஒரு மணியார்டர், 100 ரூவா வந்திருக்குது."

குட்டம் பிள்ளையின் ஒரு பக்கத்துக் கன்னத்தில் ஒரு சிறு மாம் பழத்தை உள்ளே அடக்கிக் கொண்டிருப்பது போல ஒரு உருண்டை உண்டு. அதை நோட்டமிட்டவாறு நான் கேட்டேன்: "குட்டம் பிள்ளே! இந்த மணியார்டர் விஷயத்தை யாருகிட்டெயாச்சியும் சொன்னீங்களா?"

"சாரே! நாங்களெல்லாம் இந்த ஊரிலேயே இருக்கறவங்க. அப்துல்காதராலேயும் ஹனீஃபாவாலேயும் எனக்குப் பல காரியங் களும் ஆகவேண்டியிருக்குது. சாருக்கு மணியார்டர் ஏதும் வந்திச் சின்ன முன்கூட்டியே அதைப்பத்தி அவங்களுக்குத் தெரியப் படுத்தணும்னு எங்கிட்ட அவங்க சொல்லியிருக்கருங்க."

"அப்படியானு எனக்கு இந்த மணியார்டர் வேண்டாம். குட்டம் பிள்ளை நீங்களே எடுத்துக்குங்க."

"ஐயய்யோ! அது ஏன் அப்படி?"

"ஐம்பதும், ஒரு இருபத்து அஞ்சும், ஒரு பத்தும் மூன்று ஐந்து மானுல் எவ்வளவு?"

"நூறு."

"அதுதான் இந்த ரூபாய்க்கான கணக்கு."

குட்டம் பிள்ளையிடம் நான் விவரங்களையெல்லாம் எடுத்துச் சொன்னேன். அவன் சொன்னுன்: "அதெல்லாம் அப்படித்தான் இருக்கும் சாரு."

உம் உம்! அதெல்லாம் அப்படித்தான்! என்ன ஒரு பயங்கரமான சதித்திட்டம்! எவ்வளவு பெரிய பகல் கொள்ளை!

குட்டன் பிள்ளை, தன் மகள் சரஸ்வதியைக் காலேஜில் சேர்த்திருக்கும் விவரங்களைச் சொல்லிக் கொண்டிருக்கையிலேயே, நான் மணியார்டர் கூப்பனில் ஒப்பமிட்டுக் கொடுத்தேன். ரூபாய் நூறையும் நோட்டுக்களாக என் கையில் அவன் வைத்தான். அப்போது உம்மாவும் ஆனும்மாவும் சும்மா—சும்மாத்தான் வராந்தாவில் வந்து அமர்ந்து கொண்டார்கள்.

நான் பத்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து பாத்தும்மாவின் ஆட்டின் வாயருகே நீட்டினேன்.

"சாரே! இது என்ன வேடிக்கை?" என்று குட்டன் பிள்ளை கேட்டான். நான் சொன்னேன் :

"அதுவும் தான் தின்னுட்டு போவட்டுமே! பாத்தும்மாவுடைய ஆடு இல்லே! பாவம்! பிரசவிச்சு ஒண்ணு ரெண்டு நாள்தான் ஆச்சி."

குட்டன் பிள்ளை சிரித்துக்கொண்டே வெளியேறினன்.

அம்மா கேட்டாள் :

"எத்தினி இருக்குடா?"

"உங்களுக்குத் தெரியாது?"

என்னவென்று சொல்வது! அன்றைய தினமே அவ்வளவும் க்ளோஸ்!

## 5

அன்று மாலை ஹனீஃபா செலவில் எனக்கு சாயா கிடைத்தது. வழக்கமாக அப்துல்காதர் தான் காசு தருவான்; குடிப்பது என்னமோ ஹனீஃபா கடையில் அமர்ந்தவண்ணம்தான். அன்று என்னவோ சாயாவுக்கு ஹனீஃபாவே காசு கொடுத்தான்.

ஹனீஃபா பெரும் கஞ்சன். அவனுடைய கடையில், ஒரு விளக்கு கூடக் கிடையாது. அவனது கடைக்கு அடுத்ததுதான் அப்துல் காதரின் தகரக்கடை. அங்கு பத்துப் பன்னிரண்டு பெட்ரோமாக்ஸ் விளக்குகள் இருந்தன. ஒரு கிராமபோனும் உண்டு. கிராமபோன் என்னுடையதுதான்; ஆனல், என்னிடமிருந்து வாங்கித் தருமாறு

உம்மாவிடம் அழுது பிடிவாதம் பிடித்து அதைக் கடையில் கொண்டு வந்து வைத்துக்கொண்டிருக்கிருன். விளக்குகளும், கிராமபோனும் வாடகைக்குக் கொடுக்கப்படுகின்றன. மாலைக்குப் பிறகும் வேலை நீடித்தால், ஹனீஃபா அபுவைக் கூப்பிட்டுச் சொல்லுவான்: "அந்த விளக்கைக் கொஞ்சம் இந்தப் பக்கமா நகர்த்தி வை!"

இப்படிக் கிடைக்கும் வெளிச்சத்தில்தான் ஹனீஃபா தைப்பான்.

நான் இப்படியே அமர்ந்து யோசித்துக் கொண்டிருக்கும்போது அப்துல் காதரின் கதை நினைவுக்கு வந்தது.

அவன் எப்போதுமே நெருப்பின் அருகேதான் வேலை செய்கிருன். அந்தக் கடையில் கொல்லன் உலை இருக்கிறது. அயராது உழைப்பவன் அவன். அவனுடைய தலை முழுவதும் நரைத்துப்போய் விட்டது என்பதை முன்பே சொல்லியிருக்கிறேன் அல்லவா? அவனை என்னுடைய அண்ணன் என்றே பலரும் தவருக நினைப்பது உண்டு. அதிகத் துணிச்சலான வேலைகளையெல்லாம் ஏற்று முடித்திருக்கிருன். நாங்கள் இருவரும் சேர்ந்து மலையாளம் 4-ஆம் வகுப்பு வரைப் படித்தோம். பிறகு நான் ஆங்கிலப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தேன். அப்துல்காதர் மலையாளம் 7-ஆம் வகுப்பு பாசான போது நான் கண்ணனூர்ச் சிறையில் ஒன்பது மாதக் கடுங்காவல் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருந்தேன் என்று நினைவு. அந்தக் கதையை "ஓர் ஓர்மக் குறிப்ப" (ஒரு நினைவுக் குறிப்பு) என்னும் புத்தகத்தில் எழுதியிருக்கிறேன். தண்டனைக்காலம் பூர்த்தியான பிறகு விடுதலையாகி நான் ஊர் வந்தபோது, குடும்பச் சொத்து முழுவதுமே கடனில் மூழ்கிப் போயிருந்தது. நல்லபடியாக உண்பதற்குக் கூட வீட்டில் எதுவும் கிடையாது. புதுஸ்ஸேரி நாராயண பிள்ளை சார், எங்களுக்கு அ, ஆ கற்பித்த ஸ்கூலில், அப்துல் காதர் ஆசிரியராக இருந்தான்.

பத்திரிகை ஏதேனும் ஆரம்பிக்கலாம் என்று எண்ணி, நான் கொச்சிக்குப் போனேன். சிறிது காலத்துக்குப் பிறகு நான் ஊருக்கு வந்தபோது, அப்துல் காதர் ஆசிரியர் வேலையை விட்டு விட்டு, ஒரு கடையில் பீடி சுற்றுபவனுக வேலையில் அமர்ந்திருந்தான். தன் முன்னுல் முறத்தில் பீடி இலைகள், நூல், கத்திரிக்கோல், ஆகியவற்றை வைத்துக்கொண்டு அவன் பீடி சுற்றிக் கொண்டிருந்தான். ஒரு நாளைக்குச் சுமார் 2000 பீடிவரைச் சுற்றுவான். ஒன்று அல்லது ஒன்றரை ரூபாய் வரை கிடைக்கும். அடுத்த முறை நான் ஊர் திரும்பியபோது, அவன் பீடி சுற்றும் வேலையை விட்டுவிட்டு மார்க்கெட்டில் ஒரு சின்ன அறையில், கொல்லன் உலை வைத்துக்

கொண்டு தகரச்சாமான் செய்யும் பணியில் ஈடுபட்டிருந்தான். தகரத்திஞல் பற்பலவிதமான சாமான்களைச் செய்வதில் அவன் கை தேர்ந்தவஞக இருந்தான். இதையெல்லாம் அவன் யாரிடமும் கற்றுக் கொள்ளவே இல்லை. சுயபுத்தி, சுய முயற்சிகள் தாம்.

அந்தக் காலத்தில், நான் எழுத்தாளஞக எர்ணுகுளத்தில் வசித்து வந்தேன்—1936-37 இல் நிறைய எழுதி எழுதிக் குவிப்பேன். சாப்பிடக்கூட எதுவுமே இருக்காது; இருந்தாலும் எழுதுவேன். பத்திரிகைகளில் எல்லாம் அவை வெளியாகி வந்தன. பத்திரிகைகளிலிருந்து அவற்றை வெட்டி எடுத்து ஒன்ருக அடுக்கிச் சேர்த்து பத்திரப்படுத்தி வைப்பேன். இப்படி ஓர் எழுத்தாளஞக நான் சிரமத்துடன் வாழ்க்கையை ஓட்டிக்கொண்டிருக்கையில், ஒருநாள் அப்துல் காதர் இரும்புத் தடியை ஊன்றியவாறு பருமஞன ஒரு பௌண்டன் பேஞவுடன் என்னிடம் வந்தான்.

"இக்காக்கா! பத்திரிகைகளிலெல்லாம் ஏதேதோ பிரசுரமாகியிருக்குதே? அதெல்லாம் என்ன? எல்லாத்தையும் இங்கே கொஞ்சம் கொடுங்க. நான் கொஞ்சம் படிச்சு பாக்கட்டும்."

சற்றே பெருமையோடு, நான் எனது இலக்கியப் படைப்புக்களையெல்லாம் எடுத்து அவன் கையில் கொடுத்தேன். பிறகு அவனிடமிருந்து இரண்டணு வாங்கிக் கொண்டு சாயா குடிக்கப் போனேன். அவன் அவற்றையெல்லாம் நிதானமாகப் படித்து ரசிக்கட்டும் என்ற எண்ணத்தில் கொஞ்சம் இங்குமங்குமாகக் காலாரச் சுற்றினேன். 'அவனிடம் இன்னும் ஒரு 4 அணு கடன் வாங்கிக் கொள்ள வேண்டும்; உலகப் பிரசித்தி பெற்ற படைப்புக்களின் மூலகர்த்தாவான அவனுடைய சொந்த அண்ணனல்லவா கேட்கிருன்? அவன் நிச்சயமாகத் தருவான்' என்றெல்லாம் எண்ணமிட்டபடியே நான் அறைக்குத் திரும்பினேன். அவன் என்ன செய்திருக்கிருன் தெரியுமா? தான் படித்த எல்லாக் காகிதங்களிலும் தன்னுடைய பருமஞன பேஞவிஞல் கோடு கிழித்திருக்கிருன்.

எதற்காக இந்தக் கோடுகள்? நான் பீடி ஒன்றைப் பற்றவைத்துக் கொண்டு, நாற்காலியில் அமர்ந்ததும் அவன் கூப்பிட்டான். "இக்காக்கா! இங்கே வாங்க!"

ஏதோ முக்கியமானதொரு விஷயமாக இருக்கும். நான் நாற்காலியை விட்டு எழுந்து அவனருகே பாயில் அமர்ந்து கொண்டேன். அவன் மிகவும் இகழ்ச்சியோடு என்னைப் பார்த்தான். பிறகு ஒரு வாக்கியத்தை உரக்கப் படித்தான். நல்ல கம்பீரமான

ஒரு வாக்கியம் அது. ஆனால் அவன் கேட்டான்: "இதில் 'ஆக்யாதம்' எங்கே?"

எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

"ஆக்யாதம் என்றால்?"

தொடக்கப் பள்ளி மாணவனோடு பேசுவதாக நினைத்துக் கொண்டு என்னோடு அவன் சற்று நேரம் 'லெக்சர்' அடித்தான். அதில் 'ஆக்யா' 'ஆக்யாத்' 'விசேஷண்' 'அன்வய்' லொட்டு லொசுக்கு —முதலிய, இலக்கணம் சம்பந்தப்பட்ட சர்ச்சைகள் அடங்கியிருந்தன. லொட்டு லொசுக்கு என்று அவன் சொல்லவில்லை! அரைமணி நேரம் பொழிந்து தள்ளிய உரையில் அவன் என்னை ஒரு முழு முட்டாளாக்க முயற்சித்தான். பிறகு சொன்னான்: "இக்காக்கா, இலக்கணம் படிக்கவேண்டியது மிகவும் அவசியமாகும்."

அதோடு நிறுத்திக் கொள்ளாமல், இலக்கணப் புத்தகங்கள் சிலவற்றின் பெயர்களையும் எனக்குக் கூறி, அவற்றை எல்லாம் நன்கு படிக்குமாறும் உபதேசம் செய்தான்.

எனக்குக் கோபம் பொங்கியது. நான் சொன்னேன்: "போடா இங்கிருந்து. நீயும் உன் ஆக்யாதமும்! அடே நெய்யெத் திருடித் தின்னுட்டு நோயாளின்னு சொல்லிக்கிட்டுத் திரிஞ்ச பெருந் திருடன் தானே நீ! இதெல்லாம் உனக்கெங்கேடா விளங்கப் போவுது. பரஸ்பரம் ஒர்த்தரோட ஒர்த்தர் பேசிக் கொள்றது போல சாதாரண நடையிலே எழுதியிருக்கேண்டா. இதிலே உன் நொட்டை 'ஆக்யாத'மில்லாமப் போனா என்னடா முழுகிடும்? நொண்டி!"

அவன் சொன்னான்: "அண்ணச்சி, என்னெ எப்படி வேணுமானாலும் திட்டுங்க. பரவாயில்லே. ஆனா ஒண்ணு, நீங்க குறைஞ்ச பட்சம் ஒரு வருஷமாச்சும் நான் சொன்ன இந்தப் புத்தகங்களையெல்லாம் நல்லாப் படிச்சி, நல்லவிதமா எழுதவும் படிக்கவும் கத்துக் கிட்டப்பறம் எழுதத் தொடங்குங்க."

"போடா, உன் வழியைப் பாத்துக்கிட்டு." நான் சொன்னேன்: "வீட்டிலே எல்லாரையும் நான் விசாரித்ததாகச் சொல்லு.— முக்கியமா வாப்பாவையும் உம்மாவையும். எனக்கு இன்னும் பணம் ஒண்ணும் கிடைக்கத் தொடங்கலே; அதனாலேதான் நான் வீட்டுக்கு இன்னும் ஒண்ணும் அனுப்பலேன்னும் சொல்லு."

அவனிடம் காலணாக்கூட கடன் கேட்கவில்லை. கேட்க மனம் வரவில்லை. அவனும் அவனது துப்பில்லாத இலக்கணமும்!

அந்தக் காலமெல்லாம் போய்விட்டது: இப்போது எனது புத்தகங்களையெல்லாம் அவன் ஆவலோடு வாசிப்பான். எங்களது

உறவினர்களைப் பற்றியும் அவ்வப்போது ஒரு சில கதைகளை எழுது மாறும், அவன் என்னிடம் கூறுவான். "இக்காக்கா நீங்க எழுதிக் கொடுங்க போதும்; மத்ததை எல்லாம் நான் பாத்துக்கிடறேன். அந்தக் கதைங்களைப் புத்தகமா அச்சடிச்சி விக்கறது எல்லாம் என் பொறுப்பு. விடுங்க."

ஆமாம்! பணத்தையும் அவனே சுவாஹா செய்வான். தெரியாதா என்ன? பெரும் திருடன்!

அடுத்த நாள் வாயில் தண்ணீர் ஊறிப் பெருக, என்னுடைய சாம்பமரத்தைப் பார்த்தபடி பெண்கள் போய்க் கொண்டிருக்கையில், பாத்தும்மா வந்து ஆட்டையும் குட்டியையும் தன் இருப்பிடத்துக்கு அழைத்துக் கொண்டு போனாள்.

"இத்தே இங்கே யாருமே கவனிக்கமாட்டாங்க இக்காக்கா. அபு விரட்டி ஓட்டுவான். அதோட நாளையிலேந்து பால் விற்க ஆரம்பிக்கணும். பால் தர்றேன்னு ஒரு சாயா கடைக்கு வேறே சொல்லி வெச்சிருக்கறேன்!"

ஓஹோ! அதுதானே பார்த்தேன்! பாத்தும்மா ஆட்டையும் குட்டியையும் அழைத்துக் கொண்டு போனாள்.

அதன் பிறகு ஆடும் குட்டியும் திரும்பி வருவது பகல் 10 மணிக்குத் தான். குட்டி குஷியோடு இங்குமங்கும் துள்ளித் திரியும். என்னுடைய படுக்கையில் ஏறும். பிள்ளைகளுடன் கூடவே உண்ணும். தாய் ஆடும் கூடப் பேராசைக்காரியாய்ப் போய் விட்டாள். குழந்தைகளுடன் கூடவே சாதம் சாப்பிடுவாள். ஒரே சத்தமும் ரகளையும் ஓட்டமும்தான்.

இப்படியே சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் வீட்டில், சிரிப்பும் கூச்சலும் கும்மாளமுமாக ஒரே அமர்க்களமாக இருந்தது. ஒரே உற்சாக ஆரவாரம், அபி, பாத்துக்குட்டி ஸையது முகம்மது, லைலா, ஹனீஃபா முதலியோர் சாயாவில் பால் விட்டுக் குடித்துக் கொண்டிருந்தார்கள்! அதற்குச் சிரிப்பும் கும்மாளமும் ஏன்? நான் உள் கட்டுக்குச் சென்றேன். இரண்டு ஆனும்மாக்களும் (குஞ்ஞானும்மா, ஆனும்மா) ஐசோம்மாவும் உம்மாவும் மரச்சீனிப் புட்டோடு பால் சாயாவும் குடித்துக் கொண்டிருந்தார்கள்! அதோடு எல்லோரும் சந்தோஷமாகச் சிரித்துக்கொண்டு மிருந்தார்கள்.

"ஒரே சிரிப்பும் கும்மாளமுமா இருக்குதே, என்ன விஷயம் உம்மா?"

"ஒண்ணுமில்லேடா!" உம்மா சிரித்துக் கொண்டே சொன்னாள்.

"பெரிய அண்ணு! யாரு கிட்டயும் சொல்லிடாதீங்க. நாங்க ஆட்டுக்குட்டியேப் பிடிச்சுக் கட்டிப் போட்டுட்டோம்."

"அப்புறம்?"

"பெரியண்ணு! சொல்லிடுவீங்களா?"

"ஆட்டா. விஷயம் என்னன்னு சொல்லுங்க?"

அப்துல் காதரின் மனைவி குஞ்ஞானும்மா இடையே புகுந்து சொன்னுள்:

"நாங்க, பாத்தும்மா அக்காவோட ஆட்டைக் கறந்தோம். ஆழாக்கு பாலு கெடச்சிது."

"என்ன அம்மா இது, நீங்க எதுக்காகப் பாத்தும்மாவோட ஆட்டைத் திருட்டுத்தனமாக் கறந்தீங்க?"

உம்மா சொன்னுள்: "அதனுலே என்ன? பாலு கொடுப்போம்கிற நினைப்பே அவளுக்கு இல்லையே, அதனுலேதான்."

ஆனும்மா சொன்னுள்:

"பெரியண்ணு! சொல்லிடாதீங்க. அப்புறம் எங்களுக்கெல்லாம் அவமானமாப் பூடும்."

"அவமானப்படுங்க! என் கண்ணு முன்னுலேயே இப்படித் திருட்டுத்தனம் செய்யறதை நான் எப்படி அனுமதிப்பேன்?"

பாத்தும்மா வந்தவுடன் நான் சொன்னேன்: "பாத்தும்மா! நீ சாக்கிரதையா இருக்கணும். ஏன்னு, இவங்க எல்லாருமாச் சேர்ந்து உன் ஆட்டைக் கறந்து, அந்தப் பாலைவிட்டுச் சாயா குடிச்சாங்க. குட்டியே முன்னுலேயே கட்டிப் போட்டுட்டாங்க."

பாத்தும்மாவுக்கு கிலி பிடித்ததே பார்க்கலாம்.

"அவுங்க நெஞ்சிலே ஈவு இரக்கம் ஏதுனுச்சியும் இருக்குதா? அவுங்க புள்ளெங்களா இருந்தா இப்படிக் கட்டிப் போடுவாங்களா? நீங்களே சொல்லுங்க?"

பாத்தும்மா உட்புறம் ஓடினுள். அங்கு அப்போது உம்மா, ரெண்டு ஆனும்மாமாரு, ஐசோம்மா, பாத்துக்குட்டி, லைலா, அபி, ஆரிஃபா, எல்லாருமே தயாராக நின்றுகொண்டிருந்தார்கள். எல்லோருமாகச் சேர்ந்து ஒரே குரலில் ஓலமிட்டனர்: "நாங்க செய்தது ரொம்ப சரி! இன்னமும் அப்படியேதான் செய்வோம். ஆடும் குட்டியும் வளர்றது என்னமோ இங்கேதான்! எங்களோட மரச்சீனிப்புட்டு, எங்க பலாவோட இலையுங்க, எங்களோட கஞ்சித் தண்ணி, எங்க புள்ளெங்களோட சோறு, இதெல்லாத்தையும் தின்னுட்டுத்தான் அது பெருத்துப் போயிருக்குது. நாங்கதான் அதை வளக்கறமாக்கும்!"

பாத்தும்மா இப்போது அவர்களுக்கிடையே பிளவுண்டாக்க முயற்சி செய்தாள் :

"அடி ஆனும்மா! நீ என் அருமைத் தங்கையில்லே! உனக்குன்னு நான் ஒரு ஆடுகூடத் தந்திருக்கறேனேடி. உம்மா, என் அருமை அம்மா! நீங்க என்னைப் பெத்தவங்க இல்லே? ஈவு இரக்கமில்லாத இந்த மருமகளுங்களைக் கொண்டு நீங்க செய்திருக்கிற காரியம் உங்களுக்கே நல்லாருக்குதா?"

உம்மா சொன்னாள் : "போதுமடி. போதும். உன் அண்ணிமாரு, உன்னோட உம்மா, உன்னோட அருமைத் தங்கச்சி, எல்லோருமா சேர்ந்துதான் கறந்தோமாக்கும். நாங்க எல்லாருமாச் சேர்ந்துதான் சாயாவும் குடிச்சோம். நல்ல ருசியா இருந்திச்சி!"

பாத்தும்மா சொன்னாள் : "இனிமே நான் இந்த வீட்டிலே காலெடுத்து வைக்கமாட்டேன்."

பிறகு, பாத்தும்மா ஆட்டின் குட்டியை வாரி எடுத்து முத்த மிட்டவாறு சொன்னாள் :

"என் கண்ணு, உனக்குச் சேரவேண்டிய பாலை இவங்க எல்லாருமா திருடிக் குடிச்சுட்டாங்கடா! உனக்குப் பச்சத் தண்ணி தரேண்டா செல்லம்!"

பாத்தும்மா ஆட்டுக் குட்டியை எடுத்துக்கொண்டு என்னிடம் வந்தாள்.

பெரிய அண்ணு! நான் போறேன். இனிமே இவங்க என் ஆட்டைக் கறந்து எப்படிப் பாலு குடிக்கப் போறாங்கன்னு, பாத்துப்புடறேன்!"

பாத்தும்மா ஆட்டின் குட்டியை எடுத்துக்கொண்டு போனாள். எனக்கு மிகவும் திருப்தியாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது. குட்டி இல்லாமல், இவர்கள் ஆட்டைக் கறந்து எப்படிப் பால் குடிப்பார்கள்? அதையும்தான் பார்க்கலாமே? ஹொஹ்ஹோ!

# 6

சரியாகப் பத்து மணிக்குப் பாத்தும்மாவுடைய ஆடு வரும். சற்றுப் பொறுத்து பாத்தும்மாவும் கதீஜாவும் வருவார்கள். பாத்தும்மாவுக்கு உள்ளூரக் கோபம் உண்டோ என்னமோ? அண்ணிமாரோடும் உம்மாவோடும் தங்கச்சியோடும் கலகலப்பாகப் பேசிக்கொண்டு தான் இருந்தாள். வீட்டு வேலைகளையும் செய்கிருள்; மரச்சீனிப்புட்டு தின்கிருள்; பாலில்லாத கறுப்புச் சாயா குடிக்கிருள்; ஆட்டுக்குக் கஞ்சித் தண்ணியும் கொடுக்கிருள். கொச்சுண்ணி வந்தபோது பால் திருட்டுப் பற்றி நான் அவனிடம் கூறினேன்.

அவன் சொன்ஞன்: "கொஞ்சம் பாலு கொடுத்தனுப்புன்னு நானும் சொன்னேன். பாத்தும்மா என்ன செய்திருக்கரு தெரியுமா? நாலு வீடுங்களுக்குப் பாலு தர்றதா ஏத்துக்கிட்டிருக்கரு. ஒரு சாயாக் கடைக்குப் பாலு ஊத்தறதா நானும் வாக்குக் கொடுத்திருக் கறேன். எனக்கும் கதீஜாவுக்கும் சாயாவுக்குக்கூடக் கொஞ்சம் பாலு கொடுக்கறது கிடையாது."

ஓஹோ! அப்படியா சமாச்சாரம்! அப்ப, வேண்டுமென்ருல் கொச்சுண்ணியும் கதீஜாவும்கூட, கொஞ்சம் பால் திருடத் தயங்க மாட்டார்கள்!

நான் பாத்தும்மாவிடம் கேட்டேன்: "இன்ஞ நீ, கொச்சுண்ணிக் கும் கதீஜாவுக்கும்கூடக் கொஞ்சம் ஆட்டுப் பாலு கொடுக்க மாட்டேங்கறே?"

பாத்தும்மா சொன்ஞள்: "பாலு வித்துக் கிடைக்கற பணத்தைக் கதீஜாவோடு வாப்பாதானே வாங்கிக்கிடருரு? அதோட இத்தினி நாளும் எல்லாரும் பாலு இல்லாமத்தானே சாயா குடிச்சோம்; இப்ப மட்டும் ஏன் இந்த ஆசை? நான் மட்டும் பாலு விட்டுக்கறேஞ என்ன?"

"நீ ரொம்ப கஞ்சத்தனமுள்ளவளா ஆயிட்டே போ."

"கதீஜாவுடைய வாப்பா சீட்டுச் சேர்ந்திருக்காரு. அதுக்குக் கட்டப் பணம் வேணுமா?"

அதுவும் நியாயம்தான் என்று எண்ணமிட்டபடி இருக்கும்போது, சுலைமான் 3 அன்ஞசிப் பழங்களைக் கொண்டுவந்து என்னிடம் தந்து விட்டுச் சொன்ஞன்: "சீம அன்ஞசி. ரொம்ப ருசியாயிருக்கும்."

அதிலிருந்து நான் ஒரு பழத்தை எடுத்து, தோல் சீவிவிட்டு பிள்ளைகளுக்கெல்லாம் ஒவ்வொரு துண்டு கொடுத்துவிட்டு, தின்று கொண்டிருக்கும்போது, அபு கம்பீரமாக உள்ளே வந்தான்.

"ஆ... பணக்காரன்னு இப்படித்தான் இருக்கும்"—அவன் சொன்னான். "அன்னுசி தர எனக்கு யாராச்சும் இருக்கறுங்களா? பெரிய காக்காவுக்கு இன்னிக்கு ஒரு விருந்து வைக்க ஏற்பாடு நடந்துக்கிட்டு இருக்குது."

"என்ன விருந்து?"

"அரிசிப் பணியாரம், ஈரல் கறியும், சாயாவும்."

"நீயும் என்கூட வந்திடு."

"என்னை யாரும் கூப்பிடலையே? பெரிய காக்கா, ஒரு விஷயம் தெரியுமா? மஹா கருமியான பெரிய அக்கா பாத்தும்மா, சின்ன அண்ணனுக்கும் ஹனீஃபா அண்ணனுக்கும் பாலுவிட்ட சாயா கொடுத்தனுப்பியிருந்தாங்க!"

"பாலுவிட்ட சாயாவா?"

"ஆமாம்!"

"உனக்குக் கொடுக்கல்லே?"

"நான் பக்கத்திலேயேதானே இருக்கறேன். அதனாலே எனக்கும் ஒரு சிங்கிள் கிடைச்சது."

ஆச்சரியம்தான்! பாத்தும்மா, அப்துல் காதருக்கும் ஹனீஃபாவுக்கும், கூடவே அபுவுக்கும் பால் சாயா கொடுத்தனுப்பியிருக்கிறாள்! இதிலே என்னமோ இருக்குது விஷயம்.

"பாத்தும்மா பால் சாயா கொடுத்தனுப்பக் காரணம் என்ன?"

"ஹனீஃபா காக்கா ஸ்ட்ரைக் பண்ணினாரு."

"என்ன ஸ்ட்ரைக்?"

"பெரிய அக்காவோட ரவிக்கைகளையும் கதீஜாவுடைய சட்டைகளையும் தைக்கறது ஹனீஃபா காக்காதான். அவங்களோட கிழிசத் துணிங்களையெல்லாம் ஒட்டுப் போட்டுச் சீராக்கிக் கொடுக்கறதும் அவருதான். முந்தா நாளுன்னு நினைக்கறேன். எதையோ தைச்சு வாங்கிக்கிட்டு போறதுக்காகக் கதீஜா கடைக்கு வந்தப்ப தைக்க விருப்பமில்லேன்னு ஹனீஃபா காக்கா சொல்லியனுப்பிட்டாரு. இந்த மாதிரி இனிமேலும் சொல்லாம இருக்கோணுமேங்கிறதுக்காகக் கொடுக்கப்பட்ட லஞ்சம்தான் இது, அதாகப்பட்டது ஒரு சிங்கிள் பால் சாயா!"

"சரி. அப்துல் காதருக்குக் கொடுத்தது?"

"அது வந்து, பெரிய மச்சான், சின்ன காக்காவுக்குக் கொஞ்சம் பணம் கொடுக்க வேண்டியது பாக்கியிருக்குது. பெரிய அக்காவைப் பார்த்தப்போ சின்ன அண்ணன் சொன்னாரு: 'பணத்தை உடனே திருப்பலேன்னு கேஸு போடுவேன். முதல் பிரதிவாதி பெரிய

மச்சான். இரண்டாம் பிரதிவாதி பெரிய அக்கா. மூணும் பிரதிவாதி கதீஜா. அதுவும் போதாதுன்னு ஆட்டையும் ஜப்தி செய்யச் சொல்லுவேன்!' —அப்படி எதுவும் செய்துடாம இருக்கறதுக்காகத் தான் அந்த ஒரு சிங்கிள் சாயா!"

இவ்வாறு லஞ்சம் கொடுக்கவும், பாத்தும்மாவின் ஆட்டின் பால் உபயோகப்படுத்தப்படுகிறது! அபு சொன்னான் :

"குட்டம்பிள்ளை வர்ருரு".

உண்மைதான். தபால்காரக் குட்டம்பிள்ளை படிதாண்டி வந்தார். ஒரு பார்சலை என்னிடம் கொடுத்தார். நான் கையெழுத்துப் போட்டு அதனைப் பெற்றுக்கொண்டேன். குட்டம்பிள்ளை போன பிறகும் நான் அதைப் பிரிக்கவில்லை. உம்மா கேட்டாள் :

"அந்தக் கட்டுலே என்னடா வந்திருக்குது?"

நான் சொன்னேன் : "என்னோட புதுப் புத்தகத்தோட பத்துக் காபி, பிரசுரகர்த்தா எனக்கு இனுமா அனுப்பித் தந்திருக்கான். போதுமா?

உம்மாவுக்கு மேற்கொண்டும் அறியனும். "இதை வித்தா பணம் கிடைக்குமோ?"

"நீங்க கொஞ்சம் உங்க வழியைப் பாத்துக்கிட்டு உள்ளே போறீங்களா? எப்பப் பாரு பணம், பணம், பணம்!"

அப்போது என்னிடம் காலணக்கூட கிடையாது. மனதில் ஒரு யோசனை தோன்றியது. உம்மா போன கையோடு, அபுவை நான் ரகசியமாகக் கூப்பிட்டேன்.

"உன்னாலே இந்தப் புத்தகங்களை பஜாருக்கு எடுத்துட்டுப் போயி, விற்க முடியுமா?"

அவன் உடனே கேட்டான் :

"எனக்கு என்ன கமிஷன் தருவீங்க?"

"எல்லாம் தர்றேண்டா" என்று சொல்லி பார்சலைப் பிரித்து, ஒன்பது புத்தகங்களை ஒரு காகிதத்தில் கட்டி அபுவின் கையில் கொடுத்தனுப்பிவிட்டுக் காத்துக் கொண்டிருந்தேன்.

சொந்த ஊர். நான் எழுதிய புத்தகத்தை யாராவது காசு கொடுத்து வாங்குவாங்களா? ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் கழிந்தது. அபு வந்தான். நல்ல காலம். எல்லாப் புத்தகங்களுமே விற்றுப்போயிருந்தன!

ஒரு புத்தகத்தின் விலை முழுவதையுமே அபுவுக்குக் கொடுத்தேன். பாக்கிப் பணத்தை எண்ணிக் கொண்டிருக்கையில் 'எத்தினி கிடைச்சுது?' என்று கேட்டவாறே உம்மா வந்தாள். இந்தப்

பணத்தை அவர்கள் பார்த்து விட்டார்கள் என்பதை அறிந்ததும் எனக்குக் கெட்ட கோபம் வந்தது. என் பக்கத்தில் இருந்த கண்ணாடித் தம்ளரை எடுத்து, என் பலம் முழுவதையும் உபயோகித்து எறிந்தேன், எதிரில் இருந்த சுவரை நோக்கி! ஒரு பத்தாயிரம் சுக்கல்களாகக் கிளாஸ் நொறுங்கி வீழ்ந்தது. வீடு நிசப்தமாகியது. எனக்குப் பெருத்த நிம்மதி உண்டாயிற்று. உம்மா மௌனமாக உடைந்த சில்லுகளையெல்லாம் பெருக்கி எடுத்து ஒரு காகிதத்தில் சுற்றி, வெளியே கொண்டுபோய் எறிந்துவிட்டு வந்தாள். பிறகு, எதுவுமே பேசாமல் எனக்கு நேர் எதிராக, மேற்குப்புறம் பார்த்து அமர்ந்து கொண்டிருந்தாள்.

நான் மீதமிருந்த 'விஸ்வவிக்யாதமாய மூக்க' புத்தகத்தை எடுத்து, பாத்தும்மாவுடைய ஆட்டின் முன்னால் நீட்டினேன். அது பேராவலோடு அருகே வந்தது.

"இதென்ன பெரிய காக்கா இப்படிச் செய்யறீங்க?" என்று அபு கேட்டான்.

"பாத்தும்மாவோட ஆடு, 'பால்யகால சகி', 'சப்தங்கள்' ஆகிய புத்தகங்களை ருசியோடு தின்னுட்டிருக்குது. இன்னும் வேறே புஸ்தகங்க இருக்குது, தர்றேன்னு அதுங்கிட்ட சொல்லியிருந்தேன். 'விஸ்வ விக்யாதமாய மூக்கை'யும்தான், அது தின்னு பார்க்கட்டுமே!"

"அதுக்கு ரொம்ப தின்னக் கொடுக்காதீங்க." என்று அபு சொன்னான். நான் புத்தகத்தை எடுத்துக் கொண்டு போய்ப் பெட்டியினுள்ளே வைத்தேன். அபு போனதும், கிடைத்த பணத்தில் சரிபாதியை உம்மா மடியில் தூக்கிப்போட்டேன். உம்மா கேட்டாள்: "அடே ஒரு புஸ்தகத்துக்கு என்னடா விலையிருந்திச்சு?"

நான் உண்மையைச் சொன்னேன். சற்று நேரம் கழித்து அப்துல் காதர் சாப்பிட வந்தபோது, என்னிடம் மிஞ்சியிருந்த புத்தகத்தை எடுத்துக் கொண்டான்.

"ஒரு பெரிய கட்டா இல்லெ வந்தது?"

"பத்து காபி இருந்திச்சி. ஒம்பதை அபுகிட்டே கொடுத்து விக்கச் சொன்னேன்."

"பணமெங்கே?"

"ஒரு பொத்தகத்தோட விலையை, அபுகிட்டக் கொடுத்தேன். மீதமிருந்ததிலே பாதியை உம்மாகிட்டே கொடுத்தேன்."

"எனக்கொண்ணுமில்லையா?"

"நீ இந்தப் புஸ்தகத்தை வித்துப் பணத்தை எடுத்துக்க."

" உம்மா ! " என்று கூப்பிட்டவாறே அவன் உள்ளே போனுன். அங்கே சில ' கசமுச ' ஓசைகள் கேட்டன.

" இங்கே செலவெல்லாத்தையும் ஏத்து நடத்தறது நான்தானே தவிர நீங்க அல்ல ! " அப்துல் காதர் சொன்னது கேட்டது. சற்றுப் பொறுத்து, அவன் மகிழ்ச்சியோடு வெளியே வந்தான். உம்மா வுடைய முகத்தைப் பார்த்தபோது அவளிடமிருந்த பணத்தை அப்துல் காதர் பறித்துக்கொண்டு போய்விட்டான் போலும் ! என்றே தோன்றியது.

மாலை நாலு மணி வாக்கில் கொச்சுண்ணியும் கதீஜாவும் வந்து என்னை அழைத்தார்கள். நான் அபுவையும் அழைத்துக் கொண்டு போனேன்.

கொச்சுண்ணியுடைய வீட்டில் கொச்சுண்ணியுடைய அப்பா அம்மா மற்றும் அவனது சகோதரிகளும் இருந்தார்கள். பாத்தும்மா வுக்கும் கொச்சுண்ணிக்கும் பாத்தும்மாவுடைய ஆட்டுக்கும், குட்டிக்கும் கோழிகளுக்கும், நிம்மதியாக வசிக்க ஒரு சின்ன குடிசை உண்டு என்று அபு சொன்னுன். " இந்த விஷயம் பெரிய காக்கா வுக்குத் தெரியக்கூடாது'ன்னு பெரிய அக்கா சொல்லியிருக்காங்க. ஆனுல் பெரிய காக்கா, நீங்க அதை அவசியம் பாக்கணும் " என்று அபு என்னேடு ரகசியமாகச் சொன்னுன்.

சுட்ட அரிசிப்பணியாரத்தையும் ஈரல் கறியையும் நாங்கள் வயிறு நிரம்ப ஒருகை பார்த்தோம். பால் சாயாவும் குடித்தோம். பாத்தும் மாவின் வீட்டையும் பார்த்துவிட்டோம்.

" பெரிய காக்கா, ஏன் இங்கே வந்தீங்க ? " என்று துயரம் பொங்கப் பாத்தும்மா கேட்டாள். அவளுடைய வீடு இரங்கத்தக்க நிலையில் இருந்தது. மண்ணைக் குழைத்துப் பூசிய சுவர்களும், பனை ஓலையால் வேயப்பட்ட கூரையும் கொண்ட, ஒரு சிறிய அறைதான் அது. அதன் கதவு, ஏதோ ஒரு புராதன வீட்டினுடையதாகும். அதைக் கயிறு போட்டுக் கட்டிவைத்திருந்தார்கள். அதற்குப் பூட்டு ஏதும் கிடையாது.

" எனக்கு ஒரே அவமானமா இருக்குது." பாத்தும்மா சொன்னுள். " இனி நான் உயிரோடு இருந்துதான் என்ன பிரயோசனம் ? " நான் சொன்னேன் : " நீ பேசாம இரு. அந்தக் கதவுகளைச் சீராக்கறதுக் கான பணத்தை நான் கொடுக்கறேன். "

" வேணும் பெரிய காக்கா ! நான் என் ஆட்டுப்பாலை வித்து பணம் சேர்ந்தப்பறம் பண்ணிக்கறேன். "

" வேணும் ! நான் தர்றேன்னு தறேன். "

அன்று இரவு உண்ட பிறகு, நான் எங்கள் வீட்டில் மேற்குப் புறம் பார்த்தவாறு நாற்காலியில் அமர்ந்து கொண்டிருந்தேன். கொச்சுண்ணி யிருந்தான். சுலைமான் இருந்தான். பாத்தும்மா இருந்தாள். எல்லோருமே இருந்தார்கள். அப்துல் காதர், ஹனீஃபாவிடம் சொன்னான் : "அடே, நாம காலங்கார்த்தாலேயே இங்கிருந்து புறப் பட்டுடணும். கோர்ட்டு திறந்ததும் உடனே நம்முடைய கேஸை தாக்கல் பண்ணிட்டுத் திரும்பிடலாம் என்ன ?"

நான் கேட்டேன் : "என்ன கேஸ் ?"

"ஒரு சிவில் கேஸ். கூடவே ஜப்தியும் உண்டு. இந்தக் கேஸை நான் ஒத்திப் போட்டுக்கிட்டே இருந்தேன். ஆனா சில சம்பவங் களாலே, இனிமே அத ஒத்திப்போடறதுக்கு இல்லே !"

"என்ன சம்பவங்கள் ?"

"சுட்ட அரிசிப் பணியாரத்தைத் தேங்காய் பாலில் தோய்த்துக் கிண்ணத்தில் அடுக்கிவச்சுக் கொடுத்தப்ப எங்களைப் பத்தின நெனப்பு வந்துச்சா ? ஈரல் கறியைக் குழிக்கிண்ணம் நிறைய அள்ளிப் போட்டுக் கொடுத்தப்ப, எங்க நினைப்பு வந்திச்சா ? எங்களுக்கு மட்டும் ஒவ்வொரு கப் சிங்கிள் சாயா ! மத்தவங்களுக்குப் பணியாரமும் ஈரல் கறியும்."

ஆனும்மா சொன்னாள் :

"நானும் உம்மாவும் அண்ணிகளும் நாக்கிலே தண்ணி சொட்ட சொட்டக் காத்துக்கிட்டு இருந்தோம். எங்களைப் பத்தின நினைப்பும் இல்லை !"

சுலைமான் சொன்னான் : "என்னைப் பத்தியும்தான்." அப்துல் காதர் சொன்னான் : "சுலைமானே, நீதான் முதல் சாட்சி."

பாத்தும்மா சொன்னாள் : "நான் யாருக்கெல்லாம்தான் பயப் படறது ? உம்மாவுக்குப் பயப்படணும். அண்ணிமாருங்களுக்கும் என் தங்கைக்கும் பயப்படணும். சின்னண்ணாவுக்குப் பயப்படணும். ஹனீஃபாவுக்கு அஞ்சணும், அபுவுக்குப் பயப்படணும். என்னைக் கட்டினவனுக்குப் பயப்படணும், இப்ப சுலைமானுக்கும் பயப்பட வேண்டியிருக்குது !"

"எனக்கு யாரும் பயப்பட வேணாம்"—அபு தொண்டை கிழியக் கத்தினான்.

நான் சொன்னேன் : "போதுமடா."

பாத்தும்மா சொன்னாள் : "சின்னண்ணா, நான் எல்லோருக்கும் ஈரல் கறியும் பணியாரமும் சாயாவும் தர்றேன். கொஞ்ச நாள் பொறுத்துக்கிட்டாப் போதும்."

"எத்தினி நாளு?"—அவன் கேட்டான். "அதெ நான் அப்புறம் சொல்றேன் சின்னண்ணு! அடே ஹனீஃபா, நீ செய்தது சரியா? கதீஜாவுடைய துணிங்களைத் தைக்காம அப்படியே திருப்பியனுப்பி யிருக்கறியே?"

ஹனீஃபா சொன்னான்: "நான் எல்லாருக்கும் இலவசமாத் தச்சுக் கொடுத்திட்டு இப்படியே இருந்தா போதும் இல்லே? அபுவுக்குத் தினமும் ஷர்ட் தைக்கணும். ஏன்? இந்த வீட்டிலே எல்லோருக்கும்தான் தைக்கணும். எனக்கு இந்த வீட்டிலே யாராச்சும் கூலி கொடுக்கறீங்களா?"

அப்துல் காதர் சொன்னான்: "உன் பெண்டாட்டியோட ரவிக்கை தைக்க நான் காசு தரணும். லைலாவோடு பாவாடையும் பிளவுஸும் தைக்க நான் கூலி கொடுக்கணும். அபியோடு கோட்டும் ட்ரௌசரும் தைக்கறதுக்கும் நான்தான் காசு தரணும் இல்லே? ஆளு தேவலையே!"

ஹனீஃபாவுக்குக் கோபம் வந்தது. "யாரும் எனக்கு எதுவும் தர வேணாம். நான் பட்டாளத்துக்குப் போய்க்கறேன். இன்னிக்கு ராத்திரியே போயிட்றேன்."

அப்போதுதான் எனக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. நான் சொன்னேன்: "அடே கொஞ்சம் பொறுத்துக்க. ஒரு அரை மணி நேரம் கழிச்சு பட்டாளத்திலே சேரலாம். அடே, நீ முன்னே ராணுவத்திலே இருக்கறப்போ, லீவிலே பல தடவை ஊருக்கு வந்திட்டுத் திரும்பறப்போ, எர்ணாகுளத்துக்கு எங்கிட்ட வருவே யில்லே? அப்போதெல்லாம் நீ எங்கிட்டேருந்து அஞ்சும் பத்தும் கடனு வாங்கிட்டுப் போவே. கையிலே கொண்டாந்ததையெல்லாம் உம்மா வாங்கிக்கிட்டாங்க, அப்துல்காதர் வாங்கிக்கிட்டான்னுதான் எங்கிட்ட நீ சொல்லுவே. அந்தப் பணம் எதுவும் நீ திருப்பினதே கிடையாது. அதையெல்லாம் இப்ப எடு!"

ஹனீஃபா உடனே ஐசோம்மாவைக் கூப்பிட்டான்: "வெளியே வாடி, குழந்தைங்களையும் எடுத்துக்க. இந்த வீட்டிலே இனிமே நாம இருக்க வேணாம். இவங்களோட அதிகாரம் நாளுக்கு நாள் கூடிக்கிட்டே போகுது. நமக்கு அங்கே போயி ஓலைக் குடிசை ஏதாவது போட்டுக்கிட்டு இருக்கலாம். வா. எந்திரிடா அபி."

நான் கேட்டேன்: "அடே, நீ எங்கிட்டேந்து ரூபா வாங்கிக்கிட்டு இருக்கறேன்னு நினைப்பு இருக்குதா?"

அவன் சொன்னான்: "அதெல்லாம் ரொம்பப் பழைய கதை யாச்சுதே இக்காக்கா. அதெல்லாம் இப்ப யாருக்கு நினைப்பு இருக்கு?"

"ஏதோ, தரவேண்டிய பாக்கி இருக்குதுங்கறதையாவது ஒத்துக் கிட்டயே. அந்த வரைக்கும் சந்தோஷம்தான்."

நான் போய்ப் படுத்தேன். விடியற்காலை 4 மணிக்கு பாத்தும்மாவும் கொச்சுண்ணியும் கதீஜாவும் தங்கள் வீட்டுக்குப் புறப்படும் ஆயத்த ஒலி கேட்டு, நான் விழிப்புற்றேன். ஆயினும் எழுந்திருக்காமல் அப்படியே கிடந்தேன். உம்மா கேட்டாள் : "நீ எந்திரிச்சிட்டியா?"

நான் கேட்டேன் :

"நான் படுத்துக்கிட்டு இருக்கறேன். என்ன வேணும்?"

உம்மா சொன்னாள் : "உங்கிட்ட பணம் இருந்திச்சின்னு, எனக்கு ஒரு ரூவா தா. யாருக்கும் தெரியவேணாம்."

"நேத்து நான் கொடுத்தேனே?"

"அதெல்லாத்தையும் அப்துல் காதர் வாங்கிக்கிட்டான். அவன் தானே இந்த வீட்டைக் கவனிச்சுக்கிட்டுறான். எவ்வளவு செல விருக்குது? ஒரு நாளைக்கு எத்தினி ரூபா வீட்டுச் செலவுக்கு வேணும்னு நீ தான் கொஞ்சம் யோசனை பண்ணிப்பாரேன்!"

"உங்க பாட்டுக்குப் போங்க, ஆமாம்! மேலே மேலே எதாச்சும் சொன்னீங்க, நான் இப்பவே இங்கிருந்து போயிடுவேன் ஆமாம்!"

உம்மா பேசவில்லை. நான் அசையாமல் அப்படியே கிடந்தேன். கொஞ்ச நாட்கள் முன்பு நான் வந்தபோது நடந்த ஒரு சம்பவம் என் நினைவில் ஓடியது. அன்று நான் இருந்தது, வழக்கமாக வசித்து வரும் சிறிய வீட்டில்தான்.

ஒரு ஸ்பெஷல் காரில்தான் வந்து இறங்கினேன். கார் வீட்டின் முன்னால் நின்றதும் சிறு கும்பல் ஒன்று கூடியது. நான் டாக்ஸி ட்ரைவருக்கு நோட்டுக்களை எண்ணிக் கொடுப்பதை, எல்லோரும் பார்த்தார்கள்!

அன்று இரவு உணவை முடித்துக்கொண்ட பிறகு, நான் படுக்கச் செல்லத் தயாராகிக் கொண்டிருந்தபோது, அப்துல் காதரும், உம்மாவும், ஹனீஃபாவும் சேர்ந்து வந்தார்கள். வந்தவுடன் அப்துல் காதர் சொன்னான் : "இக்காக்கா, ரூவா எதினாச்சியும் இருந் திச்சுன்னு இங்கே வச்சுக்கிடாதீங்க; எங்கிட்ட கொடுங்க. யாரு னாச்சியும் திருடனுங்க வருவாங்க; வந்து அடிச்சுக் கொன்னு போட்டுடுவாங்க."

நான் உம்மாவின் கண் எதிரிலேயே, 500 ரூபாயை எடுத்து எண்ணி அவனிடம் கொடுத்தேன். இனிமேல் திருடர்கள் வந்து அடித்துக் கொல்லட்டும்! பணம் போகாதல்லவா? எல்லோரும் திருப்தியோடு போனார்கள்.

நான் மன நிம்மதியோடு அப்படியே படுத்தவாறு, ஒரு பீடியைப் புகைத்துக் கொண்டிருந்தேன். அப்போது யாரோ வீட்டினுள்ளே இருப்பது போல எனக்குத் தோன்றியது. சற்றே பயத்தோடு நான் கேட்டேன்: "யாரு அங்கே?"

"நான்தாண்டா"—உம்மா மெள்ளச் சொன்னாள். "யாருக்கும் தெரியாம நான் வந்திருக்கறேனாக்கும்."

"என்ன விஷயம்?"

"அடே, காதும் காதும் வச்சாப்பலே இருக்கணும். யாருக்குமே தெரியக்கூடாது..."

உம்மா சொன்னாள்: "நீ எனக்கு ஒரு 25 ரூவா கொடுக்கணும். யாரும் அறியக்கூடாது."

உம்மாவல்லவா! நான் 25 ரூபாய் உடனடியாகவே எடுத்துக் கொடுத்தேன். இப்படி அன்றிரவு நான் நிம்மதியாகத் தூங்கினேன். அடுத்த நாள் முதல், கடன் வாங்குவோரின் வருகை துவங்கியது இதில் பெரும்பாலானவர்கள் பெண்கள்தாம். எல்லோருமே முஸ்லிம் சமுதாயத்தைச் சேர்ந்தவர்களல்லர். ஆனால், இந்த பெண்கள் எல்லோரிடமுமே நான் தாய்ப்பால் குடித்திருக்கிறேன்! "புள்ளெ அதெ மறந்திட்டியா? ஒரு ரெண்டு ரூவா கொடேன்?"

இப்படியாக, நான் ரெண்டும் நாலும் அஞ்சுமாகக் கொடுக்க ஆரம்பித்தேன். இந்தக் கடன், ரூபாய் நூறை எட்டியபோது "இல்லே, நான் யாரோட தாய்ப்பாலும் குடிக்கலே," என்று சொல்லியவாறு கடன் கொடுப்பதையே நிறுத்திவிட்டேன். இதற்கிடையே ஒரு வேடிக்கை வேறு நடந்து கொண்டிருந்தது. உம்மா, அபியையும் பாத்துக்குட்டியையும் கூட்டிக் கொண்டு வருவாள்:

"இந்தக் குழந்தேங்களுக்கு எதினாச்சும் கொடுடா. ஆனா, செப்புக் காசை மட்டும் கொடுத்திடாதே."

அது மட்டுமல்ல.

"அடே, நீ, இப்ப இங்கேயே இருந்திட்றதுன்னு வந்திருக்கறே! உன்னைப் பார்க்கறதுக்காக உன் சிநேகிதக்காரங்க வருவாங்க இல்லே? அவங்களுக்கு நாங்க எதிலே சாதம் போட்றது?"

"இலையில்."

"சே, அது கௌரவக் கொறச்சலு இல்லே? நமக்குக் கொஞ்சம் பிளேட்டுங்களும் கிண்ணிகளும் கிளாஸுங்களும் வேணும்."

"எங்கிட்ட பணம் கிடையாது."

"அப்படியானு, நான் ஆனப்பறம்புலே இருக்கற கடைக்குப் போயி, நீ அனுப்பிச்சதாகச் சொல்லி, இதெல்லாத்தையும் வாங்கிட்டு வர்றேன்."

கிழவி சொன்னபடி செய்யக் கூடியவள். ஆனப்பறம்பில், வர்க்கீ குஞ்சுக்கு பெரிய ஸ்டேஷனரி கடை ஒன்று இருக்கிறது. அவன் என்னுடைய சிநேகிதன்தான். அங்கே உம்மா போனுல், அந்தக் கடையில் உள்ளது எல்லாவற்றையுமே வாங்கிவரத் தயங்கமாட்டாள்.

நான் சொன்னேன்: "உம்மா நீங்க போக வேணும். நானே போயி வாங்கிக்கிட்டு வர்றேன்."

நான் போய், ஒரு பெரிய கோணி நிறையப் பாத்திரங்களை வாங்கி, ஓர் ஆளைக் கொண்டு எடுத்து வருமாறு செய்தேன். இப்படியாகக் கொஞ்சம் நிம்மதியுடன் இருந்து வரும்போது, உம்மா சொன்னுள்:

"அடே, நீ இப்ப எப்படியிருந்தாலும் இங்கேயே இருந்திட்றதுன்னு வந்திட்டே. உன் சிநேகிதங்க வந்தா, எங்கே தூங்குவாங்க? நீ கொஞ்சம் படுக்கறதுக்கான தடிப் பாயிங்களும் தலையணைங்களும் வாங்கிட்டு வா!"

"நீங்க கொஞ்சம் பேசாமப் போங்க!"

இதென்னடா வம்பாப் போச்சுதே! தொல்லை தீர வேண்டி, நான் அதையும் வாங்கிக் கொடுத்தேன். பிறகு உம்மாவுக்கு ஒரு தாமிர அண்டா வேணும், நெல்லுக் கிடைச்சதுன்னு புழுக்கலாம்; குளிக்கறதுக்கு தண்ணி ரொப்பி வெச்சுக்கலாம்.

நான் எண்ணினேன்: தாமிர அண்டாவுக்குப் பிறகு, மாட்டு வண்டி! அதுக்குப் பிறகு மோட்டார் கார்! உம்!

பெட்டியும் படுக்கையும் எடுத்துக்கொண்டு நான் அங்கிருந்து விட்டேன் சவாரி...வர்க்கலையைக் கடந்து சென்று, மதராஸ் முதலிய விடங்களில் சுற்றிவிட்டுத் திரும்பி வந்தேன். மறுபடியும் சுற்றப் போனேன்; மறுபடியும் திரும்பி வந்தேன். இம்முறை இந்த விதமாகத் திரும்பியவன்தான் நான். ஹனீஃபா, 'பட்டாளத்துக்குப் போயிடறேன்' என்று சொல்வதுபோல் அல்ல; 'நான் போறேன்' என்று சொன்னுல் நிச்சயமாகவே போய்விடுவேன். அதனுல்தான் உம்மா ஒன்றுமே பேசாமல் அசையாமல் இருக்கிருள். நான் எழுந்துபோய்ப் பெட்டியைத் திறந்து, மீதியிருந்த பணம் எல்லாவற்றையுமே அவளிடம் கொடுத்துவிட்டேன்.

நான் சொன்னேன்: "இனிமே பயப்பட வேணும்! நான் போறேன்னு சொன்னுக்கூட, போக முடியாது. வழிச் செலவுக்குப் பணமில்லே. இனிமே நீங்களே என்னைக் காப்பாத்திடுங்க!"

நாட்கள் இப்படியாக நகர்ந்துகொண்டிருந்தன. அப்போது ஒரு அற்புதமான சம்பவம் நடந்தது. பாத்தும்மாவுடைய ஆட்டை, இரண்டு ஆனும்மாக்களும் ஐசோம்மாவுமாகச் சேர்ந்து கறந்து, பாலைப் போட்டுச் சாயா குடித்தார்கள் !

குட்டியில்லாமல்தான் ! ஒரு தடவையல்ல. தினசரி பால் திருட்டுத் தான். 'குட்டியில்லாமல் பால் சுரக்காது' என்ற நம்பிக்கையில் சுகமாகவும் நிம்மதியாகவும் இருந்து வருகிறாள் பாத்தும்மா !

அபியையும் பாத்துக் குட்டியையும் ஆட்டுக் குட்டிபோல ஊட்டச் செய்த முயற்சி பலிக்கவில்லை. இறுதியில் சுபைதாவும் ரஷீதும் ஆட்டுக் குட்டிகளாயினர்.

இந்த அற்புத சம்பவத்தைத்தான் பாத்தும்மா கேட்டாள். அவள் நெஞ்சில் அறைந்துகொண்டு அழுதாள்.

"நீங்க மனுசங்கதானா? இப்படிச் செஞ்சுட்டீங்களே? வேண்டாம். இனிமே இப்படிச் செய்யாதீங்க உங்களுக்கு நான் பாலு தந்திடறேன்."

அடுத்த நாள் முதல், பாத்தும்மாவிடமிருந்து அரை பாட்டில் பால் வீட்டுக்கு வர ஆரம்பித்தது.

சுபைதா, ரஷீத், அபி, ஆரிஃபா, லைலா பாத்துக் குட்டி எல்லோருக்கும் ஒரே குஷிதான். ஆனும்மாக்களுக்கும் ஐசோம்மாவுக்கும் உம்மாவுக்கும்கூட பால் சாயாதான்.

இப்போதெல்லாம் ஆட்டின்கூட குட்டியும் வருகிறது. கூடவே அரை பாட்டில் பாலுடன் கதீஜாவும்.

இப்படியாக இரண்டு விதமான பால் வீட்டிற்குக் கிடைக்கிறது. ஒன்று திருடிக் கிடைப்பது. மற்றொன்று பாத்தும்மா கொடுத்தனுப்புவது.

பாவம் பாத்தும்மா !

ஒரே ஒரு ரகசியம் மட்டும் இன்னும் விளங்காமலேயே இருந்து வருகிறது. இந்தப் 'புத்தி பெண்களில் யாருக்கு முதலில் தோன்றியது ?

# 1

சுஹ்ராவும் மஜீதும் சிறுவயது முதலே நண்பர்களாக இருந்தார்கள். இருந்தாலும் அவர்களது நட்புப் பிணைப்பில் ஒரு அசாதாரண விஷயம், அவர்களுக்கிடையே பரிச்சயம் ஆகுமுன்னால் இருவரும் பரஸ்பரம் பரம வைரிகளாக இருந்தார்கள் என்பதுதான். இத்தகைய விரோதத்துக்கு என்ன காரணம்? அவர்கள் அண்டை வீட்டுக்காரர்களாக இருந்தார்கள். இந்த இரு குடும்பத்தாரும் நட்புடனேயே இருந்து வந்தார்கள்; ஆனால் சுஹ்ராவும் மஜீதும் மட்டும் பரஸ்பரம் பகைவர்களாகவே இருந்தார்கள். சுஹ்ராவுக்கு வயது ஏழு. மஜீதுக்கு ஒன்பது. ஒருவருக்கொருவர் வாயினால் அழகு காட்டிக் கொள்வதும், பரஸ்பரம் பயமுறுத்த முயற்சி செய்வதுமே அவர்களது தினசரி வழக்கமாக இருந்து வந்தது.

இப்படியிருக்கையில் மாம்பழக் காலம் ஆரம்பித்தது. சுஹ்ராவின் வீட்டுக்கு அருகேயுள்ள சிறிய மாமரத்தில் மாங்காய் பழுத்து விழத் தொடங்கியது. ஆனால் இதுவரை ஒரே ஒரு மாம்பழம்கூட அவளுக்குக் கிடைத்தபாடில்லை! மாம்பழம் 'பொத்'தென்று விழுந்த ஓசை கேட்டதோ இல்லையோ அவள் ஆவலோடு ஓடி வருவாள்... ஆனால் அவள் காண்பது என்ன? மஜீத் அதை எடுத்துச் சுவைத்துத் தின்றுகொண்டிருப்பான்! அவளுக்குக் கொடுப்பது என்ற பேச்சே அவனிடம் கிடையாது. எப்போதாவது கொடுப்பதுபோல பாவனை செய்தாலும், அவன் கடித்துத் தின்ற பழத்தின் பாக்கியாகத்தான் இருக்கும். சுஹ்ரா மறந்துபோய் கை நீட்டிவிட்டால் போதும்!

' இந்தா இந்த முட்டியைக் கடிச்சுக்க ' என்று கூறி அவன் தனது முழங்கையை அவளது முகத்துக்கு நேரே காட்டுவான். பின்னர், அவளைப் பார்க்கும்போதெல்லாம் கண்களை உருட்டி முறைத்தும் நாக்கை நீட்டி மடக்கியும் அவளைப் பயமுறுத்தப் பார்ப்பான். இதற்கெல்லாம் சுஹ்ராவா பயப்படுவாள்? உஹூம். துளியும் அஞ்ச மாட்டாள் என்பதோடு அவளும் பதிலுக்கு இதேபோல அவனைப் பயமுறுத்துவாள். ஆயினும் இந்த மாம்பழ விஷயத்தில் மட்டும் சுஹ்ராவுக்குத் தோல்வியே கிடைத்து வந்தது.

மாம்பழம் அவளுக்கு மட்டும் ஏன் கிடைக்கவே மாட்டேன் என்கிறது? காற்றடித்தாலும் சரி இல்லையென்றாலும் சரி, சுஹ்ரா சதா அந்த மரத்தினடியிலேயே நின்றுகொண்டிருப்பாள். எதுவுமே விழாது. பெயருக்கு ஒரு இலையாவது விழாதோ? ஊஹூம்! நன்றாகப் பழுத்த மாங்காய் மரத்தில் இருக்கிறது என்பது அவளுக்குத் தெரியும். விழவில்லை என்றால் ஏறித்தான் பறிக்க வேண்டும். ஆனால் மரத்தில் சிவப்பு எறும்பு நிறைய இருக்கிறதே! ஐயோ, அது கடித்துத் தொலைத்துவிடும்! கடித்துக் கொல்லும் அந்தப் பெரிய எறும்புகள் இல்லையென்றாலும்கூட, மாமரத்தில் ஏறுவது என்பது அவளால் செய்யக்கூடிய காரியமா என்ன?— அவள் பெண்ணல்லவா!

நாக்கில் நீர் ஊறிவர வழக்கம்போல ஒரு நாள் அவள் நின்று கொண்டிருக்கையில், கிளைகளில் முட்டி மோதிக்கொண்டு படீரென ஏதோ கீழே விழுந்தது.

ஐயோ! சுஹ்ரா அது வீழ்ந்த திசையில் ஓடினாள். மகிழ்ச்சியோடு அதனைக் குனிந்து எடுக்க எண்ணினாள்; ஆனால், அவளுக்கு வெட்கமாகப் போய்விட்டது. அது அவள் நினைத்ததுபோல மாம்பழமாக இல்லாமல் தென்னம் குரும்பையாக இருந்தது! அவளது குழப்பத்துக்குக் காரணம் யாரேனும் தான் ஏமாந்ததைப் பார்த்துவிட்டிருப்பார்களோ என்பதுதான். இல்லை, யாரும் பார்க்கவில்லை. ஆயினும் மாமரத்திலிருந்து எப்படி குரும்பை விழுந்தது? அவள் சுற்றுமுற்றும் கண்களை ஓடவிட்டபோது அவனைப் பார்த்துவிட்டாள். போக்கிரி! அவள் உடலெல்லாம் பற்றி எரிந்தது.

வெற்றிப் பெருமிதத்தில் மஜீத் அர்த்தமில்லாமல் ஓசை ஒன்றை எழுப்பினான். 'ஜுக்கு ஜுகு! ஜுக்கு ஜுகு!' பிறகு மாமரத்தினடிக்குச் சென்றான். அதோடு கண்களைப் பயங்கரமாக உருட்டி முறைத்தான். நாக்கை எவ்வளவு தூரம் நீட்ட முடியுமோ அவ்வளவு தூரம் நீட்டிக் காட்டினான்! கோரமான ஒரு உருவம்!

அந்தக் கிராமத்தில் உள்ள பெண் குழந்தைகள் எல்லோரும் இந்த உருவத்தைக் கண்டால் பயந்து நடுங்கிய வண்ணம் 'ஐயோ அம்மா!' என்று அலறிக்கொண்டு ஓடுவார்கள்; பலதடவை அவ்விதம் ஓடியுமிருக்கிறார்கள். ஆனால் சுஹ்றா மட்டும் ஓட மாட்டாள். அது மட்டுமா? தலையைச் சாய்த்து நாக்கை நீட்டி கண்களை உருட்டி முறைத்துக் கொண்டு அவளும் அங்கேயே நின்று கொண்டிருக்கிறாள்!

மஜீதுக்குக் கோபம் கோபமாக வந்தது. எவ்வளவு பெரிய ஆண் நான். என்னை, ஒரு சுண்டைக்காய்ப் போக்கிரிப் பெண் பயப்படுத்தப் பார்ப்பதாவது! அவன் இன்னும் கொஞ்சம் அருகே வந்தான். அவனுடைய கண்கள், உருட்டி முறைத்தன, புருவங்கள் விரிந்து உயர்ந்தன. மூக்கின் இரண்டு துவாரங்களும் அகலமாக விரிந்தன. இடிபோல முழக்கமிட்டவாறு 'சூ' என்றொரு பயங்கர ஓசையை எழுப்பினான். ஆனால் அவள் பயந்து ஓடவேயில்லை. புருவங்களை உயர்த்தி, கண்களை உருட்டி மூக்கை விரித்து அவளும் 'சூ' என்றாள்.

மஜீத் நிலைக்குத்தி நின்றுவிட்டான். ஒரு சுண்டக்காய்ப் பொண்ணு! கேவலம் ஒரு பாக்கு வியாபாரியின் மகள். மர வியாபாரியின் மகனைப் பார்த்து அவள் ஏன் பயப்படுவதில்லை? பெண் ஆனவள் எந்த ஒரு நிலையிலும் ஆணைக் கண்டு பயப்பட வேண்டுமல்லவா? மஜீத் அவளருகே மேலும் நெருங்கிப் போனான். ஊஹூம்! அவள் மயிரிழைகூட நகராமல் நின்ற இடத்திலேயே இருந்தாள். மஜீதின் தன்மானம் புகைந்தது; அவனுக்கு அடக்க முடியாத அளவுக்கு சினம் பொங்கியது. அடி ஆத்தே!

பிறகு அவன் அவளது கையை எட்டிப் பிடித்தவாறே அதட்டிக் கேட்டான்:

"உன் பேரென்னடீ?"

தெரிந்து கொள்வதற்காக அல்ல. அது அவனுக்கு ஏற்கனவே தெரிந்ததுதான். ஆனாலும் ஏதாவது கேட்கவேண்டுமே? அவன் ஆணல்லவா? அதனால் கேட்டான்.

இந்த 'விநாடியிலேயே உன்னை ஒழித்து விடுவேனாக்கும்,' என்னும் பாவனையில் அவன் இப்படிச் செய்தான். அவளது அரிசிப் பற்களும் கூர்மையான பத்து நகங்களும் துருதுருத்தன. மேற்கொண்டு என்ன செய்வது என்பதுபற்றி ஒரு நிமிடகாலத்துக்கு அவளுக்கு எதுவுமே தோன்றவில்லை. கையைக் கடித்துத் துண்டாக்குவதா? அல்லது நகங்களால் கீறிக் காயப்படுத்துவதா? உன் பேரென்ன'டீ'யாமே!

அவளுடைய வாப்பாவோ உம்மாவோ யாருமே அவளை நீ என்றோ அடியென்றோ கூப்பிட்டதே கிடையாது. அப்படியிருக்கும்போது, கோணங்கிச் சேட்டை காட்டுகிறவனும் மாம்பழம் தராமல் இருப்பவனும் முழங்கையைக் கடித்துத் தின்னுமாறு சொல்லுபவனுமான இந்த அசிங்கம் பிடித்த சிறுவன், அப்படிக் கூப்பிடக் காரணம்? அவள் சினத்தோடு முன்னெட்டி, அவனருகே போனாள்; இடது கையில் கூராக உள்ள நகங்களால், அவனது வலது கையில் பலத்தோடு அழுத்திப் பிருண்டினாள்!

தீயில் காய்ச்சப்பட்ட துருவியினால் பிருண்டிவிட்டது போல, மஜீத் துடித்துப் போனான். தனது கையை விடுவித்துக் கொண்டு 'ஐயோ அம்மா!' என்றலறிக் கூப்பாடு போட்டான்... அவன் இதை எதிர்பார்க்கவே இல்லை. பதிலுக்கு அவனும் அவளை நகத்தால் கீறிவிட எண்ணினான். ஆனால் அவனிடம் நகமே இல்லை. நகங்களையெல்லாம் அவன் முன்பே கடித்துத் தீர்த்திருந்தான். வேறு என்ன செய்யலாம்? அடி கொடுக்கலாம் அல்லது கடிக்கலாம். ஆனால் அவளும் பதிலுக்கு அதையே திருப்பிச் செய்வாளே என்றும் தோன்றியது.

எப்படியிருந்தாலும் ஒரு பெண் கீறிவிட்டாள். மேலும் அவள் அடித்தும் விட்டாள் என்று உலகத்துக்குத் தெரிந்துவிட்டால், வெட்கக்கேடு! அவன் எதுவுமே செய்யாமல் தோல்வி கண்ட இளிச்சவாயனாக அப்படியே நின்று கொண்டிருந்தான்.

சுஹ்ரா பற்களைக் காட்டி அவனுக்கு 'வெவ்வே' என்று அழகு காட்டினாள். மஜீத் அசையவில்லை. அவள் கோணங்கிச் சேட்டைகளைச் செய்தவாறு மஜீதைக் கேலி செய்தாள்:

"ஐயோ அம்மா!"

அதற்கும் மஜீத் மூச்சுக் காட்டவில்லை. தனக்கு ஏற்பட்ட அவமானத்தை மறக்க, உடனடியாக ஏதேனும் சொல்ல வேண்டுமென்றும் அதில் சுஹ்ரா தோற்றுப்போக வேண்டும் என்றும் அவன் நினைத்தான். ஆணல்லவா? ... ... இருந்தாலும் என்னத்தைச் சொல்வது? நன்கு உறைக்கக் கூடியதாக இருக்கணும்......ஆனால் ஒன்றுமே தோன்றவில்லை! அவன் பதறிக்கொண்டே நாற்புறமும் பார்த்தான். வாழை மரங்களுக்கு இடையே வைக்கோல் வேய்ந்த கூரையுடனும் களிமண் பூசிய சுவர்களுடனும் கூடிய சுஹ்ராவின் வீட்டையும், தென்னை மரங்களுக்கிடையே ஓடு போட்டதும் சுண்ணாம்பு பூசியதுமான தனது வீட்டையும் பார்த்தபோது,

அவனுக்கு ஒரு யுக்தி தோன்றியது. சுஹ்றா அவமானத்தால் குன்றிப்போகும் வண்ணம் அவன் சொன்னான் :

" என் வீட்டுக்கு ஓடு போட்டிருக்காங்களே ! "

இதிலே பெருமையடித்துக் கொள்ளும்படியாக என்ன இருக்குது ? அவளுடைய வீடு களிமண் பூசியதும் வைக்கோல் வேய்ந்ததும் தான். ஆனால், இதிலே வெட்கப்படுவதற்கு என்ன இருக்குது ? அவள் மறுபடியும் அழகு காட்டிக்கொண்டு அவனைக் கேலி செய்தாள்.

" ஐயோ அம்மா ! "

உடனே மஜீத் வேறொரு விஷயத்தைச் சொன்னான் : " உன் வாப்பா தம்படிக்குதவாத பாக்கு வியாபாரி தானே ? என் வாப்பா யார் தெரியுமா ? பெரிய மர வியாபாரியாக்கும் ! " இதிலும் கர்வ மடித்துக் கொள்ளும்படியாக சுஹ்றா எதையும் காணவில்லை. மஜீத் என்னும் புழு தன் அருகாமையிலேயே இருக்கிறது என்ற எண்ணமே இல்லாதது போல, அவள் மாமரத்தின் உயரே நோட்டமிட்டவாறு நின்றாள்.

மஜீதுக்கு அழுகை வரும்போல் தோன்றியது. அவமானம் ! தோல்வி ! எல்லாமாகச் சேர்ந்து அவனைத் தலைகுனியச் செய்தன. கழுதைபோல ' ம்பா ' என்று உரத்த குரலில் அழவேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. அப்படி அழுதால் மனதுக்குக் கொஞ்சம் அமைதி ஏற்படும் ! ஆனால் அடுத்த நிமிடத்திலேயே அவனுக்குப் பளிச்சென ஞானோதயம் ஏற்பட்டது. வேறு எவராலும் செய்ய இயலாத ஒரு வித்தை அவனிடம் இருக்கிறது என்றும், அந்த வித்தையை உபயோகித்து இதோ சுஹ்றாவை தோற்கடித்து விடுவேன் என்றும் பாவனை செய்தபடி, ஆகாயத்தையும் பூமியையும் பார்த்தவாறு கம்பீரமாக அவன் சொன்னான்.

" எனக்கு மாமரத்திலே ஏறத் தெரியுமே ! "

சுஹ்றாவின் கண்கள் சலனமற்று நின்றுவிட்டன. மாமரத்தில் ஏற முடியும் ! அது ஒரு உயர்ந்த அறிவல்லவா ? அவள் பிரமித்துப் போனாள். அவன் மரத்தில் ஏறினான் என்றால் மாம்பழம் எனக்குத் தருவானோ ? இல்லையென்றால்...எதற்கும் முதலிலேயே தனக்குள்ள உரிமையை தெளிவாக்கிவிடுவது என அவள் தீர்மானித்தாள். கையெட்டும் தூரத்தில் இருந்த இரண்டு பழுத்த மாங்காய்களைச் சுட்டிக் காட்டியவாறு சுஹ்றா கம்பீரமாகச் சொன்னாள் :

" ஏ பையா, அந்த முதிர்ந்த இரண்டு பழங்களையும் நான்தான் முதன்முதலாகப் பார்த்தேனாக்கும் ! "

மஜீத் ஒன்றும் பேசவே இல்லை. அவன் ஏன் பதில் சொல்லவில்லை? ஓ! எறும்புகளைக் கண்டு பயந்துட்டான் போலேயிருக்குது! அவள் சொன்னாள் :

" சிகப்பு எறும்பு கடிச்சிடும் இல்லே? " அவளுடைய குரல், அதில் தொனித்த பாவம் எதுவுமே மஜீதுக்குப் பிடிக்கவில்லை. அவனுக்குக் கோபம் வந்தது. சிகப்பு எறும்பு! சிகப்புக் கட்டெறும்பில்லே, தேள் நிறைந்திருந்தாலும் அவன் ஏறுவான்! பெரிய பழங்கள் இரண்டும் அவள் பார்த்தது அல்லவா?... ரொம்ப சரி...

மஜீத் வேட்டியை மடித்து கட்டினான்; மரத்தின்மீது மடமட வென்று ஏற ஆரம்பித்தான். மரத்தில் உராய்ந்து மார்புத் தோல் உரிந்துவிட்டது என்றாலும், சிகப்புக் கட்டெறும்புகள் உடம்பு முழுவதும் கடித்து குதறிவிட்டன என்றாலும் சுஹ்ரா பார்த்திருந்த இரண்டு மாம்பழங்களையும் பறித்துக்கொண்டு வெற்றிவாகை சூடிய வீரனாய் அவன் கீழே இறங்கி வந்தான்.

சுஹ்ரா அவனிடம் ஓடிப் போனாள்... ஆவல்! பிரமிப்பு! அவள் கைநீட்டிச் சொன்னாள் :

" பையா, இங்கே கொடு! "

மஜீத் பேசவில்லை. வாயை இருபுறமாகக் கோணிவிட்டு உதடு களைச் சேர்த்து குவித்துக்கொண்டு அவன் நின்றான்.

" எங்கிட்டே கொடு பையா, நான் பாத்தது இல்லே? "

மஜீத் அவளைக் கேலி பொங்கப் பார்த்தான். " ஹஹ்ஹா! நாக்கிலே தண்ணி ஊறுதா கண்ணு? " என்று கூறிக்கொண்டே, மாம்பழங்களை முகர்ந்து பார்த்தவண்ணம் திரும்பி நடக்க ஆரம்பித் தான். பிறகு தனக்குத் தானே கூறிக்கொண்டான்: " ஆஹா என்ன வாசனை! என்ன வாசனை! "

சுஹ்ராவுக்குக் கோபம் பொங்கியது. அவள் ஆத்திரத்தோடு குமுறினாள். அவள் மனம்... ஓ... அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிய ஆரம்பித்தது. அவள் கேவிக் கேவி அழத் தொடங்கினாள்.

அவன் திரும்பி வந்தான். தனது முக்கியத்துவத்தை நிரூபிக்க, அவனுக்கு இது ஒரு நல்ல வாய்ப்பு அல்லவா? அவன் மாம்பழங்களை அவளிடம் நீட்டினான். வாங்க விருப்பம்தான் என்றாலும் அவள் கை நீட்டவில்லை. மஜீத் இரண்டு மாம்பழங்களையும் அவள் முன்னால் கீழே வைத்தான். ஊஹும்! அவள் எடுத்துக் கொள்ளவில்லை. அவளுக்குத் தன் கண்களை நம்பவே முடியவில்லை. இவ்வளவு பெரிய தியாகியா அவன்! ஏனோ அவளுக்கு நம்பிக்கை வரமாட்டேன்

என்கிறதே? கைகளிரண்டையும் பின்னல் சேர்த்துக் கட்டியவாறு, கன்னத்தில் நீர் வழிய அவள் அப்படியே மரமாக நின்றுள். மஜீத் பெருமையோடு சொன்னான்: ''இன்னும் வேணுமானு நான் பறிச்சுத் தறேன் என்ன?''

சுஹ்ராவின் மனம் பாகாய் உருகிவிட்டது. அவளுக்கு இன்னம் வேணுமானுப் பறிச்சுத் தரானுமே! தியாகி! வீரன்! த்தெஸத்ஸொ! எவ்வளவு நல்ல பையன்! அவனைப்போய் நகங்களாலே பிருண்டினேனே சரியா? அவள் மிகவும் அடக்க ஒடுக்கத்தோடு தானும் தியாகம் செய்யத் தயாரான நிலையில் மெதுவாகச் சொன்னுள்:

''எனக்கு, ஒண்ணு போதும்.''

அந்தத் தியாகசீலன் பரவாயில்லை என்கிற மாதிரி சொன்னான்:

''பொண்ணு, எல்லாத்தையும் நீயே எடுத்துக்க.''

''எனக்கு ஒண்ணே ஒண்ணு போதும்.'' அவள் ஒன்றை எடுத்து மஜீத்திடம் நீட்டினாள். அவன் வேண்டாம் என்று மறுத்தான். அவள் அவனை நிர்ப்பந்தப்படுத்தினாள்—''இத பாரு, நீ வாங்கிக் கலைன்னு நான் அழ ஆரம்பிச்சுடுவேன்!''

மஜீத் வாங்கிக் கொண்டான். மாம்பழத்தைக் கடித்துத் தின்னத் தொடங்கினான். பழச்சாறு மார்பினூடே ஒழுகிக்கொண்டிருக்கையில் மஜீத்தின் உடல் பூராவிலும் சிவப்புக் கட்டெறும்புகள் ஒட்டிக் கொண்டு கடித்துவிட்டிருப்பதை சுஹ்ரா பார்த்தாள். அவளுக்கு மிகவும் வேதனையுண்டாயிற்று. அவள் அவனுடைய உடலோடு ஒட்டி நின்றவண்ணம், எறும்புகளை ஒவ்வொன்றாகக் கிள்ளி எறிந்தாள். அவளுடைய நகங்கள் மஜீத்தின் உடலில் பட்டவுடன் அவனுக்கு மீண்டும் பயமேற்பட்டது.

அன்றைய தினம் அவள் மஜீத்தைப் பிறகு பிருண்டவில்லை யென்றாலும், எதிர்காலத்தில் பலமுறை அவள் அவனைப் பிருண்டியும் கிள்ளியுமிருக்கிருள். ''நான் பிருண்டுவேன்'' என்று அவள் சொன்னால் போதும், மஜீத் பயந்து விறைத்துப் போய்விடுவான். ஒரு நாள் அவன், அவளது மிகவும் கூர்மை வாய்ந்த ஆயுதங்களான அந்த நகங்களைத் தந்திரமாக வெட்டி எறிந்தான்; ஆனால் அவளுக்குத் தெரிந்தே, அவளுடைய சம்மதத்துடனேயே அவன் அதைச் சாதித்து முடித்தான்.

# 2

மஜீத்தின் வீட்டிலுள்ள முற்றத்தில் ஒரு பூந்தோட்டம் போடுவதற்காக, ஒருநாள் காலை சுஹ்றாவும் மஜீதும் அண்டை அயல் வீடுகளிலிருந்து செடிகளின் கிளைகளைச் சேகரித்தவாறு வந்துகொண்டிருந்தார்கள். மஜீத் பெருமிதத்தோடு முன்னால் நடந்து செல்ல, பின்னால் கிளைகளைச் சுமந்து வந்தது சுஹ்றாதான். அவன் ஆணல்லவா? அதனால்தான் அப்படி!

அவன் கையில் விரித்த ஒரு கத்தி இருந்தது. வருங்காலத்தில், தான் செய்யவிருக்கும் அரும்பெரும் சாதனைகள் பற்றி மஜீத் சொல்லிக்கொண்டே வந்தான். அவற்றையெல்லாம் 'உம்' கொட்டிக்கொண்டே கேட்டு மகிழவும் வியப்படையவும்தான் சுஹ்றாவினால் முடிந்தது. மஜீத்தின் கற்பனைகளுக்கு ஈடு இணையே கிடையாது. பொன்னிறத்தில் மூழ்கிய ஒரு அழகிய உலகம். அதன் ஏகசக்கிராதிபதி மஜீத்தான் என்றாலும் அதில் பட்ட மகிஷி சுஹ்றா தான். அதை யாருமே மறுக்கக் கூடாது! மறுத்தால் அவளுக்கு அழுகை வந்துவிடும். அவளுடைய நகங்கள் நீண்டுவிடும். பிறகு என்ன? மஜீத்தின் உடம்பெல்லாம் ஒரே ரணம்; எரிச்சல்! அந்த அனுபவத்தைத் தவிர்ப்பதற்காக, மஜீத் சற்று எச்சரிக்கையாகவே எதையும் சொல்லுவான். இருந்தும் சில சமயங்களில் அதை அவன் மறந்து விடுவதும் உண்டு.

கற்பனைகளின் அடிமை மஜீத். எதிர்காலத்தில், அதி உன்னதமான ஒரு மணிமாளிகையை அவன் கட்டுவிப்பான். அதன் சுவர்களெல்லாம் தங்கத்தாலானவை. அந்த மாளிகையின் திண்ணை முழுவதும் மாணிக்கக் கற்கள் பதிக்கப்படும். அதன் கூரை எப்படி இருக்கும்...? சே, 'இது என்ன கற்பனைக் குதிரை மேலே ஓட மாட்டேங்குது? சரிதான்! சுஹ்றா 'உம்' கொட்டவில்லை! தேவைப் படும்போது அவள் 'உம்' கொட்டுவாளே? அவள் 'உம்' போட்டிருந்தால் விநாடிக்குள் அவனுக்கு ஏதாவது உதித்திருக்குமே!

"சுஹ்றா!"

"என்ன மஜீத்?"

"ஆமாம், நீ ஏன் 'உம்' கொட்டலே?"

"நான் 'உம் உம்'னு சொல்லிக்கிட்டுத்தானே இருக்கறேன். அது சரி, நீ எதுக்காக என்னே 'நீ'ன்னு கூப்பிடறே?" அவள் கோபத்தோடு அவனை நோக்கி முன்னேறினாள். பிருண்டலுக்கு இலக்கான மஜீத் துடித்துப் போனான். அவன் கத்தியும் கையுமாகத்

திரும்பினுன்......அவளோ நகங்களை நீட்டிக் காட்டி கண்களை உருட்டி முறைத்து அவனைப் பயமுறுத்தினுள், "நான் இன்னும் பிருண்டுவேன்" என்று. முந்தைய பிருண்டல்கள், கிள்ளுகள் ஆகியவற்றின் நினைவானது மஜீதின் ரத்தத்தை உறைய வைத்தது. ...நகங்களையுடைய சுஹ்ரா ஒரு பயங்கரியாக இருக்கிருள். அவளுக்கு அந்த நகங்கள் மட்டும் இல்லாமல் இருந்தால்? ஆனுல் அவளுக்குத்தான் முன்பிருந்தே நகங்கள் இருக்கின்றனவே! அதோடு அவற்றைப் பயன்படுத்த அவள் தயங்குவதும் கிடையாது, அப்படி ஒரு நிலைமைக்கு அவள் ஆளாகும்படி அவளைச் சினப் படுத்துவது சரியா? சுஹ்ரா அகாரணமாகத்தான் பிருண்டினுள் என்னும் பாவனையில் ஏதுமறியா அப்பாவியைப் போல மஜீத் கேட்டான்:

"ஓ சுஹ்ரா, என்னை ஏன் பிருண்டினே?"

"உக்கும், நீ மட்டும் என்னை 'நீ'ன்னு கூப்பிடலாமோ?

மஜீத் வியப்படைவது போல நடித்தான். "எப்போ கூப்பிட்டேன் 'நீ'ன்னு? நான் அப்படிக் கூப்பிடவே இல்லை. சுஹ்ரா ஒருவேளை கனவு கண்டியோ என்னமோ?"

மஜீதின் நிலையையும், அப்பாவித் தனத்தையும் கண்டபோது சுஹ்ராவின் மனம் உருகிவிட்டது. உண்மையிலேயே மஜீத் என்னை 'நீ'ன்னு கூப்பிட்டானு? இல்லே, ஒருவேளை எனக்குத்தான் அப்படித் தோன்றியதோ? அப்படியென்ருல் மஜீதைப் பிருண்டியது பெரும் தவறு, மன்னிக்கமுடியாத தவறு!......சிவந்து தடித்த நான்கு தழும்புகள்! இது அவளுடைய கடினமான இதயத்தின் அடையாளமல்லவா?

அவளுடைய கண்களில் நீர் நிறைந்தது. மஜீத் அதைக் கண்டும் காணுதது போல, வெண்மணல் பரப்பப்பட்ட கிராம வீதி வழியே நடந்தவண்ணம் தனக்குத் தானே கூறிக்கொண்டான்:

"நான் ஒரு குத்தமும் செய்யாம இருந்தாக்கூட, என் வாப்பாவும் உம்மாவும் சும்மாவானும் என்னை அடிக்கவாவது திட்டவாவது செய்வாங்க. இன்னும் சில பேரு நிமிண்டவோ பிருண்டவோ செய் வாங்க. இதிலே அவங்களுக்கு என்னவோ ஒரு ஆனந்தம் கிடைக்குது. உம்! நான் செத்துப் போனப்பறம் அவங்க எல்லாம் என்னெப் பத்தி ஒரு வேளை இப்படிச் சொல்லிக்குவாங்க! அந்த அப்பாவி மஜீது இப்ப உயிரோடு இருந்திருந்தா ஒரு நிமிண்டாவது நிமிண்டியிருக்கலாமே!......"

எல்லாம் முடிந்த பிறகு, மஜீத் தந்திரமாகத் திரும்பிப் பார்த்தான் பேஷ்! சுஹ்ராவின் கன்னங்களினூடே இரண்டு நீரோடைகள்! அவனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை.

அவனுடைய மகிழ்ச்சியில் தானும் பங்கு கொள்ள விழைவது போல, இளங்கதிரவன் குன்றின் உச்சியில் தோன்றி மந்தகாசத் துடன், அடிவாரத்தில் உள்ள கிராமத்தைத் தனது பொன்னிற ஒளியில் மூழ்க்குவித்துக் கொண்டிருந்தான். குன்றின் பின்பக்கத்தி லிருந்து இரண்டாகப் பிரிந்துவந்து, குன்றையும் கிராமத்தையும் உள் ளடக்கியவாறு ஓடி, தொலைவில் சென்ற பிறகு மீண்டும் ஒன்றிணைந்து நடைபோடும் நதி உருகிய தங்கம் போலக் காட்சி தந்தது. கிராமத் தின் மோனத்துக்கு ஊறு விளைவிக்கும் பறவைகளின் சப்த ஜாலங் களில் மஜீத் கேட்பது, விவரிக்கவொண்ணு ஆனந்தத்தின் மாற்று ஒலியே!

ஆனால் சுஹ்ராவுடைய இதயத்தில் மட்டும் மகிழ்ச்சி என்பது எள்ளளவும் இல்லை. அவள் மன்னிக்கமுடியாத மாபெரும் தவறிழைத் திருக்கிருள்! காரணம் ஏதும் இல்லாமல்தானே அவள் மஜீதைப் பிருண்டினுள்? நினைக்க நினைக்க துயர் பெருக்கெடுக்கவே செய் கிறது......சிவந்து தடித்த நான்கு தழும்புகள், மஜீதின் முதுகில்! அவளுடைய தவறை எப்படி அழிப்பது?

மஜீத் விவரித்து வந்த மாளிகையை மனதில் நினைவுபடுத்தியவாறு, ஏதுவுமே நடக்காத விதத்தில் சுஹ்ரா மெள்ளக் கேட்டாள்:

"பையா, அப்புறம் அந்த மாளிகை?" மஜீத் பேசவில்லை. சற்று நேரம் கழித்து அவன் கேட்டான்:

"சுஹ்ரா நீ, உம் கொட்டிக்கிட்டிருக்கறயா?"

அவள் துயரம் தொண்டையை அடைக்கச் சொன்னுள்:

"கொட்டிக்கிட்டிருக்கறேன்"

பிறகு அதை நிரூபிப்பது போல 'உம் உம் உம்' என்று மும்முறை கூறவும் செய்தாள்.

"அப்புறம்," அவன் தொடர்ந்தான். அந்த மாளிகை குன்றின் மேல்தான் இருக்கும்......அப்படி இருந்தால் கிராமம் முழுவதையுமே பார்க்கலாம். அதோடு இரண்டு ஆறுகள் சேர்ந்து ஒரு பெரிய நதியாக ஓடும் காட்சியையும் வெகு தூரம் வரை கண்டு ரசிக்கலாம். சுஹ்ராவும் மஜீதும் மற்ற கிராமத்துக் குழந்தைகளும் குன்றின் மேல் ஏறிப் பலமுறை கண்டு வியந்த காட்சியல்லவா அது? அங்கு மஜீத் சமைக்கவிருக்கும் மாளிகை அற்புதமானதாக இருக்கும்.

" அப்புறம்," அவள் உற்சாகத்துடன் கேட்டாள் : "அந்த மாளிகை எத்தனை உயரம் ? " உயரத்துக்கு எல்லைக்கோடு உண்டா என்ன ? மஜீத் சொன்னான் : " நிறைய."

' நிறைய ' என்றால் எதுவரை என்று சுஹ்ராவுக்குத் தெளிவாக விளங்கவில்லை. அவள் கேட்டாள் : " வாழை மரமத்தனையா ? "

வாழை மரமத்தனையா ? அவனுக்கு அது பிடிக்கவில்லை. வாழை மரமளவு உயரமுள்ள மாளிகை ! ' ப்பூ ' என்று சொல்லிவிட்டு, அவன் சுஹ்ராவைப் பார்த்தான்.

அவள் கேட்டாள் : " தென்னை மரமத்தனையா ? " அதையும் மஜீத் கேலி செய்ததை அடுத்து சுஹ்ரா ஆகாயத்தை நோக்கி முகத்தை உயர்த்தியவாறு சந்தேகத்தோடு கேட்டாள் :

" மானம் வரைக்குமா ? "

" ஆமாம் " மஜீத் ஒப்புக்கொண்டான். "மானம் வரை இருக்கும்."

அவளுக்கு மறுபடியும் ஒரு சந்தேகம் : " அதில் பையன் மட்டும் தனியாகவா இருப்பான் ? "

" இல்லை " மஜீத் அரபுக் கதைகளை நினைவுபடுத்திக் கொண்டே சொன்னான் : " நானும் ஒரு அரசகுமாரியும்." அரசகுமாரி ? அப்படி ஒருத்தி இந்த ஊரிலேயே கிடையாதே ! இருந்தாலும்....." அந்தப் பொண்ணு யாரு ? "

அது ஒரு ரகசியம் என்பது போல மஜீத் சொன்னான்: "அதெல்லாம் ஒருத்தி இருக்கரு."

அதைக் கேட்டதும் சுஹ்ராவின் முகம் ஒளி இழந்து குன்றியது. அவளுக்குக் கோபமும் விசனமும் ஏற்பட்டன. அவள் செடிக் கிளைகளைக் கீழே எறிந்தாள். அவளுடைய கண்கள் நிறைந்து வழிந்தன ; அவள் சொன்னாள் : " அந்த அரசகுமாரியை இதெல்லாத்தையும் எடுத்துக்கிட்டு வரச்சொல்லு."

மஜீத் உத்தரவிட்டான்: " சரிதான். எடுத்திட்டு வா பொண்ணு!"

சுஹ்ரா உரக்க அழத் தொடங்கினாள்.

" பையன் கூட வரமாட்டேன். அரசகுமாரியே எடுத்துகிட்டு வரச்சொல்லு போ."

அந்த நிலை, மஜீதின் மனதை நெகிழ வைத்துவிட்டது. அவன் அவளருகே சென்று அவளுக்கு முன்னால் நின்றான் : " சுஹ்ராதான் என்னுடைய........"

" ?............. "

" அ...ர...ச...கு...மா...ரி ! "

அவளுடைய முகம் தெளிவடைந்தது. " போ பையா. "

பா—7

" உம்மா ஆணையா. "

அவளுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. மஜீதும் சுஹ்றாவும் சேர்ந்து அந்த மாளிகையில் வசிக்கலாம். எவ்வளவு குஷியாக இருக்கும்! அவள் கண்ணீருடனும் முறுவல் பூத்தவாறும் அப்படியே நின்றாள். மஜீத் அவளுடைய நகங்களை வெட்ட முயற்சி செய்தான்.

" விடு பையா. "

மழைத் தூறல்களுக்கிடையே முழுமதி ஒளி வீசுவதைப் போல கண்ணீரினூடே சுஹ்றா முறுவலித்தாள் :

" இருந்தாலும் என் நகத்தை வெட்டவேணும்! " அவள் உதடுகளைக் குவித்தவண்ணம் சொன்னாள் : " அப்பறம் பையன் ஏதாவது சொன்னா, எனக்கு அவனைப் பிருண்டணுமே! "

" சுஹ்றா என்னைப் பிருண்டுவாயா ? "

" ஆமாம். பிருண்டுவேன். எப்போதும் பிருண்டுவேன்! "— அவள் பல்லைக் கடித்துக் கொண்டு புருவங்களை உயர்த்தியவாறு பிருண்டத் தயாரானாள்.

மஜீத் நடுங்கியபடி எழுந்தான். ஏதோ ஒரு பயங்கரமான தவறை நினைவுபடுத்துவது போல அவன் சொன்னான் :

" அரச குமாரி பிருண்டக் கூடாது! "

அரச குமாரி பிருண்டினால் அது கொடிய பாவம்போலும்! சுஹ்றா சந்தேகத்தோடு கேட்டாள் : " உம்மா மீது ஆணையா! " மஜீத் சத்தியம் செய்தான் : " உம்மா ஆணையா பிருண்டக் கூடாது! "

அவள் மலைத்துப்போய் நின்றாள். அரசகுமாரி பிருண்டக் கூடாது; கிள்ளக் கூடாது என்றால் பின் நகங்கள் இருந்து பயன் என்ன ? ஒரு பெரும் தியாகம் செய்வது போல இரண்டு கைகளையும் முன்னே நீட்டி அவள் சம்மதம் கொடுத்தாள் : " அப்படியானா, வெட்டிப் போட்டுடு."

மகிழ்ச்சியோடு மஜீத் சுஹ்றாவின் முன் அமர்ந்தான். ஈட்டிபோல் நீண்டு கூர்மையாகவிருந்த நகங்கள் பத்தையும் மஜீத் வெட்டி எறிந்தான். பிறகு மஜீத் எழ, இருவருமாகப் போய்த் தோட்டம் போட்டார்கள். மஜீதின் வீட்டில் உள்ள விசாலமான முற்றத்தின் மூன்று ஓரங்களிலும் அவர்கள் சிறு குழிகளைத் தோண்டினார்கள். அவற்றில் சுஹ்றா ஒவ்வொரு கிளையாக நட்டு, மண்ணை அள்ளிக் குழிகளை மூடித் தண்ணீரும் ஊற்றினாள். " ஒரு பிரியன் * ஒரு மஞ்சன், ஒரு கோழிவாலன் † என்று எல்லாக் குழிகளும் நிரப்பப்

* சுருள் சுருளான இலைகள் கொண்ட செடி.

† கோழிவாலைப் போல இலை கொண்ட செடி.

பட்டன. மூலையில் குழிதோண்டி வைத்தது ஒரு செம்பருத்திக் கிளையாகும். சுஹ்றா அதை நடுகையில் அதில் வாடத் தொடங்கிய ஒரு சிவந்த பூ இருந்தது.

சுஹ்றா தினசரி காலை மஜீதின் இல்லம் சென்று செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவாள்.

ஒரு முறை சுஹ்றாவின் உம்மா வேடிக்கையாகச் சிரித்துக் கொண்டே அவளிடம் கேட்டாள் : " சுஹ்றா, எதுக்காக இன்னொருத்தரோட செடிக்கு நீ தண்ணி ஊத்தறே ? "

சுஹ்றா சொன்னாள் : " இன்னொருத்தரோடது இல்லையே ! "

அன்று மாலை சுஹ்றாவும் மஜீதும் முற்றத்தில் நின்று கொண்டிருந்தார்கள். துளிர்விட்டுத் தழைத்திருந்த செடிகளைச் சுட்டிக்காட்டி மஜீத் உரத்த குரலில் கேட்டான்: " இதெல்லாம் சுஹ்றாவுடையதா? "

" இல்லாம பின்னே பையனுடையதோ ? "

மஜீத் கேலியாகச் சொன்னான் : " பெண்ணுக்கு ஆசை கொஞ்ச நஞ்சமில்லே ! "

அவளுக்குக் கோபம் வராமல் இருக்குமா ? அவள் பிருண்டினாள். நகங்கள் போதுமான அளவு இல்லையாதலால் மஜீத் சொன்னான் : " இன்னும் பிருண்டு ! ரொம்ப சொகம்மா இருக்குது ! "

சுஹ்றா தன் நகங்களைப் பார்த்துவிட்டு வீறிட்டு அழுதாள். " அப்படியானா நான் கடிப்பேன். " அவள் மஜீதின் கையைக் கடிக்கத் தயாரானாள். வேறு வழி ஏதும் காணாமல் மஜீத் குரானை எடுத்து வைத்துக் கொண்டு ஆணையிட்டான் : " முப்பது ஜுஸோள்ள மூஸா மீது ஆணை ! அரசகுமாரி கடிக்கக் கூடாது ! "

சுஹ்றா கண்ணீரொழுகக் கேட்டாள் : " யாரையும் ? " மஜீத் புன்முறுவலுடன் கூறினான் : " யாரையும் ! "

## 3

சுஹ்றா கணக்கில் புலியாக இருந்தாள். ஆசிரியர் அவளைப் புகழ்வதும் மஜீதை அடிப்பதுமே வழக்கமாக இருந்து வந்தது. கணக்குகளைப் பொறுத்தமட்டில் மஜீதுக்கு எப்போதும் ஒரே குழப்பம்

தான். என்னதான் அவன் சிரமப்படட்டுமே! ஊஹூம், அது சரியாக வரவே வராது.

"முட்டாள் மன்னு" என்றுதான் ஆசிரியர் மஜீதைக் கூப்பிடுவார். அட்டண்டென்ஸ் எடுக்கும்போதுகூட, அவர் அவனை அப்படியேதான் அழைப்பார். அதில் யாருக்கும் எந்தவிதமான ஆட்சேபமும் இருக்கவில்லை; மஜீத் முட்டாள்தான். அவன் மாணவர்களின் மத்தியில் அமர்ந்துகொண்டே உரக்கக் கத்துவான். 'ஆஜே...ர்!'

"ஒன்றும் ஒன்றும் எத்தனைடா?" என்று குரு ஒருநாள் சிஷ்யனிடம் கேட்டார். ஒன்றும் ஒன்றும் இரண்டு என்பது உலகறிந்த விஷயம். ஆனால் அதற்கு மஜீத் கூறிய அற்புதமான விடையைக் கேட்டதும் ஆசிரியர் உரக்கச் சிரித்துவிட்டார். வகுப்பு முழுவதுமே, அவருடன் சேர்ந்து சிரித்தது. மஜீத் கூறிய விடையே, பின்னர் அவனது கேலிப் பெயராகவும் நிலைத்து விட்டது. அந்த பதிலைச் சொல்லுமுன் மஜீத் நன்கு யோசித்தான். இரண்டு சிறு நதிகள் ஒன்றுகச் சேரும்போது, சற்றே பருமனான பெரிய நதியாக உருவெடுக்கிறது. அதேபோல் இரண்டு 'ஒன்றுகள்' சேர்ந்தால் சற்றே பெரிய 'ஒன்று' ஆகும் என்று மதிப்பிட்ட மஜீத், சற்று பெருமையுடனே பதில் கூறினான் :— "கொஞ்சம் பெரிய ஒன்று!" கணக்கு இயலில் ஒரு புதிய தத்துவத்தைக் கண்டுபிடித்தமைக்கென, மஜீத், அன்று முழுவதும் பெஞ்சு மேல் நிற்க வைக்கப்பட்டான்!

எல்லோரும் அவனைப் பார்த்துக் "கொஞ்சம் பெரிய ஒன்று" என்று கூறிச் சிரித்தார்கள். இருந்தும் மஜீத் ஒப்புக்கொள்ளவேயில்லை, 'ஒன்றும் ஒன்றும் இரண்டு'தான் என்பதை. அதனுல் ஆசிரியர் மஜீதின் உள்ளங்கையில் சுடச்சுட ஆறு அடிகளைக் கொடுத்துவிட்டு, எல்லாவற்றையுமாக சேர்த்துக் கூட்டி, சிறிதளவே வேற்றுமையுள்ள பெரியதொரு அடியாக நினைத்துக் கொள்ளுமாறு அவர் மஜீதிடம் கூறவும் செய்தார். இதன் பிறகு கூடப் படிப்பவர்கள் அவனைப் பார்க்கும்போதெல்லாம் "கொஞ்சம் பெரிய ஒன்று" என்று தங்களுக்கிடையே பரஸ்பரம் கூறிக்கொள்வர். அந்தக் கிண்டலும் அதற்கு மூலகாரணமான சம்பவமும், மஜீதை மிகவும் வேதனைக்குள்ளாக்கின. அவன் சொன்னது என்னவோ சரியான விடை. ஆனுல் யாருமே அதை நம்பமாட்டேன் என்கிருர்களே ஏன்? உம்! ஒரு வேளை தவருகவும் இருக்கலாம். தான் முட்டாளாகவும் இருக்கலாம் அல்லவா? தாங்கவொண்ணு துயரத்தோடு, மஜீத் தன் உம்மாவிடம் சென்று புகார் செய்தான். மனத்துயரங்களை

யெல்லாம் ஆண்டவனிடம் எடுத்துச் சொல்லும்படி அவள் அவனுக்கு உபதேசம் செய்தாள். "ரப்பு உல் ஆல்மீன், யாருடைய வேண்டுகோளையும் தள்ளிவிட மாட்டார் மகனே!"

அதன்படியே அந்தப் பிஞ்சு உள்ளம் சகத்ரட்சகனிடம் மனப்பூர்வமாகப் பிரார்த்தித்துக் கொண்டது: "என்னைப் படைத்தவனே! என்னுடைய கணக்குகளை யெல்லாம் சரியானதாகச் செய்!" அதுதான் மஜீதின் முதல் பிரார்த்தனையாக இருந்தது. இரவும் பகலும் மஜீத், இந்த வேண்டுகோளை ஆண்டவனிடம் விடுத்து வந்தான். இப்படிச் செய்தும், கணக்குகள் யாவும் தப்பும் தவறுமாகவே வந்தன. மஜீத் நிரம்ப அடிகளும் வாங்கினான். உள்ளங்கை எப்போதும் வீங்கி வந்தது. அவனால் இதையெல்லாம் சகிக்கவே முடியவில்லை. எல்லா விஷயத்தையும் மஜீத் சுஹ்ராவிடம் கூறினான். அதுகூடப் பல நாள் ஊடல்களுக்குப் பிறகுதான். "கொஞ்சம் பெரிய ஒன்று" சம்பவத்துக்குப் பிறகு மஜீத் யாரோடும் பேசாமல் இருந்து வந்தான். அடுத்த பெஞ்சியில் இருந்தவாறே சுஹ்ரா அவனைப் பார்ப்பாள். ஆனால் மஜீதோ முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டுவிடுவான். இறுதியில் மஜீத் பேசினான். சுஹ்ரா சிரித்தாள். அவள் தன் இருக்கையை மாற்றிக் கொண்டாள். மஜீத்துக்கு அருகிலேயே அமரத் தொடங்கினாள். அவளுடைய இடம் பெஞ்சின் கோடியில் இருந்தது. அதுமுதல் மஜீத் அடி வாங்குவதே கிடையாது. அவன் போடும் கணக்குகள் அனைத்துமே சரியாக இருந்தன. அடேடே! ஆசிரியர் வியந்து போனார்: "நான் நினைச்ச மாதிரி உன் தலைக்குள்ளே முழுவதும் களிமண் இல்லே!"

இப்படியாகத்தானே குருநாதரின் புகழ்ச்சி உரைகள், மஜீத்தின் கேலிப் பெயரையே அழித்துவிட்டன. குழந்தைகள் பொறுமையோடு சொல்ல ஆரம்பித்தனர்: "மஜீதுதான் வகுப்பிலே முதல்!"

இதைக் கேட்கையில் சுஹ்ராவின் முகத்தில் புன்சிரிப்பு தவழும். அதன் பொருள் என்ன என்பது மற்றவர்களுக்கு விளங்காமலே இருந்தது. மஜீத்தின் கணக்குகள் சரியாக இருந்ததன் மர்மம், அவளுடைய முறுவலில் ஒளிந்து கொண்டிருந்தது! கணக்குகளைப் போடுவதற்காகக் குழந்தைகள் எல்லாரும் எழுந்து முகத்தோடு முகம் நோக்கி எதிர் எதிராக நிற்கும்போது, மஜீத்தின் இடது கண் சுஹ்ராவின் ஸ்லேட்டில் பதிந்திருக்கும். அவளுடைய விடைகளை அவன் அப்படியே காப்பியடித்துக் கொள்வான். கணக்குகளைப்

போட்டு முடித்தாலும் அவள், இருக்கையில் அமர மாட்டாள். முதலில் மஜீத் உட்கார வேண்டும்!

பள்ளிக்கூடத்திலிருந்து அவர்கள் ஒன்றாக வீடு திரும்புகையில், வேறு யாருக்கும் கேட்காதவாறு மஜீத்தைச் சுஹ்ரா சீண்டுவாள்; கேலியும் செய்வாள். பல சம்பவங்களை நினைத்து நினைத்து அவள் முறுவலிப்பாள்; 'கொஞ்சம் பெரிய ஒன்று' என்று முணுமுணுப்பாள். அப்போதெல்லாம் மஜீத் தன்னுடைய கோபம் முழுவதையும் ஒரே வார்த்தையில் அடக்கியவாறு சொல்லுவான்: "அரச குமாரி!"

அதுகேட்டு வெள்ளி மணிகளின் கிண்கிணி நாதம்போல சோக—மதுர பாவத்தோடு சுஹ்ரா சிரித்துக்கொண்டே தன் விரல்களைப் பார்ப்பாள். அந்த நகங்கள் யாவும் இப்போது அழகாக வெட்டப் பட்டுள்ளன. ஒழுங்குக்கும் சுத்தத்துக்கும் அந்தப் பள்ளியிலேயே சுஹ்ரா ஓர் உதாரணமாகத் திகழ்ந்தாள். மஜீத்தின் உடைகளில் எப்போதும் மசிக்கறையும் அழுக்கும் காணப்படும்.

அவன் அந்த ஊரில் இருந்த மாமரங்களில் எல்லாம் தொத்தி ஏறுவான். அவற்றின் உச்சாணிக் கிளைகளைப் பற்றியவண்ணம், விரிந்து அடர்ந்த இலைகளின் இடை வழியாக, இப்பரந்த உலகைப் பார்த்து ரசிப்பதில் அவனுக்கு ஒரு அலாதி இன்பம். மேல் உலகங்களைக் காணுவதில் அவனுக்கு அபரிமிதமான ஆசை. கற்பனையில் மூழ்கித் திளைத்தவாறு, அவன் மரத்தின் உச்சியில் நிற்கையில், தரையிலிருந்து சுஹ்ரா அவனிடம் கேட்பாள்:

"பையா, மெக்கா தெரியுதா?"

மஜீத் அதற்கு ஒரு பதிலாக, உயரே வானில் ஓடும் மேகங்களுக்கு இணையாகப் பறக்கும் பருந்துகளின் கீதமோ என்று தோன்றும் பாட்டின் வரிகளை மதுரமான இசையோடு திரும்பத் திரும்பப் பாடுவான்:

> "மெக்காவைப் பார்க்கலாம்! மதீனாவின்
> பள்ளி வாசலும் பார்க்கலாம்!"

## 4

சுஹ்றாவின் காது குத்தும் விழாவில் மஜீத் கலந்துகொண்டது, தாங்கவொண்ணு வேதனையோடும் ஒளிந்துகொண்டுமாகும்.

மஜீத் 'சுன்னத்' சடங்கை அடுத்து படுக்கையில் இருந்தான். அப்போது பள்ளிக்கூட விடுமுறைக் காலம். அவனது இந்தச் 'சுன்னத் கல்யாணம்' கிராமத்தையே தடபுடல் படுத்திற்று. வாண வேடிக்கைகளும் விருந்தும் இருந்தன. பாண்டு வாத்திய கோஷ்டியினர் இசைக்க, பெட்ரோமாக்ஸ் விளக்குகள் உடன் வர, யானை மீதமர்ந்தவாறு மஜீத் ஊர்வலம் வந்தான். அதன் பிறகுதான் விருந்து. ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் விருந்தில் கலந்து கொண்டார்கள். விருந்துக்கு முன்புதான் 'சுன்னத் சடங்கு' நடைபெற்றது...

அன்று முழுவதும் மஜீத்துக்குப் பயமாக இருந்தது. எதையோ துண்டிப்பார்களாமே? என்ன அது? இறந்து விடுவோமோ? மொத்தத்தில் அவன் பயந்து செத்தான். அன்று அந்திவரை உயிரோடு இருப்போம் என்றே அவனுக்குத் தோன்றவில்லை. தனக்கு என்ன ஏற்படும் என்றே அவனுக்குத் தெரியவில்லை. எல்லா முஸ்லிம் ஆண்களுக்கும் இந்த 'சுன்னத் சடங்கு' நடந்திருக்கிறது. சுன்னத் செய்து கொள்ளாத ஆணே இல்லை. இருந்தாலும் இதை எவ்வாறு செய்வது? மஜீத் சுஹ்றாவிடம் கேட்டான். அவளுக்கு இதுபற்றி எதுவும் தெரியவில்லை.

"எதுவானாலும் செத்துப்பூட மாட்டே" என்று மட்டுமே அவளால் கூற முடிந்தது. இருந்தாலும் மஜீத்துக்கு ஒரே பிரமிப்பாக இருந்தது. 'அல்லாஹு அக்பர்' என்னும் கம்பீரமான 'தக்பீர்'* பந்தலில் முழங்கியது. அதை அடுத்து மஜீத்தின் வாப்பா அவனைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று, ஒரு சிறிய அறையினுள் விட்டுவிட்டுப் போனார்...

அங்கு கவிழ்க்கப்பட்ட, வெள்ளைத் துணி விரித்த உரலின் முன்னால், பதினொரு திரியிட்ட குத்து விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அந்த அறையில் நாவிதனான 'ஒஸ்ஸா'வும், இன்னும் பத்துப் பன்னிரண்டு பேரும் இருந்தார்கள். அவர்கள் மஜீத்தின் ஷர்ட்டைக் கழட்டினார்கள். இடுப்புத் துணியையும் அவிழ்த்தார்கள். பிறந்தபடி அவனை உரலின்மீது அமர்த்தினார்கள். அற்புதம்! அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?

* தக்பீர்—ஆண்டவனை வாழ்த்தும் ஒலி.

மஜீத்தின் கண்ணைப் பொத்தினார்கள். கைகளையும் கால்களையும் தலையையும் ஆட்கள் பிடித்துக் கொண்டார்கள். அவனுக்கு அசையவே முடியாமல் இருந்தது. 'அல்லாஹு அக்பர்' என்ற ஓசையைத் தவிர, வேறெதுவும் கேட்கவில்லை. மஜீத்துக்கு வேர்த்துக் கொட்டியது. இந்த அமர்க்களங்களுக்கிடையே, அவனுடைய இரு தொடைகளும் ஒன்று சேரும் இடத்தில் கொஞ்சம் வலி. உலர்ந்த பாளையை முறிப்பது போன்ற ஒரு உணர்வு. ஒரே நிமிடம் மட்டும் தான். உடனே எல்லாம் முடிந்ததற்கடையாளமாகத் தண்ணீர் தெளித்தல். ஒரு எரிச்சல்—காந்தல்.

மஜீத்தைப் படுக்க வைத்தார்கள். தலைக்கும் காலுக்கும் தலையணைகள் இருந்தன. இந்த அமர்க்களத்தில் மஜீத் ஒன்றைப் பார்த்தான்... கைவிரலைச் சிவந்த மசியுள்ள பாட்டிலுக்குள் முக்கியது போல் அன்றி, மசியில் முங்காமல் பாட்டிலின் வாயைத் தொட்டு நிற்கும் விரலின் மேற்புறத்தைச் சுற்றிச் சிவந்த மை ஒட்டிக்கொண் டிருப்பதுபோல, அந்த இடத்தில் இரத்தம் பொட்டுப் பொட்டாகக் காணப்பட்டது அவ்வளவுதான்...

சுஹ்ராவிடம் அடுத்த நாள் அவன் இந்த விவரங்களைச் சொன்னான். அவள் சன்னலுக்கு வெளியே நின்றவண்ணம் கேட்டாள்: "மஜீத், பயந்திட்டியா?"

"நானா?" மஜீத் அந்தப் படுக்கையில் கிடந்தவாறே பெருமை யடித்துக்கொண்டான்: "சே, சே, அதெல்லாம் நான் கொஞ்சம் கூடப் பயப்படவே இல்லை."

அந்தச் சமயத்தில் சுஹ்ரா அவளுடைய காது குத்தும் விஷயத்தைத் தெரிவித்தாள். பத்து அல்லது பன்னிரண்டு நாட் களுக்குள் அவளுடைய காது குத்தப்பட்டுவிடும்.

"மஜீதுக்கு வர முடியாது இல்லையா?" மஜீத் சொன்னான்: "நான் வருவேன்."

ஆனால் அந்தக் குறிப்பிட்ட தினத்தன்று, மஜீதால் அசையக்கூட இயலாமல் இருந்தது. முதலில் சுஹ்ராவுடைய அம்மாவும் பிறகு சுஹ்ராவும் வந்து, தன் வீட்டவரை அழைப்பது அவனுக்குக் கேட்டது. சற்றுப் பொறுத்து சுஹ்ராவையே சன்னலுக்கருகே பார்க்கவும் செய்தான். அவளுடைய வெள்ளை முகம், மேலும் வெளுத்திருந்தது. ஆயினும் கண்கள் ஒளி வீசிக்கொண்டிருந்தன.

"இன்னிக்கு எனக்குக் காது குத்தப்போறாங்க."

மஜீத் ஏதும் பேசாமல் முறுவலித்தான்.

அது, அவளது முகத்துக்கும் பரவியது. மஜீத் அந்த அழகிய செவிகளைப் பார்த்தான். "இந்தக் காதுகளிலே சின்னச் சின்னதாத் துளை போடும்போது வலிக்காது?" அவள் சொன்னாள்: "தெரியாது. வந்து பாரேன், அப்பத் தெரியும்." அவள் ஓடிவிட்டாள்.

மஜீதுக்குப் போகவேண்டும் என்ற ஆவல், நேரம் ஆக ஆகப் பெருகியது. ஆனால் படுக்கையை விட்டு எழவே முடியாமல் இருந்தது. ஆயினும் சற்று நேரம் கழித்து, யாரும் காணாத ஒரு தருணத்தில் மஜீத் படுக்கையிலிருந்து எழுந்தான். ஒரே மலைப்பு! அம்மிக்குழவியை வைத்ததுபோல தேகமெல்லாம் ஒரே பாரமாக இருந்தது. ஆயிரம் ரணங்களினுடைய வலி, வேதனை......எல்லாமாகச் சேர்ந்து இதயத்திலிருந்து தொங்கிக் கொண்டிருப்பது போல...

மெதுவாக அடிமேலடி வைத்து யாரும் காணாதபடி மஜீத் இரகசியமாக வெளியில் இறங்கினான். சாலை வழியாக உட்கார்ந்தவாறே கைகளை ஊன்றி ஊன்றி நகர்ந்தவண்ணம் தோப்புக்குள்ளே சென்று ஒரு வழியாகச் சுஹ்ராவின் வீட்டை அடைந்தான். அங்குப் பெரிய தடபுடலோ ஆள் கூட்டமோ எதுவும் காணப்படவில்லை. அவர்கள் பணக்காரர்கள் அல்ல என்பதுதான் இதற்குக் காரணம் என்று அவன் எண்ணினான். பணம் படைத்தவர்களாக இருந்தால், மேளம், வாண வேடிக்கைகள் விருந்து எல்லாம் இருந்திருக்கும்!

மஜீதைக் கண்டதும் சுஹ்ராவுடைய உம்மா இரைந்து கொண்டே ஓடி வந்தாள்.

"மகனே, நீ ஏன் இங்கே வந்தே?"

மஜீத் சிரமத்தோடு கூறினான்:

"காது குத்தைப் பாக்கறதுக்காக!"

அப்போது சுஹ்ராவும் அங்கு வந்து சேர்ந்தாள். அவளுடைய முகம் சிவந்தும் கண்கள் கலங்கியும் இருந்தன. இரண்டு காதுகளிலும் மேலிருந்து அடிவரை துளைகள் போடப்பட்டு, கறுப்பு நூல் கோர்த்துக் கட்டப்பட்டிருந்தது. வலது காதில் பதினொன்றும் இடது காதில் பத்தும் துளைகள் இருந்தன. வீங்கிப் பழுத்து துளைகள் உலரும் போது, கறுப்பு நூலை உருவி எடுத்து விட்டு, வெள்ளி வாளி போடப்படும் என்பதும், பிறகு கலியாணத்திற்கு வெள்ளி வாளியை மாற்றி, தங்க வாளி அணிவிக்கப்படும் என்பதும் மஜீதுக்குத் தெரியும்.

மஜீத் சுஹ்ராவிடம் கேட்டான்: "ரொம்ப வலிச்சுதா?"

சுஹ்ரா வேதனையோடு முறுவலித்தாள்:

"துளியூண்டு!"

இதற்குள் மஜீதைத் தேடியவண்ணம் அவன் வீட்டு ஆட்கள் அங்கு வந்தார்கள். இரண்டு பேராகத் தாங்கியவண்ணம், அவனை வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய்ப் படுக்கையில் கிடத்தினார்கள்.

இந்த விஷயம் மஜீதின் வீட்டில் பெரும் இரைச்சலுக்குக் காரணமாயிற்று. வாப்பா மஜீதைத் திட்டினார். மஜீதின் உம்மாவையும் கோபித்துக் கொண்டார். இப்படி அது முடிந்தது.

முதலில் உடல்நிலை குணமானது மஜீதுக்குத்தான். அன்று மஜீதைக் குளிப்பாட்டி புதிய ஆடைகள் அணிவித்து செண்ட் பூசிப் பள்ளிக்கு அழைத்துப் போனார்கள். அந்த ஊர்வலம் ஆடம்பரமாக இருந்தது. அது பற்றிச் சொல்லி சொல்லி அவள் அவனைக் கேலி செய்வாள்: "ஓ! பையனுடைய ஷோக்கைப் பாரு! ஏதோ பொண்ணுகட்டப் போறாப்பலே!"

# 5

சுஹ்ராவும் மஜீதும் அந்த ஆண்டு பரீட்சையில் தேறினார்கள். கிராமத்துப் பள்ளிக்கூடத்தின் இறுதி வகுப்பிலிருந்து, அடுத்த வகுப்பில் சேர அவர்கள் தகுதிபெற்றார்கள். நகரத்துப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து மேலே தொடர்ந்து படிக்கவேண்டும் என்று சுஹ்ரா கொண்டிருந்த ஆவல், தகர்ந்துபோகும்படி ஒரு சம்பவம் நடந்தது. மஜீத் முதன் முதலாக மரணத்தைப் பார்த்தான். சுஹ்ரா தந்தையை இழந்துவிட்டாள். இதனால் அவளும் அவளுடைய இரண்டு இளைய சகோதரிகளும் உம்மாவும் அனாதைகளானார்கள். எல்லாமாகச் சேர்ந்து அவர்களுக்கு இருந்த ஆஸ்தியெல்லாம் ஒரு சிறு தோப்பும், ஒரு சின்னஞ்சிறு வீடும்தான். பாக்கு வியாபாரத்தின் வாயிலாகக் கிடைத்து வந்த லாபத்தைக் கொண்டுதான் அவளுடைய வாப்பா அந்தக் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தார்.

வெள்ளைக் குல்லாயையும், செம்மண் புழுதி படிந்து, அழுக்கேறிய வேட்டியையும் அதே நிறத்தில் ஒரு மேல் துண்டையும் தாம் அவர் அணிந்திருப்பார். கறுப்புத் தாடியுடன் கூடிய வெளுப்பான வட்ட முகத்தில், கறுப்பு விழிகள் எப்போதும் முறுவலைத் தவழவிட்டுக்

கொண்டிருக்கும். முன்னால் சற்றே நீண்டு வளைந்த, மடித்த கோணிகளைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு அவர் நடப்பார். அந்த ஊரிலிருந்த வீடுகளிலிருந்து, பாக்கை வாங்கிக் கோணியில் நிறைத்துக் கட்டித் தானே தலையில் சுமந்தவாறு நகரத்துக்கு நடந்து சென்று விற்று வருவார். பெரும் பேச்சுப் பிரியர். தாம் சென்ற இடங்களில் பார்த்தவை, கேட்டறிந்த விசேஷங்கள், ஆகியவற்றை யெல்லாம் மஜீதிடம் சொல்லுவார்.

" வெளியிலேதான் உண்மையான முஸல்மான்கள் இருக்கிறார்கள். இந்தக் கிராமத்தில் உள்ளவர்கள் மூட நம்பிக்கை கொண்டவர்கள். கடின இதயம் படைத்தவர்கள். நல்லவர்களைப் பார்க்க வேண்டுமானால் வெளியேதான் செல்ல வேண்டும். இங்குள்ளவர்கள், நாம் தான் உண்மையான முஸல்மான்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அறிவில்லாமைதான் இதற்குக் காரணம். ஆண்டவனின் அருளினால் நீங்களெல்லோரும் படித்துப் பெரியவர்களாகும்போது இந்த நிலைமை மாறிவிடும்" என்று அவர் சொல்லுவார்.

சுஹ்றாவைப் பெரிய பெரிய பரீட்சைகளில் எல்லாம் தேற வைக்க வேண்டும் என்பது, அவர் தமது வாழ்நாளில் கொண்டிருந்த மிகப் பெரும் இலட்சியமாகும்.

" அப்புறம் "—அவர் சொல்வார் : " அவள் பெரிய உத்தியோகம் பார்க்கும் போது, நம்மையெல்லாம் மறந்து விடுவாள். ' இது என் வாப்பா ' என்று சொல்லிக் கொள்ளக்கூட, அவளுக்கு வெட்கமாக இருக்கும்."

" அது என்னமோ உண்மைதான்," மஜீத் உட்புறம் பார்த்துக் கண்களைச் சிமிட்டியவாறே கூறுவான் : " சுஹ்றா அந்தஸ்து பார்ப்பவள்தான்."

அப்போது சுஹ்றா கதவின் மறைவில் நின்றுகொண்டு, கண்களை முறைத்து, பற்களை நெறித்து கொஞ்சம் பயங்கர உருவம் காட்டி விட்டு, வெளியில் கேட்காதபடி முணு முணுப்பாள் : " கொஞ்சம் பெரிய ஒன்று."

இதுபோன்ற சந்தர்ப்பங்களில் மஜீத் அவளைத் தண்டிப்பான். அது விசேஷ முறையில் இருக்கும். அவன் தன்னிடம் எப்போதும் வைத்திருக்கும் ரப்பர் உண்டி வில்லில், மடியிலிருந்து ஒரு சிறிய உருண்டைக் கல்லை எடுத்து வைத்து, சுஹ்றாவின் கணுக்காலை நோக்கி குறி பார்த்து, மெதுவே இழுத்து விடுவான். அவனுடைய குறி என்றுமே பிசகியது இல்லை. கணுக்காலில் அது பட்டதும்

அவன் சொல்லுவான் : " அந்தக் கதவில் ஒட்டிக்கொண்டிருந்த சுண்ணும்பைத்தான் நான் குறிவைத்து அடித்தேன்."

சுஹ்றா இடத்தைவிட்டு அசையமாட்டாள். அவளுடைய கண்களிலிருந்து ஓரிரண்டு நீர்த் துளிகள் உருண்டோடும்; அவ்வளவு தான். இதொன்றையும் அறியாத சுஹ்றாவின் உம்மா, மஜீதிடம் சொல்லுவாள் : " மஜீத், நீ குறிபாத்து குறிபாத்து, எங்க சட்டிப் பானைங்க எல்லாத்தையும் உடைக்கப்போறே. அவ்வளவுதான். உங்களைப்போல எங்ககிட்டே காசு பணம் கூடக் கிடையாதே, வேறே வாங்க ! "

" அப்படியானு இனிமேல் நான் குறிபாத்து அடிக்கறதுக்காக இங்கே வரமாட்டேன். நான் இந்தக் கிராமத்தை விட்டே போகப் போறேன் ! "

" எங்கே ? "

" ஆறுமாசப் பயணத்துக்கும் மேலே தொலைவுள்ள ஒரு இடத் துக்கு. "

" அப்புறம் "—சுஹ்றா சொல்லுவாள் : "சாயங்காலமா வீட்டுக்குத் திரும்பிடுவாரு. "

இதுதான் மஜீதைப்பற்றிச் சுஹ்றா கொண்டுள்ள கருத்தாகும். ஆனல் சுஹ்றாவைப்பற்றி மஜீத் கொண்டிருந்த கருத்து வேறுபட்ட தாகும் :

" அப்புறம் நான் உலகம் முழுவதும் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்புவேன். அப்ப, சுஹ்றா ரொம்பப் பெரிய பதவியிலே இருப்பா. என்னே, இந்த ஸ்ரீமதி அப்பப் பாக்கும்போது, பார்த்த மாதிரியாவே காட்டிக்கிடமாட்டா. "

மகிழ்ச்சி நிரம்பியதும், தொலைவில் உள்ளதுமான எதிர்காலத்தைப் பார்த்துவிட்டது போன்று, லேசான முறுவல் ஒன்று அவளுடைய முகத்தில் தோன்றும்.

நீண்ட நேர சிந்தனைக்குப் பிறகு அவள் சொல்லுவாள் : " பையன் தான் படிச்சுப் பெரிய உத்தியோகம் பாக்கப்போறாரு. எங்கிட்டத் தான் பணம் காசு ஏதும் கிடையாதே ? "

சுஹ்றாவுடைய வாப்பா சொல்லுவார் : " பணமெல்லாம் படைச் சவன் தருவான். நாம்ப மூணு பேரும் சேர்ந்தே பட்டணத்துப் பள்ளிக்கூடத்துக்குப் போகலாம் என்ன ? நான் தினமும் பாக்கு வித்த பிறவு, பள்ளிக்கூடத்து வாசல்லே வந்து காத்துக்கிட்டு இருப்பேன் ! மூணு பேருமாப் பேசிக்கிட்டே வீட்டுக்கு வரலாம் !

ஆனால்...அந்த ஆசை நிறைவேறவில்லை. அவர் மழையில் நனைந்துவிட்டு வந்து, இரண்டு மூன்று நாட்கள் சுரம் என்று படுத்தவர்தாம். பிறகு எழுந்திருக்கவேயில்லை. மூன்றாவது நாள் அந்தி வேளையில் அவர் இறந்து போனார். மரணத்தின் போது மஜீதும் படுக்கையின் அருகே இருந்தான். கெட்டுப்போன விளக்கின் புகை பிடித்த கறுத்த சிம்னிபோல அந்த விழிகள் இரண்டும்,...ஒளியும் உஷ்ணமும் அகன்று அசைவு இல்லாத அந்த உடல்!

அடுத்த நாள்தான் உடலை அடக்கம் செய்தார்கள். அன்று அந்திச் சமயத்தில் சுஹ்ராவை எதிர்பார்த்து வழக்கம் போல மஜீத் மாமரத்தின் கீழே நின்றுகொண்டிருந்தான். அவள் துயரச் சுமையுடன் மெதுவாக மஜீதின் அருகே வந்தாள். மஜீத் அந்த முகத்தை உற்றுப் பார்த்ததும், அவளால் அழுகையை அடக்க இயலாமல் போயிற்று. கேவிக் கேவி அவள் அழுதாள். அவளை என்ன சொல்லித் தேற்றுவது என்றே அவனுக்குத் தெரியவில்லை. அவனுடைய கண்ணீர்த் துளிகள் அவளுடைய உச்சியிலும், அவளுடைய கண்ணீர் அவனுடைய விரிந்த மார்பிலும் வீழ்ந்து ஓடிக்கொண்டிருந்தன.

அந்த நேரத்தில், அந்தகாரத்தில் மூழ்க்கடிக்கப்பட்ட தென்னை மரங்களுக்கு மேலே அம்புலியின் கீற்று ஒன்று மின்னிக் கொண்டிருந்தது.

## 6

சுஹ்ரா தன்னுடைய வீட்டு வாயிலில் நின்றுகொண்டு, மஜீதை அவளுடைய வாப்பா பட்டணத்திலே பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதற்காகக் கூட்டிக்கொண்டு போவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். இருவரின் கைகளிலும் குடை இருந்தது. ஆனால் மஜீதின் குடை புதியது. கிராம வீதி வழியாகச் சென்று தொலைவில் மறையும் வரை, அவள் அங்கேயே நின்று பார்த்துக் கொண்டிருந்தாள்...

அன்று மாலை பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்த மஜீத் அந்தி நேரத்தில் மாமரத்தின் கீழ் ஆஜரானான். புத்தம் புதுப் பாடப்

புத்தகம் அவன் கையில் இருந்தது. உத்சாகத்துடன் ஓடிவந்த சுஹ்றாவிடம், அவன் புத்தகத்தைப் பெருமையோடு காட்டினான் :

" படம் நிறைய இருக்குது. "

அவள் அதை அவன் கையிலிருந்து வாங்கிக்கொண்டு, பக்கங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தாள். மஜீத், அங்கிருந்து இரண்டு மைல் தொலைவில் உள்ள பட்டணத்தில், தான் கண்ட அற்புதக் காட்சிகளை விவரித்தான் ; இறுதியாகப் பள்ளிக் கூடத்தைப் பற்றிச் சொன்னான் :

" பட்டணத்தின் நடு மையத்திலே வெள்ளையடிச்ச, ஓடு வேய்ந்த ஏழு பெரிய கட்டடம் இருக்குது. இங்கே இருக்கற பள்ளிக் கூடம் போல இல்லெ. பெரிய தோட்டம்!......செடிகள்ளெதான் எத்தனை எத்தனை ரகங்க தெரியுமா? நான் அது எல்லாத்தோட விதைங்களையும் கொண்டு வர்றேன் என்ன? அப்புறம் விளையாடறத்துக்குன்னு இருக்கற பெரிய மைதானம். ஓ! இது எல்லாத்தையும் கண்டிப்பாப் பாக்கணுமாக்கும்! பசங்க எத்தன பேரு தெரியுமா? ப்பூ! கணக்கே கிடையாது. ஹெட்மாஸ்டர், தங்க ப்ரேம் போட்ட மூக்குக் கண்ணாடி போட்டிருக்காரு ; தடியாவும் இருக்காரு. கையிலே எப்பவுமே பிரம்பை வெச்சிக்கிட்டுத்தான் இருக்காரு. அப்புறம், என் கிளாஸ் டீச்சருக்கு கண்ணு ஒண்ணுதான் இருக்குது! எங்க க்ளாஸிலே மொத்தம் 42 பேர் இருக்காருங்க ; இதிலே 14 பேர் பெண்ணுங்க... "

திடுக்கிட்டவாறு மஜீத் தனது பேச்சை இடையில் நிறுத்தினான் ; புத்தகத்தில் சுஹ்றாவின் இரு சொட்டு நீர்த்துளிகள் !

" சுஹ்றா "—மஜீத் கேட்டான் : கண்ணீருக்கான காரணம் அவனுக்கு விளங்கவில்லை. " ஏன் அழுவறே? " மஜீத் மீண்டும் மீண்டும் கேட்டான். கடைசியில் அவள் முகத்தை உயர்த்திச் சொன்னாள் :

" எனக்கும் படிக்கணும். "

சுஹ்றாவுக்கும் படிக்கணும்!...இதுக்கு என்ன வழி? மஜீத் தீவிரமாகச் சிந்தித்தான். கேவி அழும் ஒலி அவனது இதயத்தில் முழங்கிக் கொண்டே இருந்தது. இறுதியில் வழி கிடைத்தது.

மஜீத் சொன்னான் :

" நான் கத்துக்கறதையெல்லாம் தினமும் சுஹ்றாவுக்குச் சொல்லித் தரேன், என்ன? "

தங்களுக்கிடையே இந்த ஏற்பாட்டைச் செய்து கொண்டாலும், இதைவிடச் சிறந்த மார்க்கம் ஒன்று, மஜீத்துக்குத் தோன்றியது.

மஜீதின் வீட்டில்தான் நிரம்பச் சொத்திருக்கிறதே? சுஹ்ராவையும் கூடப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிப் படிக்க வைத்தால் என்ன? வாப்பாவிடம் சொல்ல பயம். உம்மாவிடம் சொல்வது என்று அவன் முடிவு செய்தான்.

அன்று இரவு உண்ட பிறகு, வாப்பா வெற்றிலையில் சுண்ணும்பு தடவிக் கொண்டிருந்தார். உம்மா பாக்கு வெட்டிக்கொண்டு இருந்தாள்.

திக்திக்கென்று இதயம் அடித்துக்கொள்ள, மஜீத் உம்மாவின் அருகே சென்ருன். மெள்ள ' உம்மா ' என்று அழைக்கவும் செய்தான்.

தாய் அன்போடு கேட்டாள் : '' ஏண்டா கண்ணு? ''

மஜீத் மெள்ளச் சொன்ஞன் : '' அந்த சுஹ்ராவையும் நாமே படிக்க வச்சா என்ன? ''

சிறிது நேரத்துக்கு யாரும் எதுவுமே பேசவில்லை. வாப்பா, வெற்றிலையை மடித்துச் சுருட்டி வாயில் வைத்து, வெட்டப்பட்ட பாக்குத் துண்டுகளையும் வாயில் போட்டுச் சேர்த்துக் கடித்து மெல்ல ஆரம்பித்தார். பிறகு தங்கம்போல ஒளி வீசிக் கொண்டிருந்த பித்தளைச் செல்லத்திலிருந்து, வெள்ளி டப்பி ஒன்றை எடுத்துத் திறந்தார்.

காரமான நெடியுடன் கலந்த வாசனை அந்த இடம் முழுவதும் பரவியது. இடித்துச் சேர்த்த புகையிலையை உள்ளங்கையில் வைத்துக் கூட்டி, கொஞ்சம் கொஞ்சமாக எடுத்து வாயில் போட்டுக் கொண்டார்; எல்லாவற்றையும் ஒன்ருக, வாயின் முன் ஒரு பக்கமாக அடக்கிக் கொண்டார். பிறகு முற்றத்தில் வெகுதூரம் வரை பீச்சி யடிக்குமாறு எச்சிலைத் துப்பினுர்.

'' இதற்குள்ளே துப்பினுல் போதாது? '' உம்மா கோளாம்பியை * வாப்பாவின் அருகே வைத்துவிட்டுச் சொன்னுள் : '' அந்தச் செடிங்களோட இலேங்களிலெல்லாம் ரத்தம் மாதிரிப் பொட்டுப் பொட்டா எச்சல் விழுந்திருக்குது பாருங்க! ''

'' உக்கும்! இவ பிறந்த வீட்டுச் செடி '' என்று தீவிரமான வெறுப்புடன் சொல்லிக்கொண்டே, வாப்பா ஈஸிச் சேரில் மல்லாந்து கொண்டார்.

பகலைக் காட்டிலும் பிரகாசமான சர ராந்தலின் உக்கிரமமான வெளிச்சத்தில் வாப்பாவுடைய ' ஃப்ளானல் ' ஷர்ட்டின் தங்கப் பித்தான்கள் மஞ்சள் நிறத்துடன் ஒளி வீசின. கறுத்த புருவங்கள்

* எச்சில் துப்புவதற்கான கிண்ணம்.

உயர்ந்தன. தவிட்டு நிறமுடைய தோல்போல மினுமினுக்கும் நெற்றி, சுருங்கியது. தங்க ப்ரேம் போட்ட கண்ணுடியின் வட்டமான சில்லினூடே வாப்பா பார்த்தார்; மஜீதைப் பற்றிய தமது கருத்தை வெளிப்படுத்தினுர்.

"அடீ, இவன் எங்கேயாவது போய்த் தொலேயட்டும். ஊர் உலகத்தையெல்லாம் கொஞ்சம் சுத்திப் பாத்துட்டு, நம்மப் போலொத்த சனங்க எல்லாம், வாழ்க்கையை எப்படி நடத்தருங் கன்னு பாத்து கத்துக்கிட்டு வரட்டும்டீ, புரியுதா ?—இல்லே !"

"போச்சுடா ! ஆரம்பிச்சீட்டீங்களா ? வாயெத் தொறந்தாப் போச்சு ! உடனே போயிடு இங்கிருந்து, போயிடு கிராமத்தைவிட்டு! அரே அல்லா ! நீங்க ஏன் தான் இப்படியெல்லாம் பேசறீங்களோ ?"

"அடீ ! இவனுக்கு அறிவுங்கறது துளிக்கூட இல்லே !"

"ஆமாமாம், மத்தவங்களுக்கு அது ரொம்ப இருக்குது. எனக்குத் தான் நல்லாத் தெரியுமே !" உம்மா குத்திக்காட்டிப் பேசினுள். வாப்பா விடுவாரா ?

"அடீ, இவனுக்கு கிடைச்சிருக்கறது, உன் அறிவுதாண்டி ! புரியுதா ?—இல்லே !"

"ஆமான்னேன், இப்பல்லாம் என் புத்தி ரொம்ப கெட்டுத்தான் போயிடுச்சு. என்ன செய்யறது ? படைச்சவனுடை அந்நளப்படி !"

"இல்லாட்டீ இவனுக்கு இப்படித் தோணுமாடீ ? இல்லே, தெரியாமத்தான் கேக்கறேன், தோணுமா ? என் தம்பிமாருங்களுக்கு, எல்லாமாச் சேந்து மொத்தம் 26 குழந்தைங்க. உன் தம்பிமாருக்கும் தங்கைமாருக்குமாகச் சேர்ந்து மொத்தம் 41 பசங்க. அவங்க எல்லாரும் இங்கே வந்து சோத்தெத் தின்னு கும்மாளமடிக்கறப்பொ, நான் ஏதாவது வாயைத் திறக்கறதுண்டா ?—இல்லே !"

"ஓ, ஆண்டவனே ! என்ன பேச்செல்லாம் பேசறீங்க ?"

"அடீ, நீ ஆயிரந்தடவை ஆண்டவனை அழைச்சாலும், உனக்கு அறிவு வருமாடீ ?—இல்லே ! நான் சொல்லறது உனக்குப் புரியுதா ? —இல்லே !"

"அப்படியா ! கொஞ்சம் எயிதிக் காட்டுங்க." எழுதப் படிக்கத் தெரியாத உம்மா கூறினுள்.

இதைக் கேட்ட வாப்பா குபீரென உரக்கச் சிரித்தார். உம்மா வுடைய வெள்ளை ரவிக்கை முழுவதும் சிவந்த எச்சில் கறைகள் படிந்தன.

"போடீ உள்ளே !" வாப்பா உத்திரவிட்டார். "போயி உன் ரவிக்கையை மாத்திக்கிட்டு வா. புரியுதாடீ ?—இல்லே !"

உம்மா உள்ளே போனாள். ரவிக்கை மாற்றிக்கொண்டு திரும்பினாள். வாப்பா தொடர்ந்தார்: "எழுத்து! அடீ, உங்க வாப்பா படிச்சிருக்கறாரா?—இல்லே! அடீ, உன் சகோதரனுங்க படிச்சிருக்கானுங்களா?—இல்லே!"

உம்மா விடுவாளா? "ஒஹ்ஹோன்னோம். உங்களைச் சேந்தவங்கள்ளாம்தாம் நிறையப் படிச்சுருக்காங்க!"

இதற்கு வெகு நேரம்வரை வாப்பா பதில் ஏதும் சொல்லவே இல்லை. வாப்பா, எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளவில்லை. வாப்பாவுடைய அப்பாவும் அம்மாவும் கூட எழுதப் படிக்கக் கற்றவர்கள் அல்லர். இதை அம்மா நினைவுபடுத்தியதால், வாப்பாவுக்குக் கோபம் கோபமாக வந்தது:

"ஜாஸ்தி பேசினே, பாத்துக்க, ஆமாம்."—வாப்பா கர்ஜித்தார்: "உன் பல்லைத் தட்டி கையிலே கொடுத்திடுவேன், புரியுதாடீ?—இல்லே!"

அதற்கு உம்மா பதில் ஏதேனும் சொன்னால், உடனே பெரிய சண்டை நடந்திருக்கும்! வெற்றிலைச் செல்லத்தைத் தூக்கி முற்றத்தில் வீசுவார். உம்மாவை அடிப்பார்; மஜீதை அடிப்பார்; மஜீதின் சகோதரிகளை அடிப்பார். அது மட்டுமல்ல. மஜீதின் செடிகள் அனைத்தையும் பிடுங்கி எறிவார்...

அதனால் உம்மா எதுவும் சொல்லவில்லை. உம்மா ஒன்றும் பேசாதது கண்ட அப்பா கேட்டார்:

"ஏண்டி வாயடச்சுப் போயிடுச்சோ?—இல்லே!"

உம்மா ரொம்ப சாந்தமாகச் சொன்னாள்: "இதெல்லாம் ஏன் சொல்றீங்க? மஜீது என்னவோ ஒண்ணு கேட்டான்—ஆண்டவனோடு அருளாலயும் பெரியவங்க ஆசிர்வாதத்திலயும் நமக்குத்தான் போதுமான அளவு சொத்து இருக்குதே? அந்தச் சுஹ்றாவோடு வாப்பாவோ இறந்து போய்ட்டாரு. இப்ப அவங்களுக்கு யாருமே நாதி கிடையாது. நாம அவளைப் படிக்க வெச்சா என்ன?"

மஜீத் ஆவலோடு காத்திருந்தான். உம்மாவின் கழுத்திலேயும் காதுகளிலும் தங்க நகைகள் தகதகவென மின்னிக்கொண்டிருந்தன.

"இருக்குதுடீ. நமக்கு வேண்டிய அளவு சொத்து இருக்குது! உன் அப்பன் சம்பாரிச்சுக் கொடுத்ததா? இல்லே உனக்குச் சீதனமாக் கிடைச்சுதா?"

"ஆரம்பிச்சிட்டீங்களா, சீதனம்! பேசறத்தேப் பாரு. பின்னே சும்மாவில்லெ கட்டிக்கிட்டு வந்தீங்க? எண்ணி ஆயிரம் ரூபாயும் கூட கழுத்திலும் காதிலும் கையிலும் காலிலும் அப்புறம் இடுப்பிலும்,

தோலாக் கணக்கிலே பொன்னு போட்டுக்கிட்டு வந்தது மறந்து போயிடுச்சோ ? ''

'வாஹ்வா !' வாப்பா மீசையை இரு பக்கமும் தடவி விட்டவாறு சொன்னார் : '' முள்ளங்கி பத்தை மாதிரி முழுசாக் கொடுத்தாங்க பாரு ஆயிரம் ரூபா ! அடீ, உன் எடைக்கு எடை ரூபா கொடுத்தாக் கூட உன்னைப்போல அறிவு கெட்ட ஒருத்தியே யாராவது கட்டிப் பாங்களாடீ ?—இல்லே ! ''

'' அப்படியானு, இப்ப போயி அறிவுள்ள ஒருத்தியை கட்டிக்குங் களேன் ! ''

'' கட்டிக்குவேண்டீ ! கட்டிக்குவேன் ! என்னைப்போல யோக்கி யதை உள்ள ஆம்பிளேங்களுக்கு, ஆயிரமல்லடி, பத்தாயிரம் கொடுக்கறதுக்கும் ஆள் உண்டுடீ ? புரியுதாடீ ?—இல்லே ! ''

உம்மா இதற்கு ஒன்றுமே சொல்லவில்லை. வேண்டும் என்றால் வாப்பாவுக்கு எத்தனை பேரை வேண்டுமானாலும் கலியாணம் கட்டிக் கொள்ளலாம். உம்மா எதுவும் சொல்லாததனால் வாப்பாவுக்குக் கோபம் வந்தது.

'' அவ சொல்லறதைக் கேட்டியா ? நமக்கு வேண்டிய அளவு சொத்திருக்குதாம் ! ''—'தம்பிடிக் காசுகூட கிடையாது' என்பது போல வாப்பா பேசினார்.

மஜீதுக்கு உண்மை நிலைமை என்ன என்பது, நன்றாகத் தெரியவே செய்யும். அந்தக் கிராமத்திலேயே அதிகம் சொத்துள்ளவர் அவர்தான். ஒவ்வொரு தடவையும், பறித்துப் போடப்படும் தேங்காய்கள், தோப்பிலே மலைபோலக் குவிந்துகிடக்கும். ஒவ்வொரு முறையும் அறுவடையாகி மிதித்துக்கொண்டு வரப்படும் நெல்லைக் கொட்டி வைக்கப் போதுமான இடம் கிடையாது. இவையெல்லாம் தவிர, மர வியாபாரத்திலும் மிகுந்த லாபம் கிடைத்து வந்தது.

ஒரு முறை மரங்களை விற்று வந்தபோது வாப்பா பவுனையே கொண்டு வந்தார். அவற்றை வெள்ளைக் காகிதத்தில் குன்றுபோலக் குவித்தார். பிறகு சராந்தவின் முன்னால் அமர்ந்துகொண்டு வாப்பா ஒவ்வொன்றாக எண்ணி எண்ணி, வரிசையாக ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கி வைத்தார். பிறகு துணிப் பையில் போட்டுக் கட்டி பெட்டியில் வைத்துப் பூட்டினார். பூட்டுவதற்கு முன்னால் மஜீத், அவற்றை வாரி வாரி இறைத்து விளையாடினான். அவற்றின் தகதகக்கும் பொன் நிறத்தையும் கணீர் ஒலியையும் மஜீதால் வர்ணிக்கவே இயலவில்லை. அவ்வளவு பணம் படைத்த ஒருவருக்கு, ஒரு அப்பாவிப் பெண்ணை படிக்க வைக்ககூடாது ?

உம்மா சொன்னாள் :

" இல்லேன்னு சொல்லாதீங்க ! நமக்குத்தான் இருக்குதே ? இந்தக் கிராமத்தில் இருக்கறவங்க எல்லாரையும்விட அதிகமான சொத்து நமக்கு இல்லே? அந்தச் சுஹ்ராவைப் படிக்க வைக்கறதுக்கும், மஜீதுக்கு ஆகிற செலவுதானே ஆகும் ? "

வாப்பாவுக்குப் பற்றிக்கொண்டு வந்தது : " அடீ, உனக்கு அறிவு இல்லேன்னு நான் சொன்னா உனக்கு புரியுதாடீ ? —இல்லே ! அடீ, என்னோட உன்னோட ரத்தபந்தம் எல்லாமாச் சேர்ந்து, எத்தனின்னு தெரியுமாடீ ?—இல்லே ! இருபத்தியாறும் நாற்பத்து ஒன்னும் எத்தினின்னு தெரியுமாடீ ?—இல்லே ! "

உம்மா கேட்டாள் :

" எத்தினிடா மஜீது ?."

மஜீதுக்கு வியர்த்துக் கொட்டியது. அவன் காகிதமும் பென்சிலும் எடுக்க ஓடினான். அது கண்ட வாப்பா, பெரும் பரிகாசச் சிரிப்பு ஒன்றை உதிர்த்துவிட்டுச் சொன்னார் : இதோ போறதேடீ உன் புத்தி ! "

மஜீத் காகிதமும் பென்சிலும் கொண்டு வந்து 26இன் கீழே 41 என்று எழுதி, பிறகு வியர்த்து விறுவிறுக்கக் கூட்டத்தொடங்கினான். அப்போது வாப்பா சிரித்துக்கொண்டே சொன்னார் :

" அடி, அறுபத்தி ஏழு !."

அதற்குள்ளாக மஜீதும் கூட்டி முடித்திருந்தான்.

" ஆமாம் அறுபத்தியேழு, சரிதான் " மஜீத் ஒப்புக்கொண்டான். வாப்பா கர்ஜித்தார் : " போடா அப்பாலே." அடீ, வாப்பா கர்ஜித்தார் : " அந்தச் சுஹ்ரா நல்ல பொண்ணுதான். கெட்டிக்காரியும்கூட. இருந்தாலும், அவளை நாம படிக்க வெச்சா அதுக்கும் முன்னாலே இந்த 67 பேரையும் படிக்க வெக்கணம் ! அதுக்கு வேண்டிய பணம் நம்மகிட்டே இருக்கிதாடீ ? "

உம்மா ஒன்றுமே சொல்லவில்லை. " அவன் இன்னுமா இங்கிருந்து போகலை ?"—மஜீதைப் பார்த்து வாப்பா மீண்டும் சொன்னார் : " போடா இங்கிருந்து !"

மஜீத் துக்கம் தொண்டையை அடைத்துகொள்ள அங்கிருந்து போனான். அவன், சன்னலருகிலிருந்து இருளினூடே சுஹ்ராவின் வீட்டைப் பார்த்தபோது, கைகளில் முகத்தைத் தாங்கியவாறு மண்ணெண்ணெய் விளக்கின் ஒளியை உற்றுப் பார்த்துக்கொண்டு சுஹ்ரா வராந்தாவில் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி அமர்ந்திருப்பதைப் பார்த்தான்.

# 7

சுஹ்ராவின் வாழ்க்கை எந்தவித இலட்சியமுமின்றி, அப்படியே கழிந்து கொண்டிருந்தது. அவள் அநேகமாக எப்போதுமே மஜீதின் வீட்டிலேயேதான் இருப்பாள். அங்கு எல்லோரும் அவளை நேசித்தார்கள். இருந்தாலும் அவளுடைய முகத்தில் துயரத்தின் சாயல் எப்போதும் இருந்துகொண்டே இருந்தது. "எதற்கும் விசனப்படக் கூடாது" என மஜீதின் உம்மா அவளிடம் கூறிக்கொண்டே இருப்பாள்.

"எனக்கு விசனமொன்னும் இல்லையே" என்று சுஹ்ரா புன் முறுவலுடன் சொல்லுவாள். ஆயினும் அவளுடைய குரலில் ஒலித்த சோக இழையை, அவளால் மறைக்க முடியவில்லை. மஜீதுக்கும் இது மிகுந்த வேதனையைத் தந்தது. அவன் கூறுவான் :

"சுஹ்ராவின் பழைய சிரிப்பொலியைக் கேக்க ஆசையா இருக்குது."

அவள் சொல்லுவாள் :

"ஏன்? என் சிரிப்பு பழைய சிரிப்பு மாதிரி இல்லே..."

"இல்லே! இந்தச் சிரிப்பிலே கண்ணீர்க்கறை படிஞ்சிருக்குது."

"ஓ! அது ஒரு வேளை நான் வளர்ந்து பெரியவளாயிட்டே னில்லே, அதனாலேயிருக்கும்!"—சற்றுப் பொறுத்து, "நாம வளராமலே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!" என்பாள்.

துக்கமும் ஆசாபாசங்களும் வளர்ந்ததனால்தான் தோன்றுகின்றனவா என்ன?

அவர்கள் குழந்தைகளாக இருந்தார்கள். அவர்களை அறியாமலேயே அவர்கள் வளர்ந்து விட்டார்கள்! அழகிய மார்பகங்களும், கறுத்து நீண்ட கூந்தலுமுடைய ஒரு சுந்தர யுவதியாக சுஹ்ரா வளர்ந்து விட்டாள். மஜீத் அரும்பு மீசையுடன் கூடிய இளைஞனானான்.

சுஹ்ராவுக்குத் தனது எதிர் காலம் குறித்து மனதில் பெரும் அச்சம் இருந்து வந்தது. சகோதரிகளும் அவளும் அன்னையும் அனாதைகளாகி விட்டார்கள். தந்தையின் மரணத்துக்குப் பிறகு, அந்தக் குடும்ப பாரத்தைக் சுமக்க வேண்டியது அவளது பொறுப்பாகும்.

அவளுக்குப் பதினாறே வயசுதான் ஆகியிருந்தது. ஆயினும் அவள் அந்தக் குடும்பத்தைக் காப்பாற்றியாக வேண்டும். எத்தனை நாட்களுக்குத்தான் மஜீதின் உம்மாவிடமிருந்து உதவிகளைப்

பெற்றுக்கொள்வது? எவ்வளவு காலம்தான் பிறரை அண்டி வாழ்வது? அங்கு மஜீத் மட்டும் இருந்தானானால் அவளுக்கு இவ்வளவு கலக்கம் ஏற்படாது.

மஜீதின் வாப்பாவுடனோ, உம்மாவுடனோ, சகோதரிகளுடனோ சுஹ்ராவுக்கு எந்தவிதமான மனத் தாங்கலும் கிடையாது. ஆயினும் மஜீதோடு தனக்குள்ள 'ஏதோ ஒன்று', மற்றவர்களுடன் இல்லை. மஜீத் அவளது முன்னால் இருக்கும் வரை எதுவுமே இல்லை; இல்லாதபோது தான் எதையோ பறிகொடுத்ததுபோல... மஜீத் காலையில் பள்ளிக்கூடம் போனால், மாலை திரும்பி வரும்வரை, இனம் புரியாத ஒரு கலக்கம், ஒரு வெறுமை! மஜீதுக்கு உடம்புக்கு ஏதாவது வந்து விட்டால், அவளுக்கு ஏனோ உறக்கமே வருவது இல்லை. எப்போதும் மஜீதின் அருகிலேயே இருக்க வேண்டும்; இரவு பகல் அவனுக்குச் சேவை செய்யவேண்டும்!.

அவளுடைய விருப்பத்துக்கு ஆதரவு தருவது போல, ஒரு சம்பவம் நேர்ந்தது. மஜீதின் வலது காலில் 'விஷக்கல்' ஒன்று குத்தி விட்டது. அவன், நகரத்துக்குப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து, அது நான்காவது ஆண்டாகும். ஒரு நாள் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வரும்போது காலில் வலி தோன்றியது.

நொண்டி நொண்டி நடந்தபடியே மஜீத் வீடு வந்து சேர்ந்தான். அடுத்த நாள் உள்ளங்காலில் வீக்கம் கண்டிருந்தது. உடம்பு பூராவும் எரிச்சலும் வேதனையுமாக இருந்தது. வலி பொறுக்காமல் மஜீத் கட்டிலில் இப்படியும் அப்படியுமாகப் புரண்டு புரண்டு துடித்தான். "கொப்பளம் உடைந்து விட்டால் வேதனை குறைந்து விடும்" என்று எல்லோரும் சொன்னார்கள். ஆனால் யாரேனும் அருகில் சென்றால் மஜீத் வாய்விட்டு அலறித் துடிப்பான்; அழுவான்.

அவன் கட்டிலின் அருகே, எப்போதும் ஆள் கூட்டம் தான். நோய் பற்றி விசாரிக்க வந்தவர்களுடைய சந்தடி ஏதும் இல்லாத அபூர்வமான சமயங்களில், சுஹ்ரா அறைக்குள் சென்று காலின் அருகே அமர்ந்து வீங்கிப் பழுத்திருக்கும் இடத்தில் ஊதிக் கொண்டிருப்பாள். பழுத்த கொய்யாப்பழம் போல உள்ளங்காலில் மஞ்சளாகக் கொப்புளம் காணப்பட்டது. மஜீதால் அதன் வலியைப் பொறுத்துக் கொள்ளவே இயலவில்லை.

"சுஹ்ரா நான் செத்துப்பூடுவேன்" மஜீத் துயரம் மேலிட அழுதான்.

இதற்கு என்ன செய்யலாம்? எதுவுமே தோன்றமாட்டேன் என்கிறதே! அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது. அவள் மஜீதின் வலது உள்ளங்காலை தன் கன்னத்தோடு சேர்த்து வைத்துக் கொண்டாள். பிறகு உளளங்காலில் தனது அதரங்களைப் பதித்து அழுத்தமாக முத்தமிட்டாள்.

முதல் முத்தம்!......

அவள் எழுந்து நின்ருள். மஜீதின் சூடேறிய நெற்றியைத் தடவிக் கொடுத்தவாறே மஜீதின் முகத்தினருகே குனிந்தாள். அவளுடைய தலைமுடி அவிழ்ந்து மஜீதின் மார்பில் வீழ்ந்து பரவியது. அவளுடைய மூச்சுக் காற்று அவனது முகத்தை மெல்லத் தொட்டு வருடியது. அசாதாரணமான ஏதோ ஒரு சக்தி மின்சாரம் பாய்வது போல அவனது நாடி நரம்புகளைத் தட்டி எழுப்பியவாறு ஊடுருவிச் சென்று கொண்டிருந்தது......

காந்தத்தால் ஈர்க்கப்பட்டது போல மஜீதின் முகம் உயர்ந்தது. கைகள் இரண்டும் அவளுடைய கழுத்தில் மாலையாக கோத்துக் கொண்டன. அவன் அவளைத் தன் மார்போடு ஒருசேர இறுக அணைத்துக் கொண்டான்.

"சுஹ்ரா! என் உயிரே!"

சுஹ்ராவின் சிவந்த அதரங்கள் மஜீதின் உதடுகளில் அழுந்தின.

பிறந்த நாள் முதல் உள்ளதுதான் என்ருலும் அன்று, முதன் முதலாக விழித்துக் கொண்ட உணர்ச்சிப் பெருக்குகளின் தூண்டுதலினுல் அவர்கள் ஈருடல் ஓருயிராக ஒன்றுபட்டனர்.

ஆயிரமாயிரம் முத்தங்களை அவர்கள் பரஸ்பரம் அர்ப்பணித்துக் கொண்டார்கள். கண்கள் நெற்றி, கன்னங்கள் கழுத்து நெஞ்சு...... உடம்பு முழுவதும் புத்துணர்ச்சி!

"கட்டி உடைஞ்சிடுத்து!" புன்முறுவலுடன் இனிய சுரத்துடன் கூடிய சங்கீதம் போல, சுஹ்ரா இசைத்தாள்.

மஜீத் எழுந்தமர்ந்தான். அற்புதம்!......கொப்புளம் உடைந்து போயிருந்தது. வெட்கத்தால் கனிந்து போயிருந்த சுஹ்ராவின் அன்பு மிகுந்த முகத்தை, மஜீத் பார்த்தான்.

அந்தப் பவழ அதரங்களின் ருசியும், முதல் முத்தங்களின் போதையும்! சுஹ்ரா முத்தமிட்ட உள்ளங்காலில் முன்னெப்போதுமிராத ஒரு குளுமை......

சுஹ்ராவால் அன்றிரவு உறங்கவே இயலவில்லை. உடம்பெல்லாம் தகித்தது... அவள் வாடி வதங்கினுள்.

## 8

சுஹ்ரா மஜீதை நேசித்தாள். மஜீத் சுஹ்ராவை நேசித்தான். இதை இருவருமே அறிந்திருந்தார்கள். அன்பு வலைப் பின்னலின் நடுவே, மஜீத் சிக்கிக் கொண்டிருந்தான். ஆயினும் வாழ்வுப் பிரச்னைகளும், உன்னதமான ஆசை இலட்சியங்களும், அவனது மனதை உறுத்திய வாறு இருந்தன. தன்மானம் உள்ளவன் அவன். தன்னைப் பற்றிப் பெருமதிப்பு அவனுக்கு உண்டு. அவனுடைய வாழ்க்கைப் பாதை, அவன் தந்தையின் வாழ்க்கை முறைக்கு மாறுனதாக இருந்தது. குடும்ப விஷயங்களைப் பற்றி அவனுக்கு எதுவுமே தெரியாது. வாப்பாவோடு ஏதாவது பேசக்கூட மஜீத் பயந்தான்.

வாப்பா, யாருடைய கருத்துக்களையும் மதியாமல் தமது இஷ்டப்படி எதையும் செய்து வந்தார். மஜீதுக்கு ஏதாவது தேவைப்பட்டால் உம்மாவிடம்தான் கேட்டு வாங்கிக் கொள்வான். வாப்பாவின் குரல் கேட்டால் போதும்! மஜீதின் இதயத்தில் குரோதப் புயல் வீசத் துவங்கிவிடும்.

எதனுல் இந்த வெறுப்பு? அவனுக்கே காரணம் தெரியவில்லை. அவர் ஒரு நல்ல தந்தையல்லவா? மஜீதுக்குத் தேவையானவற்றை யெல்லாம் செய்து கொடுக்கவில்லையா? பின், அந்த தந்தையுருவில் காணும் குறைதான் என்ன?

தன்னுடைய வாப்பாவைக் காட்டிலும், சுஹ்ராவுடைய வாப்பா வைத்தான் மஜீதால் அதிக அளவு நேசிக்கவும் மதிக்கவும் முடிந்தது. சுஹ்ராவுக்கு, அவளுடைய வாப்பாவிடம் பயமில்லை. தந்தையைப் பற்றிப் பேச்செடுத்தாலே போதும், சுஹ்ராவுடைய கண்கள் குளமாகி விடும். மஜீதின் வாப்பா இறந்தால் அவன் அழுவானு? உம்மா இறக்கும் பட்சத்தில் மஜீத் நிச்சயமாக அழுவான்.

எப்படியாயினும் மஜீதுக்கு அங்கு வசிப்பதில் துளியும் விருப்ப மில்லை. பெரும்பாலான நேரத்தை, அவன் வீட்டுக்கு வெளியிலும், தனது சொந்த அறையிலுமாகக் கழித்தான். இப்படியிருக்கையில் மிக முக்கியமான ஒரு சம்பவம் நடந்தது.

மஜீத் அப்போது நகரப் பள்ளிக்கூடத்தில் இறுதி வகுப்புக்கு ஒரு வகுப்பு கீழே படித்துக் கொண்டிருந்தான். வயலில் அறுவடையும் போரடிப்பதும் தொடங்கியிருந்தன. வெய்யில் தீவிரமாக இருந்த சமயம். போதும் போதாதற்கு, ரம்ஜான் வேறு. அன்ன ஆகார மில்லாமல் குடிநீர் பருகாமல் உமிழ்நீரைக்கூட விழுங்காமல், பகல் முழுவதும் நோன்பை ஒட்டிப் பட்டினியிருப்பதால், காலணுப்பெருத

விஷயத்துக்கெல்லாம்கூட, வாப்பா வெறி பிடித்து கூச்சலிட்டு வந்தார்.

ஒருநாள் காலை வாப்பா வயல் வெளிக்குப் புறப்படும் முன்பாக மஜீதைக் கூப்பிட்டுச் சொன்னார்: "அறுவடையாகிப் போரடித்து உலர்த்தி வைக்கப்பட்டுள்ள நெல்லை, அக்கரையிலிருந்து, தோணியில் கொண்டு வரவேண்டும். கூட நம்மவர் யாரும் இல்லையென்றால் படகோட்டிகள் வழியிலேயே வாரி விற்று விடுவார்கள்."

"உனக்குத் தான் விரதமில்லையே! நீ பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பியவுடனே வயலுக்கு வா. என்ன, வர்றியா?—இல்லே!"

மஜீத் சொன்னான்: "வந்திடறேன்."

ஆனால் மஜீத் போகவில்லை. வழக்கம் போல் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தவுடனே, அவன் விளையாடப் போய்விட்டான். அந்தி வேளை உபவாசம் முடியும் நேரத்தில் வாப்பாவைக் காணாதபோது தான், மஜீதுக்குக் காலையில் வாப்பா சொன்னது நினைவுக்கே வந்தது......

நன்றாக இருட்டிய பிறகுதான் வாப்பா வந்தார். மஜீதைப் பார்த்தவுடனேயே வாப்பா இரைந்தார். தாங்கமுடியாத சினத்தோடு அவர் மஜீதின் கன்னத்தில் 'பளீர்' என ஓர் அடி வைத்தார். மஜீதின் தலை சுற்றியது; தலைக்குள்ளே மின்மினுப் பூச்சிகள் பறந்தன.

மீண்டும் மீண்டும் வாப்பா அவனை அடித்தார்.

"ஒண்ணு, நீ திருந்தணும், இல்லே, சாகணும். புரியுதா?—இல்லே!"

அடிச்சத்தத்தையும் இரைச்சலையும் கேட்டு, உம்மா உள்ளிருந்து ஓடி வந்தாள். மஜீதைக் கட்டிப் பிடித்துக்கொண்டாள்.

"போதும் நிறுத்துங்க! புத்தி வர்ற அளவுக்கு அடிச்சாச்சில்லே?"

"போடி உள்ளே", வாப்பா கர்ஜித்தார்—"சொன்னாக் கேக்கமாட்டே." வாப்பா உம்மாவை அடிக்க ஆரம்பித்தார். அழுது கொண்டே ஓடிவந்த சகோதரிகளையும் அடித்தார்; கதவுகளை அடித்து உடைத்தார்; பாத்திரங்களை வீசி எறிந்து உடைத்தார்.

இந்த அமர்க்களத்துக்கிடையில் மஜீத் செயலற்று நின்று கொண்டிருந்தான்.

"போடா, போ. ஊரெல்லாம் சுத்தி அலைஞ்சிட்டு கொஞ்சம் கத்துக்கிட்டு வா. புரியுதா?—இல்லே!"

வாப்பா இடிமுழக்கம் செய்தவாறே மஜீதின் பிடரியைப் பிடித்து முற்றத்தில் தள்ளினார். மஜீத் கவிழ்ந்து வீழ்ந்தான். உதடுகளில்

அடிபட்டு ரத்தம் வழிந்தது. மஜீத் எழுந்து நின்றதும், வாப்பா மீண்டும் கத்தினார்: "போ வெளியே!"

அந்த ஒரு சத்தமே மஜீதை உலகத்தின் கோடி வரை விரட்டுவதற்குப் போதுமானதாக இருந்தது. மஜீத் அங்கிருந்து போனான். வாயிற் படிக்கட்டில் அமர்ந்து கொண்டான்... அவனால் அழக்கூட இயலவில்லை. ஒரு துளிக் கண்ணீர் கூட இல்லை. இதயத்தில் உக்கிரமான குரோதப் புயல் பயங்கரமாக வீசிக்கொண்டிருந்தது. நல்ல அறிவுரைகளைச் சொல்லி அமைதிப்படுத்தவோ, ஆறுதல் வார்த்தைகள் கூறவோ யாரும் வரவில்லை!

விட்டில் மயான அமைதி! சர ராந்தல் தீவிரமாகச் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது; ஆனால் சாவு வீடு போல...அங்குச் சலனமில்லை!

விரிந்து பரந்த இந்தப் பூவுலகில் அவன் தன்னந்தனியனானான். வீட்டையும் கிராமத்தையும் உதறிவிட்டுச் செல்லுவது, என்று அவன் தீர்மானித்தான். ஆனால் எங்குப் போவது? கையிலோ காசில்லை; வெற்று உடம்பு ஒன்றுதான் அவனிட மிருப்பதெல்லாம். ஆயினும் அவன் வாழ்ந்து காட்டுவான்! அவன் இளைஞனல்லவா? போகத் தான் வேண்டும்!... அவன் போனான்!

அதற்கு முன்னால் சுஹ்ராவின் வீட்டை நோக்கி அவன் சென்றான். அவர்கள் இருவரும் வழக்கமாக அமரும் மாமரத்தின் கீழ், இருளில் ஏகாந்தமாக அவன் நின்றான்.

தொலைவில் சுஹ்ராவின் இனிய குரல் ஒலி கேட்டது. மண்ணெண்ணெய் விளக்கின் முன்னால் அமர்ந்தவாறு, அவள் 'குர்ரானை' ஓதிக் கொண்டிருந்தாள். இடையே, அவள் முகத்தை உயர்த்தி மாமரம் இருந்த திசை நோக்கினாள். எதையோ கூர்ந்து பார்ப்பது போல, அவளது விழிகள் நின்று நிலைத்தன. தங்கம்போலிருந்த அவளது கன்னக்கதுப்புக்கள், மின்னிக் கொண்டிருந்தன. தொட்டால் ரத்தம் கசியுமோ என்றிருந்த அதரங்கள், விரிந்தன. சற்று நேரம் அப்படியே இருந்துவிட்டு அவள் மீண்டும் வாசிப்பதைத் தொடர்ந்தாள்.

"சுஹ்ரா"—மஜீத் கூப்பிட்டான், உதடுகளைத் திறக்காமல், மனதிற்குள்ளாகத்தான். உரக்கக் கூப்பிட வேண்டும் என்று தோன்றியது. இறுதியாக விடைபெற்றுக் கொள்ளவேண்டாமா?... வேண்டாம்! அவன் திரும்பி நடந்தான்; பைத்தியக்காரனைப் போல கிராமம் பின்னால் சென்றது; பட்டணத்தைக் கடந்து முன்னேறினான். காடும் மலைகளும் நகரங்களும் பின்னால் செல்லச் செல்ல, அவன் முன்னேறிச் சென்று கொண்டேயிருந்தான். அவன் ஏழு ஆண்டுகள்

இவ்விதம் சுற்றினன். நீண்ட பெரும் ஏழு வருடங்கள்! இதற்கிடையே வீட்டில் என்னென்ன நேர்ந்தன என்றோ, சுஹ்ராவின் வாழ்வில் என்னென்ன மாற்றங்கள் நிகழ்ந்தன என்றோ எதுவுமே அவனுக்குத் தெரியாது!

அவன் கடிதங்கள் ஏதும் அனுப்பவில்லை. எதையும் தெரிந்து கொள்ளவேண்டாம் என்று அல்ல. போடவில்லை, அவ்வளவுதான். அவனைத் தேடிக்கொண்டு வீட்டிலிருந்து யாரேனும் வந்துவிட்டால்?

அவன் சுற்றினன். பலவிதமாக நடந்தும், வாகனங்களிலும், பிச்சைக்காரர்களுடன் சேர்ந்து கொண்டும், ஆண்டிகளுடன் அவர்களது சகாவாகவும், சன்னியாசிகளின் சீடனகவும், ஹோட்டல் வேலையாளாகவும், அலுவலகக் குமாஸ்தாவாகவும், தேசீயக் கிளர்ச்சிக்காரர்களில் ஒருவனகவும், குபேரனைப் போன்ற செல்வச் சீமான்களின் விருந்தினனகவும்—இப்படிப் பல்வேறு வேடங்களில் பலவிதமாக அவன் வாழ்க்கையை ஓட்டினன். பல மதங்களைச் சேர்ந்தவர்களுடன் கலந்து உறவாடினன்...

பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசை ஏதும் அவனுக்கு, அப்போது இருக்கவில்லை. அதற்கான வாய்ப்புக்கள் எதையும் அவன் பயன்படுத்திக் கொள்ளவுமில்லை. பார்ப்பது, அறிவது, கற்பது, இதுவே அவனது இலட்சியங்களாக இருந்தன.

அவன் பார்த்தான் — சின்னஞ்சிறு கிராமங்கள் — மாபெரும் நகரங்கள்; சிற்றருவிகள்—நீண்ட பெரும் நதிகள்; சிறு குன்றுகள்—பெரும் மலைத் தொடர்கள்; மண் துகள்கள் நிறைந்த வயல்வெளிகள்—பெரு மணல் பரப்பான பாலைவனங்கள்—இப்படி ஆயிரமாயிரம் மைல்களைக் கடந்து அவன் சென்ருன். எதைப் பார்ப்பதற்காக? எதனைக் கேட்பதற்காக?

மனிதர்கள் எல்லாவிடங்களிலும் ஒன்றுபோலவேதான் இருக்கிருர்கள். மொழியிலும் நடையுடை பாவனைகளிலும்தான் வேறுபாடு. எல்லோரும் ஆணும் பெண்ணும்தாம்;...பிறந்து, வளர்ந்து, இணை சேர்ந்து, பெருக்குகிருர்கள். பிறகு மரணம்; அவ்வளவுதான். பிறப்பு இறப்புகளுக்கிடையில் உள்ள தாங்கவொண்ணுத் துயரங்கள், எங்கும் தாம் இருக்கின்றன. இறப்போடு இவை எல்லாம் தீர்ந்துவிடுமோ? இப்படி ஒரு தெளிந்த அறிவோடு, அவன் ஊர் திரும்பினன். எதற்கு? சுஹ்ராவை மணந்து கொண்டு, மீதிக்காலத்தை எங்காவது அமைதியாகக் கழிக்கவேண்டும் என்றுதான்.

ஆனல் அவனை நிலைகுலைந்து போகும்படிச் செய்யும் மாற்றங்கள் தாம், அவனை எதிர்கொண்டழைத்தன. வியாபாரத்தில் அடிக்கடி

நேர்ந்த நஷ்டங்களினாலோ அல்லது கிராமத்தில் ஒரு பாலம் கட்டு வதற்கு ஒரு பெரும் தொகை கோரி, சர்க்காருக்கு விடுக்கும் மனு என்று கூறிய ஒருவரின் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டதாலோ அல்லது வேறு ஏதேனும் காரணத்தாலோ அவர்களுடைய சொத் தெல்லாம் கடனில் மூழ்கியிருந்தது. வீடும்கூட அடமானத்தில் இருந்தது. தாய் தந்தையர் இருவருமே நன்கு மூப்படைந்து போயிருந்தார்கள். சகோதரிகள் இருவரும் வளர்ந்து மணப் பருவத் தையும் கடந்து விட்டிருந்தனர். எல்லாவற்றுக்கும் மேல், சுஹ்ரா வுக்குக் கல்யாணமாகியிருந்தது. மஜீத் கிராமம் வந்து சேர்வதற்கு ஓராண்டு முன்புதான், இது நடந்து முடிந்திருந்தது. பட்டணத்தில் எங்கேயோ ஓரிடத்தில் உள்ள ஒரு கசாப்புக் கடைக்காரன்தான் அவளை மணந்திருக்கிறான்.

சுஹ்ரா மஜீதுக்காகக் காத்திருக்கவில்லை. 'வாழ்க்கை சுயநலம் மிகுந்தது போலும்' என்ற முடிவுக்கே மஜீத் வந்தான். எப்படி யிருந்தாலும், கிராம மக்கள் எல்லோரும் மஜீதைக் காண வந்தார்கள். அவனது பெட்டிகளையும் படுக்கை முதலானவற்றையும் நாலைந்து ஆட்கள் சுமந்து சென்றதைப் பார்த்த கிராமத்தார் "மஜீதிடம் நிறையப் பணம் இருக்கிறது" என்று நினைத்தார்கள். ஆனால் அவனிடம் இருந்ததோ, நிறையப் புத்தகங்களும், ஒரு 10 ரூபாய் நோட்டும்தான். திரும்பி வந்த தொடக்கத்தில், மஜீதுக்கு அளவுக் கதிகமான உபசரிப்பு கிட்டி வந்தது. கிராமத்தில் ஒவ்வொரு வீட்டிலும் இரண்டு மூன்று முறை விருந்தாளியாகச் செல்லும் கட்டாயம் அவனுக்கு ஏற்பட்டது. வயிறு நிரம்ப உண்டாலும் கூட, மேலும் மேலும் வற்புறுத்தி அவனை உண்ணுமாறு உபசரித்தார்கள். ஆனால் ஒரே மாதத்துக்குள் உண்மை வெட்ட வெளிச்சமாகி விட்டது. தரித்திரத்தில் மூழ்கியுள்ள அந்தக் குடும்பத்தின் 'ஒரு தரித்திர அங்கம்தான்' மஜீதும்! வெறும் பாப்பர் என்பதையும் அவர்கள் அறிந்து கொண்டுவிட்டார்கள்.

"அவன் ஏன்தான் வந்தானோ?"—இதுதான் கிராமத்தாரின் கேள்வி. "ஏழு ஆண்டு கழிச்சி வந்திருக்கறான், வெறுங் கையோட!"

மஜீதை வெறுப்போடு பார்ப்பதும், அவன் காதுபட அவனைக் கேலி செய்வதும், கிராமத்தில் வரவர சகஜமாகிவிட்டன. இதனால், அவன் வீட்டைவிட்டு வெளியே போவதையே நிறுத்திக் கொண்டு விட்டான். வீட்டில், தன் பழைய அறையிலேயே எப்போதும் இருந்து வரலானான்.

அந்த அறையில்தான், மஜீத் சம்பந்தப்பட்ட எத்தனை எத்தனை சம்பவங்கள் நடந்திருக்கின்றன! படித்துக் கொண்டிருந்தபோது இந்த அறையைத்தான் அவன் உபயோகித்து வந்தான். மஜீதின் 'சுன்னத் சடங்கு' நடந்ததும் இங்குதான். விஷக்கல் குத்திப் படுத்திருந்ததும், இந்த அறையில்தான். இதில் பழைய சாய்வு நாற்காலி ஒன்றைப் போட்டுக்கொண்டு, வெளியே பார்த்தபடி மஜீத் படுத்துக் கொண்டிருப்பான். வீட்டில் சரியாகச் சாப்பிடக்கூட எதுவும் கிடையாது. மஜீதின் சகோதரிகள், தேங்காய் நாரை அடித்துப் பிரித்துத் திரிக்கும் கயிறுகளை வாப்பா அங்காடியில் கொண்டுபோய் விற்றுவிட்டு, ஏதாவது வாங்கி வருவார். அதிலிருந்து பெரும் பங்கை, உம்மா மஜீதுக்கே கொடுப்பாள். பிறகு கருணையோடு சொல்லுவாள்: "வந்ததுக்கு இப்ப என் மவன் இளைச்சு போயிட்டானே! உன்னை எப்படி வளத்தோம் தெரியுமா? உனக்கு நிறம் கொஞ்சம் மட்டுங்கிறதுக்காக பாலில், தங்கத்தை அரைத்துச் சேர்த்து உனக்கு நிறைய குடுப்போம் என் ராசா."

கண் கொட்டாமல் உற்றுப் பார்த்தவாறு பிரமை பிடித்ததுபோல மஜீத் அமர்ந்து கொண்டிருப்பான். என்ன செய்வது? கையில் பணமில்லை; கிடைக்க வழியுமில்லை; உதவி செய்ய ஆளும் இல்லை. மஜீத் நாளுக்கு நாள் சோர்வடைந்து வந்தான். மனத்தைத் தீவிரமாக ஈடுபடுத்த வேறு வேலை ஏதும் இல்லையாதலால் அவன் மறுபடியும் ஒரு தோட்டம் போட்டான்; ஆனால் இம்முறை தனியாக.

முற்றத்தின் முன்னால் சதுரமாக வெள்ளை மணலைப் பரப்பிவிட்டு, நான்கு எல்லைகளிலும் செடிகளை நட்டு வளர்த்தான். சுஹ்ரா கையினால் நட்டு வளர்க்கப்பட்ட செம்பருத்திதான், ஒரு பக்கத்து எல்லையாக இருந்தது. அது இப்போது ஒரு பெரிய மரமாக வளர்ந்திருந்தது. அவன் வந்தபோது அதில் பூக்கள் நிறைந்திருந்தன. பச்சைப் பசேலென்ற இலைகளுடன் கூடிய காடுகளில் இரத்தத் துளிகள் தெறித்து விழுந்திருப்பதுபோல, கருஞ் சிவப்பு வண்ணப் பூக்கள் அதில் ஒரு போதும் ஓய்ந்துபோவதே இல்லை. அதனடியில் ஈஸிச் சேரைப் போட்டுக்கொண்டு, அதில் சாய்ந்தபடி படித்துக் கொண்டிருப்பான் அவன். ஆனால் அவன் கண்கள் தாம் எழுத்துக்களைப் பார்த்துக் கொண்டிருக்கும்! புத்தகத்தைப் பிரித்து மடியில் வைத்தபடி அப்படியே இருப்பான் அவன்!

"என் ராசா, உனக்கு என்னடா கண்ணு கவலை?" என்று உம்மா துருவித் துருவிக் கேட்பாள்.

அவன் மெதுவாகச் சொல்லுவான்: "ஒண்ணுமில்லே."

உம்மாவும் சிந்தனை வயப்பட்டுச் சொல்லுவாள்: " உம்! எல்லாம் படைத்தவனின் செயல். "

மஜீதை உற்சாகப்படுத்துவதற்காக 'அவனுடைய பிரியமான செடிகளுக்குத் தண்ணீர் கொட்டுவதில்' அவனுடைய சகோதரிகள் தங்களுக்கிடையே போட்டி போடுவார்கள். இதனால் அவர்களுக்கிடையே சண்டை வருவதும் உண்டு. இறுதியில் இருவரும் ஒன்று சேர்ந்து மஜீதின் அருகே வந்து கூறுவார்கள்: " இக்காக்கா, செடிகளுக்கெல்லாம் நான்தான் தண்ணி ஊத்தினேனுக்கும்! "

மஜீத் சமாதானப்படுத்துவான்: " செடியிலே பூக்கற பூக்களை, நீங்க ரெண்டு பேருமே ஆளுக்குப் பாதியா எடுத்துக்குங்க! "

" அவுங்க அம்மா ஊட்டுச் செடி! "—வாப்பா சொல்லுவார். " என் சொத்தெல்லாம் கரைச்சி அவனை நான் படிக்க வெச்சேன்; வெளியே போயி சம்பாரிச்சுக்கிட்டு வந்திருக்கருன் பையன்! இப்ப, இந்த வயசு காலத்திலே நான் சொகம்மா இருக்கறதுக்காக இந்தத் தோட்டம் போட்டிருக்கிருன்!—இதெல்லாத்தையும் நான் ஒரு நாள் வெட்டி பிடுங்கியெறியப் போறேன்! நான் சொல்றது காதிலே விழுந்துதாடி?—இல்லே! "

உம்மா சொல்லுவாள்: " எப்படியிருந்தாலும் இந்த முற்றமெல்லாம் எவ்வளவு சுத்தமாயிடுச்சி பாத்தீங்களா? "

வாப்பா, உலர்ந்த வெற்றிலையில் காய்ந்த சுண்ணும்பை உதிர்த்துப் போட்டவாறே சொல்லுவார்: " நான் சொல்றது கேக்குதாடி?—இல்லே! "

" என்ன வேணும்! "

" எங்கிருந்தாவது கொஞ்சம் புகையிலைக் காம்பு வாங்கிக்கிட்டு வா. "

உம்மா ஒரு பழம்துணியைத் தலையில் முக்காடாகப் போட்டுக் கொண்டு, அழுக்கேறிக் கிழிந்த ரவிக்கையுடன் அண்டை அயல் வீடுகளுக்குப் புகையிலைக் காம்பு வாங்கிவரப் போவாள்.

நினைவு அலைகள், மஜீதின் இதய வெளியினூடே தாவிச்சென்று கொண்டிருக்கும்.

வறுமை ஒரு கொடிய நோய். அது உடலையும் மனதையும் ஆன்மாவையும்கூட நாசம் செய்துவிடுகிறது. இப்படி உடலும் மனமும் ஆன்மாவும் நாசமாகி அழிந்துபோன இலட்சோப லட்சம் ஆண், பெண்களை, பல்வேறு சாதிகளிலும் அவன் கண்டிருக்கிருன். அந்தக் காட்சிகளெல்லாம் அவனது மனதை நிறைத்துவிடும்.

உருக்குலைந்த அருவருப்பான இந்தக் காட்சிகள் மட்டும், அவனது நினைவில் பசுமையாக இருப்பது ஏன் ?

வாழ்வு ஒளிமயமான அழகுடையதுதான்—ஆயினும் அதன் முகத்தில் ஒட்டிக்கொண்டிருக்கும் சேற்றையும் சகதியையும் அவனால் மறக்க முடியாமலே இருக்கிறது. வாழ்வின் சீர்கேடுகள் ! வாழ்வின் இல்லாமைக் கொடுமைகள் !

உண்ண உணவில்லாதோர், உடுக்க உடையில்லாதோர், இருக்க இடமில்லாதவர், உடல் ஊனமுற்றவர்—இப்படி நிராசையால் வாடுவோரின் முடிவில்லாத நீண்ட பெரும் ஊர்வலம்... இரவும் பகலும் அவனது இதயத்தினூடே சென்றுகொண்டே யிருக்கும். இவற்றையெல்லாம் மறக்கவே அவன் விரும்பினான்—ஆனால், மறப்பது எப்படி ? மண்டைக்குள் எப்போதும் ஒரு எரிச்சல் ; இதயத்தில் தாங்க முடியாத ஒரு சுமை.

சுஹ்ராவைப் பற்றி நினைக்கையில் அவனது கண்களிலிருந்து நீர் பெருகி ஓடும். அவளைப் பார்க்க வேண்டும் என்று தோன்றும். ஆனால் அவள் வேறொருவனின் மனைவியல்லவா ? ஆயினும் தொலைவிலிருந்தாவது அவளைப் பார்க்க வேண்டும் என்று ஒரு ஆவல். அவளைப் பழிப்பதற்காக அல்ல ; சொல்லம்புகளால் அவளைத் துளைப்பதற்காகவும் அல்ல. வெறுமே அவளைக் காண்பதற்காகத் தான் ! அந்த இனிய குரலைக் கேட்பதற்காகத்தான் !

அவள் மஜீதை மறந்துவிட்டாள் ! ஆனால் மஜீதால் அவளை மறக்க இயலுமா ? நிறைய மாம்பழங்களைத் தந்து அவர்களுக்கு ஆசி வழங்கிய அந்த மாமரத்தின் அடியில், இரவின் ஏகாந்தத்தில் மஜீத் சென்று அமர்ந்திருப்பான். யாரையும் எதிர்பார்த்து அல்ல. எதிர் பார்க்கத்தான் யாரிருக்கிறார்கள் அவனுக்கு !

நான் திரும்பி வந்திருப்பது பற்றிக் கேள்வியுற்றால் சுஹ்றா ஒரு முறை... ஒரு முறையும் வரவே மாட்டாள் என்று மஜீத் நினைத்தான்.

# 9

சுஹ்ரா வந்தாள் ; மஜீத் திரும்பி வந்திருக்கிருன் என்பதைக் கேள்வியுற்றதும் அவள் பிரேம பாசம் பொங்கிப் பெருக, மூச்சு இரைக்க ஓடி வந்தாள். ஆனுல் அவளைக் காண மஜீதுக்கு விருப்பமில்லை. அவன் மனம் உடைந்து, நிலைகுலைந்து, ஆடிப்போயிருந்தான். அவனுல் அசையவும் முடியாமலிருந்தது. அவ்வளவு தூரம் சோர்ந்து தளர்ந்து போயிருந்தான் அவன்.

"எங்கே ?" என்ற சுஹ்ராவின் கேள்வியும் "தோட்டத்தில்" என்ற உம்மாவின் பதிலும் மஜீதின் காதில் விழுந்தன. அவனுடைய இதயம் துரிதகதியில் அடித்துக்கொண்டிருந்தது. அவன் துளிக்கூட அசையாமல் ஈஸிச்சேரில் படுத்துக்கொண்டிருந்தான். தோட்டம் அந்தி வெய்யிலில் மூழ்கியவாறு இருந்தது. வண்டுகள் ரீங்காரம் செய்தபடி பூக்களுக்கிடையே தாவிப் பறந்து கொண்டிருந்தன. மணத்தைப் பரப்பியவாறு வந்து கொண்டிருந்த இளம் காற்று, இலைகளை லேசாக அசைத்துக்கொண்டிருந்தது. மஜீத் மாலை மஞ்சள் வெய்யிலில் மூழ்கி சிலைபோலக் கிடந்தான். சுஹ்ராவின் காலடி மிகமிக அருகே வந்தது !

அவளது துயரம் நிரம்பிய குரல் பின்னுல் கேட்டது : "ஓ ! புதுத் தோட்டம் !" மஜீதின் இதயத்தில் தாங்கவொண்ணுத வலி, வேதனை. வெறும் சாதாரண வலி அல்ல. கூர்மையான முட்களைக் கொண்டு குத்திக் கிளறியது போன்று இதயத்தில் விண்விண்ணென்று தெறிக்கும் வலி.

இதயம் வெடித்து அழுகை குமுறி வர ஆயத்தமாக இருப்பது போன்று நெஞ்சடைக்கச் சுஹ்ரா கேட்டாள் :

"என்னை நினைவு இருக்குதா ?"

மஜீதின் கண்கள் குளமாயின.

அவள் மீண்டும் கேட்டாள் : "எங்கிட்டெ கோபம் போலயிருக்குது ?"

மஜீத் திரும்பிப் பார்த்தான். அவனது இதயம் சுட்டது. அவனுல் எதுவுமே பேச இயலவில்லை. சுஹ்ரா முழுக்க முழுக்க மாறிப் போயிருந்தாள்...கன்னங்கள் ஒட்டி உலர்ந்து போயிருந்தன. கை விரல் கணுக்கள் வீங்கித் தெறித்துக்கொண்டிருந்தன. நகங்கள் தேய்ந்து போயிருந்தன. மொத்தத்தில் சோகை பிடித்ததுபோல, வெளுத்துப் போயிருந்தாள். காதுகளில் கறுப்பு நூல்கள் தலைமுடியினுல் மறைக்கப்பட்டிருந்தன. இப்படி...

பரஸ்பரம் அவர்கள் பார்த்துக்கொண்டார்கள். வெகு நேரத்துக்கு அவர்களால் எதுவும் பேசவே இயலவில்லை.

மெள்ள மெள்ள சூரியன் மலை வாயிலில் வீழ்ந்தான். வேறுபாடுகளே இல்லாமல் செய்தபடி இருள் எங்கும் பரவியது. அவர்கள் எதையுமே அறிந்தவர்கள் அல்லர். கிராமத்தை அணைத்தவாறு செல்லும் நதியின் இரு பிரிவுகளையும், வெண்மைக் கிரணங்களில் மூழ்க்கடித்த வண்ணம் பூரண சந்திரன் குன்றின் உச்சியிலிருந்து எட்டிப் பார்த்தான்.

கிராமத்தின் மோனத்தைக் குலைத்தவாறு தொலைவில் எங்கோ ஓரிடத்திலிருந்து ஒரு காதல் கீதம் காற்றிலே மிதந்து வந்தது. யாரோ ஒரு காதலன், தனது காதலியை நினைந்து சோக இழையோடு இனிமையாகப் பாடிக்கொண்டிருந்தான் :

தாமரைப் பூங்காவிலே
தனியாக வசிப்பவளே !
பஞ்சவர்ணக் கிளி போல
பசுமை நிறம் படைத்தவளே !
பூமுகம் பார்த்த பின்னே
பூரிக்கும் கால மெதுவோ
காமினி அருகு வந்தாயோ
காலக் கேடும் தடுத்ததுவோ
தாமரைப் பூங்காவிலே
தனியாக வசிப்பவளே !

இப்படி மீண்டும் மீண்டும் அந்த முகம் தெரியாப் பாடகன் உருப் போட்டுக்கொண்டிருந்தான்.

இறுதியில் மஜீத் முணுமுணுத்தான் : "சுஹ்றா !" இறந்த காலத்தின் இதயத்திலிருந்து வருவதுபோல அந்த அழைப்புக் கேட்டது.

"ஓ !"

மஜீத் கேட்டான் : "உடம்புக்கு என்ன ?"

அவள் : "ஒண்ணுமில்லே."

"பின்னே ஏன் இவ்வளவு தூரம் பலஹீனமாயிருக்கறே ?" சுஹ்றா அதற்குப் பதிலளிக்கவில்லை. நீண்ட பெருமூச்சுடன் அவள் சொன்னாள் :

"நீங்க வந்திருக்கற விவரம் எனக்கு முந்தாநேத்துதான் தெரிஞ்சிது."

சற்றே சினம் பொங்க மஜீத் கேட்டான் :

"நான் திரும்பி வரவே மாட்டேன்னுதானே நீ நினைச்சே ?"

"எல்லாரும் அப்படித்தான் நினைச்சாங்க. நான்..."

"உம் ?"

"எனக்கு நிச்சயமாகத் தெரியும், நீங்க வருவீங்கன்னு."

"அப்புறம் ஏன்...?."

"எல்லாருமா முடிவு பண்ணிட்டாங்க. என்னுடைய சம்மதத்தை யாருமே கேக்கலே. உம்மா வயித்துலே நெருப்பைக் கட்டிக்கிட்டு இருந்தாங்க. என் வயசுப் பொண்ணுங்களுக்கெல்லாம் விவாக மாகி, எத்தினியோ வருஷங்க ஆயிட்டிருந்தது. பொன்னும் வர தட்சிணையும் இல்லாமே என்னை யாரும்..."

"பொன்னும் வரதட்சிணையும் வாங்கிக்காம, சுஹ்ராவைக் கலியாணம் செய்துக்கத் தயாரா ஒரு ஆம்பிளெகூட இல்லேன்னு சுஹ்ரா நம்பினது எதனுலே ?"

"எனக்கு நம்பிக்கை இல்லாம இல்லே. நான் ஒரு வினடிகூட மறக்காமத்தான் இருந்தேன். ஒவ்வொரு இரவும் ஒவ்வொரு பகலும், நான் நினைச்சு நினைச்சு அழுவேன். எந்த விதமான ஆபத்தோ, நோய் நொடியோ வராம இருக்கவேண்டி நான் ஆண்டவனை தினம் தினம் வேண்டிக்கிட்டே இருப்பேன்."

"நான் சுஹ்ராவை மறந்தே போயிட்டேன்னுதானே சுஹ்ரா நினைச்சே ?"

"அப்படின்னு நான் நினைக்கவே இல்லே. ஆனால் நீங்க ஏன் கடிதமே போடாம இருந்தீங்க ?"

"போடலே. அவ்வளவுதான். பல தடவை எழுதினேன். ஆனா அனுப்பலே."

"நான் தினமும் கடிதத்தை எதிர்பார்த்துக்கிட்டே இருப்பேன். இன்னிக்கு வரும். நாளைக்கு வரும்னு நினைச்சுக்கிட்டே இருந்தேன்."

"பின்னே எப்படி இந்தக் கலியாணம் நடந்திச்சி ?"

"அதான் முதல்லியே சொன்னேனே ! என்னை யாருமே கேக்கலே. அதோடகூட எத்தினி நாளுதான் வீட்டுக்குப் பாரமா இருந்துகிட்டு இருக்கறது ? நான் பொண்ணு இல்லே ?"

"...உம்...?"

"கடைசியிலே வீட்டையும் தோப்பையும் அடமானம் வெச்சு, பொன்னு, பணம் இதெல்லாம் கொடுத்து, கலியாணத்தை முடிச்சாங்க."

"ஆனா நீ ஏன் இப்படித் துரும்பா இருக்கறே ?"

சுஹ்ரா ஒன்றும் பேசவில்லே.

"சொல்லு சுஹ்றா? ஏன் இவ்வளவு மோசமா இளைச்சுப் போயிட்டே?."

"கவலையினாலே."

"என்ன கவலை?"

"...உம்...!"

"சுஹ்றா?"

"ஓ!"

"சொல்லு."

சுஹ்றா குமுறிக் குமுறி அழுதாள். பிறகு அவள் மெள்ள மெள்ளத் தன் கணவனைப் பற்றிக் கூறினாள்.

"ரொம்ப முன் கோபமுள்ளவரு. அவருக்கு வேறொரு மனைவியும், ரெண்டு குழந்தைகளும் இருக்கருங்க. நான் பிறந்த வீட்டுக்குப் போயி கணக்குப் பார்த்து என் பங்கு சொத்தைக் கண்டிப்பா வாங்கிட்டு வரணும்னு, அவரு சொல்லுவாரு. எனக்குத் தங்கைமார் இல்லையா? நான் என்ன செய்வேன்? நான் அதுக்குச் சம்மதிக்க லேன்னு, என்னை அடி அடின்னு அடிப்பாரு. ஒரு தடவை என் வயத்திலேயே ஓங்கி உதைச்சாரு. நான் கவுந்து விழுந்தேன். அன்னிக்கு என் பல் உடைஞ்சு போயிடுச்சு. இதப்பாருங்க..."

அவள் வாயைத் திறந்து காட்டினாள். அந்த வெண்மையான வரிசைகளிடையில் ஒரு காலி இடம்.

"சுஹ்றா!"

"ஓ!"

"அப்புறம்?"

"நான் அங்கே போனப்பறம், இது வரை வயிறு நிறையச் சாப்பிட்டதே கிடையாது. ஒரு நிமிடமாவது மன நிம்மதிங்கறதே கிடையாது. நான் ஒரு மனைவியே இல்லே. வெறும் வேலைக்காரி. தேங்காய் நாரை அடித்துக் கொடுத்துட்டு கூலி வாங்கி வந்து, அவரு கிட்ட கொடுக்கணும். பணம் கொஞ்சம் கொறஞ்சாலும் போச்சு; என்னை அடிக்க ஆரம்பிச்சிடுவாரு. நான் வீட்டுக்கு விலக்காகி இருந்தப்ப..."

"...உம்..."

"சேர்ந்தாப்போல நாலு நாளு"

"...உம்..."

"பட்டினி கிடக்கவேண்டியிருந்திச்சி."

இப்படியாகச் சுஹ்றா கொஞ்சம் கொஞ்சமாகச் சொல்லத் தொடங்கினாள். சொல்வதற்கு அவளுக்கு நிறைய விஷயங்கள் இருந்தன.

அவள் மனதில் நிறைய ரகசியங்கள் புதைந்து கிடந்தன. அவள் மனதில் செத்துப் போகணும்னு எண்ணம் பலமுறை ஏற்பட்ட துண்டு. ஆனால் ஒரே ஒரு ஆசை மட்டும்தான் அவளுக்கு இருந்தது; ஒரு தடவை, ஒரே ஒரு முறை வந்து பாத்துட்டு, அப்பாலே சாகணும்!

"சாவைப் பத்தியே சிந்திச்சுட்டு மனசை வீணாப் புண்ணாக்கிக் காதே. வாழ்க்கை முடிஞ்சு போகலே; இன்னமும் இருக்குது. ஒளிமயமான எதிர்காலம் உண்டுன்னு நம்பு" என்று மஜீத் சுஹ்ரா விடம் சொன்னபோது, நீண்ட பெருமூச்சு ஒன்றைத்தான் அவள் பதிலாக அளித்தாள்.

அவள் நாற்காலியின் முன்னால் அவனுடைய பாதங்களை அடுத்து அமர்ந்திருந்தாள். இவ்வாறு வெகுநேரம் அவர்கள் இருவரும், மௌனமாக, சந்திர ஒளியில் மூழ்கிக்கொண்டிருக்கும் உலகைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இறுதியாக மஜீது சொன்னான்:

"சுஹ்ரா, போய்ச் சாப்பிடு. மன அமைதியோடு தூங்கு. நாளை பார்க்கலாம்."

"என்னால் ஒண்ணுமே முடியவில்லை"—சுஹ்ரா எழுந்து கொண்டாள்.

"அவ்வளவு தளர்ச்சியா இருக்குதா?"—மஜீதும் எழுந்து கொண்டான்.

"மனோ வியாதி."

"வீணா அலட்டிக்காதே. போய் சொகம்மா தூங்கு."

"நாளை எங்காவது போவீங்களா?"

"இல்லே."

"நாளைக் காலேலே வறேன் என்ன!"

சுஹ்ரா போகத் தொடங்கினாள். மஜீத் சொன்னான்: "வா."

சுஹ்ரா நிலாவின் ஒளியில் மூழ்கியிருந்த தென்னைமரங்களினூடே செல்வதைப் பார்த்துக் கொண்டே, மஜீத் ஈஸிச்சேரில் சாய்ந்து கொண்டான். கையில் மண்ணெண்ணெய் விளக்குடன் உம்மா வந்தாள். மஜீத் மயங்கிச் சாய்ந்து கொண்டிருப்பதைக் கண்ட அந்த அன்புத்தாய் கேட்டாள்:

"ஏன் மகனே, நீ இங்கே தனியா இருக்கறே?"

"ஒண்ணுமில்லே."

"மகனே, அந்தச் சுஹ்ராவோட கோலத்தைப் பாத்தியா? கிளி போல இருந்த பொண்ணு எப்படியாயிடுச்சு. எல்லாம் ஆண்டவன் செயல்."

மஜீதுக்குக் கோபமும் துக்கமும் ஒருசேர வந்தன : "அவளுக்கு இந்த நிலை ஏற்பட்டது எதனுலே?"

"மகனே, நீ ஏதாவது சாப்பிட்டுட்டுப் போயி படுத்துக்க. எதுக்காகவும் விசனப்படாதே. படைச்சவன் எல்லாத்தையும் சரி பண்ணுவான்."

மஜீத் அன்றிரவு உறங்கவில்லை. சுஹ்ராவும் உறங்கவில்லை. தோப்புக்களும் கால்வாயும் அவர்களுக்கிடையே இருந்தன. இரு பெரும் சுவர்களும் அவர்களது மத்தியில் இருந்தன... இருந்தாலும் அவர்கள் தூங்கவில்லை. வருங்காலம் பற்றிய சிந்தனையில் மூழ்கியிருந்தார்கள். வருங்காலம்...!

# 10

வெகு சீக்கிரத்திலேயே சுஹ்ராவிடம் மாறுதல்கள் தோன்ற வாரம்பித்தன. உள்ளத்தில் ஒரு புதிய ஒளி. முகத்தில் ரத்த ஓட்டமும் கண்களில் தீட்சண்யமும் ஏற்பட்டன. தலையில் வகிடு எடுத்து சுருண்ட கரும் கூந்தலை அழகாகச் சீவி, காதுகளை மூடிக் கொண்டை போட்டுக் கொள்வாள். அண்டை அயல் வீட்டுப் பெண்கள் வியப்படைவார்கள்.

"சுஹ்ரா வந்துக்கு இப்ப ரொம்பத் தேறிட்டா. இப்ப அவ திரும்பிப் போனு அவ புருசனுக்கே அவளை அடையாளம் தெரியாது!"

கணவன்!

அவள் எப்போதும் மஜீன் வீட்டிலேயேதான் இருந்து வந்தாள். செடிகளுக்குத் தண்ணீர் விடும் விஷயத்தில் அவளும் அக்கறை காட்டி வந்தாள். மஜீதின் சகோதரிகள் சொல்லுவார்கள் : "இந்தச் செடிங்களை யெல்லாம் தண்ணீர்விட்டு வளர்த்தது நாங்கதான் தெரியுமா?"

சுஹ்ரா அந்தச் செம்பருத்தி மரத்தை சுட்டிக்காட்டிக் கேட்பாள் : "இது?"

"இது முதல்லேருந்தே இங்கே இருக்குதே!"

சுஹ்றா அதை ஆட்சேபிக்கமாட்டாள்! முதல்லேருந்தே எல்லாம் அங்கு இருக்கத்தானே செய்தன.

ஒரு நாள் மஜீத் அவளிடம் கேட்டான்: "சுஹ்றா! திரும்பி எப்ப போகப்போறே?"

அவளுக்கு விளங்கவில்லை.

அவள் வியப்போடு கேட்டாள்:

"எங்கே?"

"புருஷன் வீட்டுக்கு."

"ஓ!"

அவளது முகம் சுருங்கியது. "அவரு என்னைக் கலியாணம் செய்துக்கிடலியே?..."

"பின்னே?"

"நான் எங்கூட கொண்டுபோன தங்க நகைங்களையும் சொத்தில் எனக்குள்ள பங்கையும் தான். இதிலே, தங்க நகைங்களையெல்லாம் அவரு வித்து சாப்பிட்டுட்டாரு. இனிமே பாக்கியிருக்கறது என் பங்கு சொத்துதான். ஆனல், அது கிடைக்க வழியில்லேன்னு அவருக்கே நல்லாத் தெரியும்." சிறிது பொறுத்து, அவள் மிகவும் தாழ்ந்த குரலில் கூறினாள்: "ஆனா இந்த கிராமத்து சனங்களுக்கு என்னெப் பார்க்கப் பிடிக்கலேன்னு நான் போயிடறேன்!"

"சனங்களுக்கிடையே அப்படி ஏதாவது கருத்து நிலவுதா என்ன?"

"நிலவுது போலத்தான் தோணுது."

அவள் அழகிய ஒரு ரோஜா மலரைப் பறித்து முகர்ந்துவிட்டு தலையில் செருகிக் கொண்டாள்.

மஜீத் சொன்னான்: "அந்தச் செம்பருத்திப் பூவாக இருந்தால் அதிகம் பொருத்தமாக இருந்திருக்கும்." இதைக் கேட்டுச் சுஹ்றா சிரித்தாள். ஆயினும் அவளுடைய முகத்தில் துயரத்தின் சாயை படர்ந்தது. சற்று நேரம் கழித்து அவள் கேட்டாள்:

"இந்தச் செம்பெருத்தி—நினைவிருக்கிறதா?"

மஜீத் சொன்னான்: "கேட்டிருக்கறேன்."

"அப்படியானா 'கொஞ்சம் பெரிய ஒன்று' பத்தியும் கேட்டிருப்பீங்களே?"

"ஆமாம். 'அரசகுமாரி' சொல்லிக் கேட்டிருக்கிறேன்!"

அவர்கள் இருவருக்குமிடையே மிகவும் நெருக்கம் ஏற்பட்டது என்றாலும் மஜீதின் வாழ்க்கையில் "7 வருடங்கள்" பற்றி அவள் எதுவும் அறிந்தவள் அல்லள். அந்த ரகசியங்களுக்குள் ஊடுருவிச்

செல்ல அவள் விரும்பினாள். எல்லாவற்றையுமே அறிந்து கொள்ள வேண்டும். அவனுக்கு அறிமுகமான ஆண் பெண் ஒவ்வொருவர் பற்றியும், விவரங்களை அவள் கேட்டறிந்தாள். பெண்களைப்பற்றிச் சொல்லும்போது சுஹ்ரா கேட்பாள்: "அவளுக்கு என்ன வயசு? நிறம் எப்படி? அழகியா? அவளைப்பத்தி அடிக்கடி நினைக்கறிங்களோ?"

மஜீத் எல்லாவற்றுக்குமே பதில் அளிப்பான். இருந்தாலும் அவளுக்குத் திருப்தியே ஏற்படாது. மஜீத் சொல்லாமல் விட்டுவிட்ட விஷயம் ஏதாவது இருக்குமோ?

"எங்கிட்ட—என்கிட்டெ, நிசத்தை மட்டும்தான் சொல்லணும்—தெரியுதா?"

மஜீத் சிரித்துக் கொண்டே சொல்லுவான்:

"நல்ல பொண்ணு போ!"

"பையா!"

அவள் புருவத்தை உயர்த்துவாள். பிறகு பிறாண்டுவதற்காக கைகளை நீட்டியவாறே முன்னேறுவாள். பிறகு சிரித்துவிடுவாள்.

வெண்மையான அழகிய முத்துப்போன்ற பற்களுக்கிடையே உள்ள அந்தக் கறுப்பான காலி இடம், தேய்ந்து போயுள்ள அந்தக் கை நகங்கள் பிறாண்ட வரும் அந்தப் பழைய பாவனை—மஜீதின் இதயத்தை மூடியிருக்கும் லேசான தோலைக் கூர்மையான ஒரு கருவி கொண்டு வலுவோடு தேய்ப்பது போல...

"இந்த மஜீதுக்கும் சுஹ்ராவுக்குமிடையே என்ன விஷயம்?" அக்கம் பக்கத்து வீட்டவர்களுக்கு அறிந்தாகணும். "அந்தப் பொண்ணு புருசங்காரன் வூட்டுக்கு இன்னும் ஏன் போகலே? உம், இதெல்லாம் ஆண்டவனுக்குப் பொறுக்காது!"

மஜீதும் சுஹ்ராவும் பரஸ்பரம் தங்களுக்கிடையே பேசிக்கொள்வது பண்பாட்டுக்கு முரணான செயல். "ஆகாயம் இடிந்து விழுந்துடாது? அவளோட புருசன் அடிச்சுப் போட்டா என்ன வந்திடுச்சாம்? ஒரு வாட்டி அடிக்கறபோது பல்லு போயிருக்கும். இருந்தாலும் கட்டியவனில்லே?"

"சுஹ்ரா!" ஒரு நாள் மஜீத் சொன்னான்: "நம்மைப் பத்தி அக்கம் பக்கத்து வீட்டுக்காரங்க என்னென்னமோ பேசிக்கறாங்க!"

"அதுக்காக?"

"ஒண்ணுமில்லே. சுஹ்ரா, சாக்கிரதையா இருக்கணும். பெண்ணுல்லே! பெயருக்குக் களங்கம் ஏதும் உண்டாகாமே பார்த்துக்கணும்."

"ஓ! எனக்குக் களங்கம் ஏற்படட்டும்! என் ஆன்மாவுக்கும் களங்கம் ஏற்படட்டும். வேறே எங்கேயும் இல்லையே?"

அவளுடைய கண்கள் நிறைந்தன. உடனே ஏதாவது சொல்லியாக வேண்டும் என்று மஜீதுக்குத் தோன்றியது. சுஹ்ராவைப் பற்றிய முடிவு அது. ஆனால் எப்படிச் சொல்வது?

சுஹ்ராவுக்குக் கொடுப்பதற்கு அவனிடம் ஏதேனும் இருக்கிறதா? ......வீடில்லை. சம்பாத்யமும் கிடையாது. அவன் சொன்னான்: "சுஹ்ரா, உன் புருஷன் வீட்டுக்கு இனிமே போகவேணும்."

"இல்லே."

மஜீத் உம்மாவிடம் விவரங்களைச் சொன்னான். வெகு நேரத்துக்கு அவள் ஏதுமே பதிலளிக்கவில்லை. இறுதியில் உம்மா தன் கருத்தை வெளியிட்டாள். மஜீத் சுஹ்ராவை மணந்து கொள்வது நல்லது தான். ஆனால் மஜீதின் இரு சகோதரிகள், மணப்பருவத்தை கடந்து நிற்கிறார்களே?

"நம்மகிட்ட காசு பணமேதுமில்லேதான். ஆனாலும் மானம் மரியாதை பார்க்க வேணுமா? என் மவன் எங்கனாச்சியும் போயி 'மாப்பிள்ளை தேடிக் கொண்டாரணும். கொஞ்சம் பொன்னும் பணமும் சேர்க்கணும். சீதனம் கொடுக்கணுமல்ல? இந்த ரெண்டு பொண்ணுங்களையும் யாரு கையிலாச்சும் ஒப்படைச்சுட்டு, பிறவு என் மவன் கல்யாணம் கட்டிக்கிடலாம்!"

மாப்பிள்ளை தேடிப் பிடிச்சாப் பத்தாது; பொன்னும் சீதனமும் கொடுக்கறதுக்கான வழியும் கண்டுபிடிக்கணும். மஜீத் கேட்டான்: "சீதனம் வாங்கிக்காம யாரும் கலியாணம் செஞ்சுக்கிட மாட்டாங்களா?"

"யாரு இருக்காங்க மவனே? இல்லாட்டிப் போனா, ஏதாவது கூலிக்காரனோ கிறிஸ்தவனா மாறினவனோதான் கிடைப்பான். நமக்கு அது போதுமா?...காதிலும் கழுத்திலும் இடுப்புக்குமாவது பொன்னு பூட்டித்தான் அனுப்பணும்!"

மஜீதின் சகோதரிகளின் நான்கு காதுகளிலுமாக மொத்தம் 42 துளைகள் இருக்கின்றன. அநாவசியமாக ஏன் இவ்வாறு குத்தித் துளையிடவேண்டும்? கழுத்திலும் இடுப்பிலும் பொன்னாபரணம் பூட்டிக் கொள்ளாவிட்டால் குடியா முழுகிவிடும்? சீதனம் என்பதே இல்லாமல் இருக்குமானால்!......

"உம்மா! இந்தக் காது குத்து இதெல்லாம் இல்லாம இருந்தா எவ்வளவு நல்லா இருந்திருக்கும்! நம்ம சமூகத்திலே மட்டும்தான்

இந்த அசிங்கமான ஏற்பாடுங்க—அசிங்கம் பிடிச்ச வரதட்சிணே, விசித்திரமான ஆடை ஆபரணங்க......!''

உம்மாவும் வாப்பாவும் எதுவுமே சொல்லவில்லே. தொடர்ந்து மஜீத் கேட்கவுமில்லே. அவர்களேக் குறை சொல்லி என்ன பயன்? அந்தத் தலேமுறையின் பழக்கவழக்கங்களுக்கு ஏற்ப அவர்கள் அதையெல்லாம் செய்தார்கள். அது அவசியமா? அனுவசியமா? என்றெல்லாம் அவர்கள் யோசித்துப் பார்க்கவேயில்லே. வழிவழி வந்த ஆசாரங்களிலிருந்தும் பழக்க வழக்கங்களிலிருந்தும் அணுவளவேனும் பிசகி நடப்பது என்பது சிரமம்தான். ஆனுல் அதற்குத் தேவையான சூழ்நிலே இப்போது இல்லேயே.

மஜீதுக்கு இரவு உறக்கம் என்பதே இல்லாமல் போய்விட்டது. எப்போதும் சிந்தனேதான். சகோதரிகளே எப்படியாவது நல்ல முறையில் திருமணம் செய்து கொடுக்கவேண்டும்......இளமையின் முழுமையோடு அவர்கள் உள்ளனர். ஆசைகளும் இச்சைகளும் அவர்களுக்கு இருக்கின்றன...உடுக்க உடைகளில்லே; உண்ணவும் ......; பலவீனத்தைத் தோற்றுவிக்கக்கூடிய நிமிடங்கள் பல இருக்கத்தானே செய்கின்றன? தவருன பாதையில் ஓரடி வைத்தாலும்...?

மஜீதின் கவலேகள் அதிகமாயின. பல காரியங்களேச் செய்து முடிக்கவேண்டும் என்று அவன் விரும்பினுன். வீட்டின் மேல் உள்ள கடனேத் தீர்க்கவேண்டும். சகோதரிகளேத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும். பெற்ருேருக்கு மகிழ்ச்சியளிக்கக்கூடிய காரியங்களேச் செய்து முடிக்கவேண்டும். அவர்கள் வயதானவர்கள்; எந்த நிமிடமும் மரணத்தின் பிடியில் அவர்கள் சிக்கிக் கொள்ளக் கூடும். அவர்களுடைய வாழ்க்கையைச் சுகம் நிரம்பியதாகச் செய்ய வேண்டும்.

சுஹ்ராவைக் கலியாணம் செய்துகொள்ளவேண்டும். பிறகு அவளுடைய சகோதரிகளும் தாயும் உள்ளனர்; அவர்களுக்கும் ஏதாவது ஒரு வழி பிறக்க வகை செய்யவேண்டும். ஆனுல் என்ன செய்வது? எல்லாவற்றுக்குமே பணம் வேண்டுமே? எதையாவது ஒன்றைத் தொடங்கினுல் அதைத் தொடர்ந்து போய்ச் செய்ய முடியும். ஆயினும் எந்த ஒரு பணியையும் துவக்குவதில் தானே சிரமம்! கையில் பணமில்லாமலும் உதவிக்கு யாருமே இல்லாமலும் இந்த உலகத்தில் எவரும் எதையும் செய்தது கிடையாது.

ஆனுல் உம்மாவின் கருத்து வேருக இருந்தது. தொலேவில் உள்ள நகரங்களில் தயாள குணமுள்ள முஸ்லிம் செல்வந்தர்கள், நிறையப் பேர் இருக்கிருர்கள். இவர்கள் சமுதாய வளர்ச்சிக்கென பற்பல

நல்ல காரியங்களைச் செய்து வருகிறார்கள். திக்கற்ற அனாதை யுவதிகளுக்கு மணம் செய்து வைத்தல், வேலையில்லாதோருக்கு வேலை தேடித்தருதல், இலவசக் கல்வி போதனைக்கெனப் பள்ளிக்கூடங்களை அமைத்தல், அகதிகளையும் உடல் ஊனமுற்றோரையும் வைத்துப் பராமரிப்பதற்கான அனாதை இல்லங்களை நிறுவுதல்—இப்படியாகப் பல நற்பணிகளை அவர்கள் செய்து வருகிறார்கள் என்று உம்மா சொன்னாள். "மவனே, நம்ம நிலைமை அவங்களுக்குத் தெரிஞ்சாப் போதும். மிச்சமெல்லாம் அவங்களே பாத்துக்கிடுவாங்க. எனக்கு நல்ல நம்பிக்கை இருக்குது. அந்தப் பக்கிரி தான் எல்லாம் சொன்னானே!"

ஏதோ ஒரு வழிப்போக்கன் இப்படிச் சொல்லி வைத்திருக்கிறான். 'தொலைதூரமுள்ள நகரங்களில் செல்வந்தர்களெல்லோரும் உதார குணமுள்ளவர்கள்' என்று!

அச்சமும் திகிலும் சூழ மஜீத் புறப்படத் தயாரானான். எங்காவது சென்று ஏதாவதொரு வேலையில் அமர்ந்தே ஆகவேண்டும்.

"நான் போயிட்டு சீக்கிரமா வந்திடறேன்"—மஜீத் சுஹ்ராவிடம் விவரமெல்லாம் சொன்னான்: "நான் எல்லோரையும் உங்கையிலே தான் ஒப்படைச்சுட்டுப் போறேன்!"

"நீங்க வர்றதுவரை, நான் பத்திரமாய் பாத்துக்கறேன். கவலைப் படாதீங்க"—சுஹ்ரா பொறுப்பேற்றாள். மஜீத் உறுதியான ஒரு நோக்கத்தோடு புறப்படலானான்.

ஒரு நாள் மாலையில் மேற்குத்திசை தொடுவானத்தில் தங்க மேகங்கள் மின்னிக் கொண்டிருந்தன. அவனுடைய பெட்டி படுக்கைகளைச் சுமந்துகொண்டு ஒரு பையன் பஸ் ஸ்டாண்டுக்குச் சென்றான். மஜீத் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டான்.

வாப்பா சொன்னார்: "எனக்குக் கண்பார்வை மங்கிக்கிட்டே போகுது. ஒரு மூக்குக் கண்ணாடி வாங்கிட்டு வரயா?— இல்லே!"

"கொண்டு வறேன்" என்று சொன்ன மஜீது தன்னுடைய அறைக்குள் சென்றான். நீர் நிறைந்த கண்களுடன் சுஹ்ரா மகிழ்ச்சியுடன் நின்று கொண்டிருந்தாள்.

"ஒண்ணு சொல்லட்டுமா?"—அவள் சொன்னாள்.

மஜீத் முறுவல் பூத்தான்.

"சொல்லு, அரசகுமாரி, சொல்லு."

"வந்து——"

மேற்கொண்டு வாக்கியத்தை பூர்த்தி செய்ய இயலவில்லே ; அந்தச் சமயத்தில் மோட்டார் காரின் ஹார்ன் ஒலி கேட்டது. உம்மா வாயிற்படியில் தோன்றினுள்.

" மவனே, சீக்கிரமாப் போ. வண்டி போயிடும் ! "

மஜீத் இறங்க எண்ணினுன். சுஹ்ராவுடைய கண்கள் நிறைந்து நீர் தாரை தாரையாக ஓடியது. மஜீத் கேட்டான் :

" நான் போய் வரட்டுமா ? "

அவள் சிரம் தாழ்த்தி அனுமதி தந்தாள்.

புதிர் நிறைந்த வருங்காலத்தை எதிர்நோக்கி மஜீத் இறங்கினுன். வாயிற்படிக்குச் சென்றபோது தான் கண்ட சுஹ்ராவின் நிலேயும் வீட்டின் தோற்றமும் மனதிலிருந்து ஒருக்காலும் அழியாத சித்திரங்களாகப் பதிந்துவிட்டன.

பல மாதங்களுக்குப் பிறகும் அந்தச் சித்திரம்தான் மஜீதின் கண் முன்னே ஓடியது.

## 11

சுஹ்ராவைத் திருமணம் செய்துகொள்வது, அதற்கு முன்பாக சகோதரிகளுக்குக் கணவன்மார்களேத் தேடிக் கண்டுபிடிப்பது, சீதனத்துக்கும் ஆபரணங்களுக்கும் தேவையான தொகை சேர்ப்பது ஆகியவற்றுக்கு ஏதாவது ஒரு வேலே செய்தே ஆகவேண்டும். ஆனுல்... நிராசைதான் அவனே எதிர்கொண்டழைத்தது. எங்குமே வேலே கிடைக்கவில்லே. வேலே காலி இருந்தாலும் சிபார்சுக்கு ஆள் தேவையாயிருந்தது. லஞ்சம் கொடுக்க வேண்டியிருந்தது. பரீட்சை பாஸ் செய்த சர்டிபிகேட் தேவையாக இருந்தது. இவை எதுவுமில்லாமல் வேலே கிடைப்பது சுலபமான காரியமல்ல. இருந்தாலும் அவன் அயராமல் முயன்றுகொண்டேயிருந்தான். பல நகரங்களிலும் சுற்றிச் சுற்றி அலேந்தான். சொந்த ஊரிலிருந்து 1500 மைல் தொலேவில் உள்ள பெரும் பட்டினம் ஒன்றை, மஜீத் சென்றடைந்தான். இதற்கிடையே நான்கு மாதங்கள் ஓடி விட்டன.

அங்கு அவனுக்கு ஒரு வேலை கிடைத்தது. சிரமமான வேலையல்ல. வருமானமும் கூடுதலாகவே கிடைத்தது. ஓய்வின்றி உழைத்தால் போதும். நூறு ரூபாய்க்கு 40 ரூபாய் விதம் கமிஷன் கிடைக்கும். கம்பெனிச் சொந்தக்காரனே உறுதிமொழி அளித்திருந்தான்.

கம்பெனிச் செலவில் சைக்கிள் உண்டு; அதில் சாம்பிள்களை ஏற்றிச் சென்றால் போதும். கம்பெனிக் கட்டடத்திலேயே, இருக்க இடமும் கிடைத்தது.

இப்படியாக மஜீத் வேலைக்குச் செல்லவாரம்பித்தான். சிறிய ஒரு தோல் பெட்டியில் சாம்பிள்களை அடுக்கி வைத்துக்கொண்டு, ஆர்டர் புத்தகங்களையும் எடுத்துக்கொண்டு அவன் சைக்கிளில் கிளம்புவான். நகரமெல்லாம் சுற்றி ஆர்டர்களைப் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சி பொங்க அந்தியில் அவன் இருப்பிடம் திரும்புவான்.

இப்படி ஒரு மாதம் ஓடிற்று. சகல செலவும் போக, மஜீத் வீட்டுக்கு நூறு ரூபாய் அனுப்பிக் கொடுத்தான். வாப்பாவுக்கு வெள்ளெழுத்துக் கண்ணாடியும், சுஹ்ராவுக்கும் மற்றவர்களுக்கும் உடைகளுக்கான தொகையும்கூட அவன் அனுப்பியிருந்தான்.

மற்றும் ஒரு மாதம் ஓடியது. அடுத்து வருங்காலத்தில் என்ன ஏற்படப் போகிறது என்பது யாருக்குமே நிச்சயமில்லையல்லவா? கெடுதல்களை யாருமே எதிர்பார்ப்பது கிடையாது. மஜீத் எதையும் எதிர்பார்க்கவில்லை. ஆயினும் எதிர்பாராத வகையில் திடீரென நடக்கக்கூடாத ஒரு சம்பவம் நடந்துவிட்டது.

அன்று திங்கட்கிழமை; மஜீதுக்கு நன்றாக நினைவிருக்கிறது; நல்ல உச்சி வேளை. வழக்கம்போல சூட்கேஸை சைக்கிளின் விளக்கு மாட்டும் கொக்கியில் மாட்டிவிட்டு, கடலோரம் உள்ள தார் போட்ட ஜன சந்தடியில்லாத பாதை வழியே அவன் போய்க் கொண்டிருந்தான். செங்குத்தான இறக்கம் ஒன்று அங்கு உண்டு. நல்ல வேகத்தோடு அவன் சைக்கிளை ஓட்டி வந்தான். பெட்டி குலுங்கிக் குலுங்கி, அதன் பிடிவிட்டு சக்கரத்தினிடையே சிக்குண்டு வீழ்ந்தது. மஜீத் சைக்கிளிலிருந்து கம்பி அழிகளில் தூக்கியெறியப் பட்டு கீழேயிருந்த ஆழமான சாக்கடையில்...

குன்று ஒன்று, உடலின்மேல் இடிந்து வீழ்ந்ததுபோல, ஏதோ ஒடிந்து விழுந்த வலியுடன் உள்ள ஒரு நினைவு. தன்னிடமிருந்து எதுவோ அறுத்துத் துண்டிக்கப்பட்டு மாற்றப்பட்டுள்ளது. எல்லாமே இருளில் மறைந்து விடுகின்றன... எல்லாமே, மறதி என்னும் இருளில்...

புயல் வீசும் இரவிலே தோன்றும் இடி மின்னல்போல எப்போதாவது நினைவின் வெளிச்சம் தெரியும்... தாங்கவியலாத் வலி... மருந்துகளுடைய நெடி, ஆட்கள் வேதனை தாளாமல் அரற்றும் ஒலி... உயிருள்ள நீண்டு உருண்ட ஏதோ ஒன்று, வாயின் வழியாகத் தொண்டைக்குள்ளே இறங்குகிறது. வயிற்றில் சூடான திராவகம் நிறைகிறது... இப்படியெல்லாம் ஒரு தோற்றம்... இத்தகைய அனுபவங்களிலேயே யுகங்கள் கழிந்து கொண்டிருக்கின்றன!

நினைவுகள் தொலைவிலேயே உள்ளன. எதுவும் தெளிவாக இல்லை. வெண்மையான புகைபோல, வெண் மேகங்களைப்போல நினைவுகள், மஜீதிடமிருந்து தொலைவில், மிகமிகத் தொலைவில் செல்லத் தொடங்குகின்றன. எல்லாமே மறதியில் சென்று மறையப் போகின்றனவோ?

இல்லை! வாழ வேண்டும்!... வாழ்க்கை! தாங்கவொண்ணு எரிச்சலும் வேதனையும்... ஆயினும் வாழ வேண்டும்! மஜீத் முயற்சி செய்தான், தன்மீது அமர்ந்துள்ள மறதி என்னும் குன்றை, முழு வலுவையும் பிரயோகித்துக் தூக்கிக் கவிழ்ப்பதுபோல... வலியுடன் கூட நினைவும் தெளிவாக வர ஆரம்பித்தது.

அவன் நீண்ட பெருமூச்சு விட்டான். மெதுவாகக் கண்களைத் திறந்தான். நீண்டு நிமிர்ந்தவாறு கிடந்தான் அவன். கழுத்துவரை வெள்ளைப் போர்வை ஒன்று போர்த்தப்பட்டிருந்தது... ஆஸ்பத்திரி! அவனுக்கு நினைவு திரும்பிவிட்டது.

தீவிரமான தாங்கவொண்ணுத வலி! வலது நெற்றியில் தீப்பற்றி யெறிவதுபோல... விண்விண்ணென்று மண்டைவரை வேதனை, வலி... கையால் தடவினன். இடுப்பில் நிறையத் துணிகள் சுற்றிக் கட்டப்பட்டுள்ளன.

மஜீத் வலது காலைத் தேடிப் பார்த்தான். எலும்புகளினூடே ஒரு ஜில்லிப்பு ஊடுருவிப் பாய்ந்தது.

சூன்யம்!

அவனுக்கு பிரமிப்பு! வியர்த்துக் கொட்டியது. நினைவு மங்குவது போல் தோன்றியது. தனது வலது காலின் ஒரு பகுதி என்றென்றைக்குமாக விடுபட்டுப் போயுள்ளது! படுத்தபடியே ஆழம் காணவியலாத ஒரு குழிக்குள் வீழ்ந்துவிட்டதுபோல. உலகமெல்லாம் சுற்றுகின்றதோ?

அவன் மறுபடியும் தேடிப் பார்த்தான். வெறுமை! கீழே ஒன்றுமிருக்கவில்லை. சகிக்க முடியாத வேதனை! சுஹ்ரா முதல் முத்தம் ஈந்த வலது கால்! ஐயோ அது எங்கே போயிற்று!

கண்கள் திறந்திருந்தன. கன்னங்களின் வழியே சூடான நீர் ஓடிக்கொண்டேயிருந்தது. படுக்கையின் அருகே டாக்டரும் நர்ஸும் கம்பெனி மானேஜரும் வந்தார்கள்.

மஜீதின் நெற்றியில் தண்ணென்ற தமது கையை வைத்தபடி கம்பெனி மானேஜர் மெதுவாகக் குனிந்தார். "மிஸ்டர் மஜீத், நான் மிகமிக வேதனைப்படுகிறேன். நீங்கள் வருத்தப்படலாகாது."

"சுஹ்றா!"

"என்ன மஜீத்?"

"நீ ஏன் 'உம்' கொட்டலே?"

"நான் 'உம்' போட்டுகிட்டுத்தானே இருக்கறேன்! ஆமாம், பையன் ஏன் என்னை 'நீ'ன்னு கூப்பிடறே?"

மஜீத் துடித்தான். 'சுஹ்றா!' என்று அலறியவாறே திடுக்கிட்டு விழித்துக்கொண்டான்.

64 பகல்களும் 64 இரவுகளும் கழிந்தன. தன்னைவிட உயரமானதொரு கைத்தடியின் உதவியோடு மஜீத், கம்பெனி மானேஜர் உடன்வர, ஆஸ்பத்திரியின் கேட்டைக் கடந்து மக்கட் கும்பல் நிறைந்த தெரு வீதிக்கு வந்தான். கம்பெனி மானேஜர் மஜீதிடம் 50 ரூபாய் கொடுத்துவிட்டுச் சொன்னார்:

"இனிமே நீங்க ஊரிலே உங்க வீடுபோய்ச் சேர்ந்திடுங்க. உங்களுக்கு இப்படி ஒரு நிலைமை ஏற்பட்டது கண்டு நான் ரொம்ப விசனப்படறேன்."

மஜீத் வாய்விட்டு அழுதான்; அவன் சொன்னான்:

"என் சகோதரீங்க திருமணப் பருவம் கடந்தும் வீட்டிலேயே இருந்துகிட்டு இருக்கறுங்க. பெத்தவங்களுக்கு ரொம்ப வயசாயிடுச்சி. இருந்த சொத்துகளெல்லாம் கடனிலே மூழ்கிக் கிடக்குதுங்க. என்னைப் பெத்தவங்களுக்கு நான் ஒரே ஒரு ஆம்புளப் புள்ளெதாங்க. வீட்டுக் கஷ்டங்களுக்கு ஒரு பரிகாரம் தேடாம, அங்கே போறதுக்கு எனக்கு விருப்பமில்லே. அதோட இப்படி ஒரு நொண்டிக் கோலத் தோடே நான் அங்கே போயி அவங்களுக்கு ஒரு பாரமா இருப்பானேன்?"

"இனிமே என்ன செய்யறதா உத்தேசம்?"

"எனக்கே நிச்சயமா ஒண்ணும் தெரியலே."

"என் கம்பெனியிலே உங்களுக்குத் தகுந்த மாதிரி—உங்களாலே கிளார்க் வேலை செய்ய முடியுமா?."

"முடியாதுங்க. நான் கணக்கிலே ரொம்ப மோசமுங்க."

இப்படியாக மஜீத் மீண்டும் தனித்து விடப்பட்டான். அவன் 40 ரூபாய், வீட்டுக்கு அனுப்பினுன். கூடவே ஒரு கடிதமும். வலது காலே இழந்த விவரத்தை அவன் குறிப்பிடவேயில்லே. "உடம்பு சுக மில்லாமே இருந்தேன். அடுத்த கடிதம் கிடைக்கும் வரை கடிதம் ஏதும் அனுப்ப வேண்டாம்" என்று மட்டுமே அதில் எழுதி யிருந்தான்.

மஜீத் மீண்டும் வேலே தேடும் முயற்சியைத் துவக்கினுன். இரண்டு கைகளாலும் தடியை ஊன்றிப் பிடித்துக்கொண்டு, ஒற்றைக்காலில் சாய்ந்தவாறு குதித்து குதித்து...நாலடி வைத்ததும் நிற்பான்......மறுபடியும் நடப்பான். இப்படியே ஓரிரு மாதங்கள் கழிந்தன. நிலேயாக ஓரிடத்திலும் தங்கவில்லே. கிடைத்தவிடங் களில் படுப்பான்.

இறுதியில் நகரத்தில் உள்ள தனிகர்களேப் பார்த்து உதவி கோரலாம் என்று கருதி விசாரித்ததில், ஒரு கான் பகதூர்தான் மிகவும் தயாள குணமுடையவர் என்று கேள்விப்பட்டான். நகரத்தில் உள்ள மிகப்பெரும் மாளிகைகள் யாவும் அவருடையது தானும். தங்கக் கட்டிகளும் மற்றவைகளும் அவருடைய நிலவறையில் பூஞ்சக்காளன் பிடித்துக்கொண்டு கிடப்பதாக மக்கள் பேசிக் கொண்டார்கள். சர்க்காரில் செல்வாக்குள்ள ஆசாமி அவர். சமீபத் தில்தான் பத்தாயிரக்கணக்கில் ரூபாய் செலவழித்து அவர் கவர்ன ருக்கு ஒரு விருந்து கொடுத்திருந்தார். அவரால் எதுவும் சாத்தியம்... எதுவும்!

ஆனல் வாயில் காவலர் மஜீதை உள்ளே விடவில்லே. தினமும் அவன் அந்த மாளிகை வாயிலில் போய் நிற்பான். இப்படியாக ஒரு வாரம் சென்றது. இறுதியில் காவலாளிகளுக்கே அவன்மீது இரக்க மேற்பட்டது. கான் பகதூரின் சன்னிதானத்துக்கு அவன் அழைத்துச் செல்லப்பபட்டான். மஜீத் சலாம் வைத்தான். ஒரு முஸல்மான் மற்ருெரு முஸல்மானேப் பார்த்தால் 'அஸலாமு அலேகும்' என்று சொல்லவேண்டும் என்று இருக்கிறது. மஜீத் சொன்னுன். ஆனல் கான் பகதூர் என்ன காரணத்தாலோ தெரிய வில்லே, சலாம் திருப்பவில்லே. அது காதில் விழுந்ததாகக் கூட அவர் காட்டிக்கொள்ளவில்லே. கான் பகதூருக்கு சுமார் 50 வயது இருக்கும். வெள்ளே வெளேர் என்று உருண்டு திரண்ட உடல்வாகுடன் அவர் காணப்பட்டார். கல் பதிக்கப்பெற்ற தங்க மோதிரங்கள் மினுக்க, தாடியைத் தடவியவாறே மஜீதின் துயரமிகு கதை முழுவதையும் 'உம்' கொட்டிக்கொண்டு அவர் செவி

மறுத்தார். கடைசியில் கான் பகதூர் சொன்னார்: "நம்முடைய சமுதாயத்தில் திருமணத்துக்கு வழியற்ற பெண்கள் நிறையப்பேர் இருக்கிறார்கள். உணவுக்கு வழியில்லாதவர்களும் நிறையப் பேர் உள்ளனர். என்றால் சாத்யமானவைகளை யெல்லாம் நான் எப்போதுமே, எல்லோருக்குமே செய்து வருகிறேன். சொல்? இதற்கு மேல் நான் வேறென்ன செய்ய முடியும்?"

மஜீத் எதுவும் சொல்லவில்லை.

சமுதாய முன்னேற்றத்துக்கென, கான் பகதூர் தான் செய்திருக்கும் மகத்தான காரியங்களையெல்லாம் விவரமாகச் சொன்னார். அவர் 4 பள்ளிவாசல்களை நிறுவியுள்ளார். ஏனைய கோடீஸ்வரர்கள் எல்லோரும் ஒவ்வொரு பள்ளிவாசல் வீதம்தான், கட்டியுள்ளனர். இதுவும் போதாமல் அவர் ஒரு பள்ளிக்கூடம் கட்டுவதற்கென சமுதாயத்துக்கு, ஓர் இடத்தையே தானமாக வழங்கியுள்ளார். அங்கு ஒரு கட்டடம் கட்டி வாடகைக்கு விட்டிருந்தால், அவருக்கு மாதம் தோறும் நிறைய வாடகை கிடைத்திருக்கும் அல்லவா? சமுதாயத்துக்காக, ஒவ்வொரு ஆண்டும் எவ்வளவு பணம் என்று நஷ்டப்படுவது?

"இதற்கும் மேல் நான் செய்ய வேண்டியது ஏதாவது இருக்கிறதா? சொல்?"

மஜீத் ஒன்றுமே பேசவில்லை.

கான் பகதூர், மஜீதின் கால் ஊனமாகி விட்டதற்காகவும், தமது அனுதாபத்தைக் தெரிவித்துக் கொண்டார். "விதி! அல்லாமல் வேறு என்ன சொல்லுவது?"

மஜீத் பேசவேயில்லை. அவன் அந்த நீண்ட தடியை ஊன்றிக் கொண்டு, மனச்சுமையோடு சலாம் சொல்லிவிட்டு மெதுவாக வெளியேறினான். வாயில்படி கடக்கவிருக்கையில், கான் பகதூர், ஒரு வேலையாளிடம் ஒரு ரூபாய் கொடுத்தனுப்பினார்.

"அதை எங்கிட்டத் தந்ததாகச் சொன்னாப் போதும். நீங்களே எடுத்துக்குங்க." என்று அந்த வேலையாளிடம் சொல்லிவிட்டு மஜீத் அகன்றான்.

**அந்த ரூபாயை மஜீத் ஏன் வாங்கிக்கொள்ள வில்லை?**

**அந்தக் கோடீஸ்வரனிடம் தினந்தோறும் அநேக ஆயிரம் சாதுக்கள் யாசகத்துக்குப் போகிறார்கள் என்பதும், அவர்களுக் கெல்லாம் அவர் தானம் கொடுக்கிறார் என்பதும் மஜீதுக்குத் தெரியாதா என்ன? அவன் ஒரு கோடீஸ்வரனாக இருக்கும் பட்சத்தில், என்ன செய்திருப்பான்?**

முதலில் வந்து யாசிப்போனுக்குத் தனது சொத்தின் ஒரு பகுதியைக் கொடுத்திருப்பாஞே? ஒரு செப்புக் காசுக்கும் கூடுத லாகக் கொடுத்திருப்பாஞே?

கான் பகதூர் ஒரு ரூபாய் கொடுத்தார். அதை வாங்கிக் கொள்ள வேண்டியது அவனுடைய கடமையல்லவா?

மஜீத் யோசித்தான். ஆஞல் அங்கு ஐந்து கோடீஸ்வரர்களே யிருந்தனர். அவர்களைக் கழித்தால் மீதியிருப்பவர் ஆறு லட்சம் பொதுமக்களாவர்.

சிறகொடிந்த பறவைபோல மஜீத் அங்கிருந்து போஞன்.

மஜீதின் தடிக்கம்பு நான்கு 'இஞ்ச்' தேய்ந்தது. உள்ளங்கை $\frac{1}{4}$ 'இஞ்ச்' கனத்தில் வீங்கிக் கன்றிப் போயிருந்தது. பட்டினி கிடந்து, பட்டினி கிடந்து சரீரம் ஒட்டி உலர்ந்து போயிற்று.

மஜீதுக்கு ஒரு வேலை கிடைத்தது. ஒரு ஹோட்டலில். எச்சில் பாத்திரங்களைக் கழுவி வைக்கும் வேலை. காலை 4 மணிக்கு எழுந்து கொண்டால் இரவு பதிஞேரு மணிவரை குழாயடியிலேயே இருக்க வேண்டும்.

பெரிய கூடையில் கொண்டுவந்து வைக்கப்படும் எச்சில் பாத்தி ரங்களை ஒவ்வொன்ருகக் கழுவி, வேருெரு கூடையில் அடுக்கி வைப்பான். அதை வேருெருவன் வந்து எடுத்துப் போவான். அதற்குள்ளாக மற்ருெருவன் எச்சில் பாத்திரங்களைக் கூடையில் கொண்டு வைப்பான். இதுதான் வேலை. ஆயினும் வயிறு நிறைய உண்பதற்கு ஏதேனும் கிடைக்கும். மாதந்தோறும் 5 ரூபாய் வீட்டுக்கும் அனுப்புவான்.

வீட்டிலிருந்து முதலில் வந்த கடிதம் சுஹ்ராவுக்கு உடல் நல மில்லாமல் இருப்பது பற்றித் தெரிவித்தது. அவள் மிகமிக பலஹீன மடைந்திருக்கிருள். கொஞ்சம் இருமலும் இருக்கிறது.

"இங்கே எல்லாரும் சுகம். உங்களை ஒரு முறை பார்க்க ஆசையாக இருக்குது"—இப்படிக்குச் 'சுஹ்ரா.'

## 12

சுஹ்ராவைக் காண மஜீதுக்கும் ஆவல் பொங்கியது. 1,500 மைல் தொலைவில் இருந்த மஜீத் சுஹ்ராவைப் பார்ப்பான்; அவள் இருமலைக் கேட்பான்; அவளுக்கு ஆறுதல் மொழிகள் கூறித் தேற்றுவான்!

"சுஹ்ரா, இப்ப எப்படியம்மா இருக்குது? நெஞ்சுவலி இருக்குதா?"—இப்படிக் கூறிவிட்டுக் கழுவி வைத்த கிண்ணியைப் பார்த்துக்கொண்டிருப்பான்.

இரவு உறங்கப் போகையில் சுஹ்ராவிடம் சொல்லுவான்: "தூங்கு, தூங்கென் சுஹ்றுதே தூங்கம்மா!"

ஆனால்...மஜீத் பார்ப்பது, நட்சத்திரங்கள் கண்சிமிட்டும் நீல வானம்தான்.

இப்படியிருக்கையில் மற்றொரு கடிதமும் வந்து சேர்ந்தது.

கையெழுத்து சுஹ்ராவுடையது அல்ல. வேறு யாரையோ விட்டு, உம்மா எழுதச் சொல்லியிருக்கிறாள். அதைப் படித்தபோது நகரத்தின் பேரிரைச்சல் அப்படியே 'பட்டென' நின்றுவிட்டது போல மஜீதுக்குத் தோன்றியது.

"பிரியமான என் மவன் மஜீத் படித்தறிய வேண்டி, சொந்த உம்மா எழுதிக் கொண்டது. முந்தா நாள் அதிகாலை நம்முடைய சுஹ்ரா நம்மைவிட்டுப் போய்விட்டாள்! அவளுடைய வீட்டில், என் மடிமீது தலை வைத்தவாறே அவளது உயிர் பிரிந்தது. எங்களுக்கெல்லாம் இருந்து வந்த துணையும் உதவியும் அவளோடு போய் விட்டன. இனி, ஆண்டவனுக்கு அடுத்தபடியாக நீதான் இருக்கிறாய்.

மகனே! போன மாதம் 30ஆம் தேதி, நம்முடைய வீட்டையும் தோப்பையும் கடன்காரர்கள் ஜப்தி செய்து, எடுத்துக் கொண்டு விட்டார்கள். வீட்டை உடனே காலி செய்யும்படி, அவர்கள் வற்புறுத்துகிறார்கள். இந்த இரண்டு வளர்ந்த பெண்களையும், உடல் நலமில்லாத வாப்பாவையும் அழைத்துக் கொண்டு நான் எங்கே போவேன்?

மகனே! நான் தூங்கிப் பல நாட்கள் ஆகின்றன. உன் சகோதரிகளை ஒத்த வயதுடையோர் எல்லோரும், மூன்று நான்கு குழந்தைகளுக்குத் தாயாகி விட்டார்கள். நடக்கக் கூடாதது ஏதும் நடந்து அவப் பெயர் ஏற்பட்டு விட்டால்...

அருமை மகனே! இங்கே இருப்பவர்கள் ஈவு இரக்கமில்லாதவர்கள். நானும் வாப்பாவும் எவ்வளவோ மன்றாடியும் உடனே வேறு இடத்துக்குப் போய்விடுமாறு ஜப்தி செய்தவர் கட்டாயப் படுத்துகிறார். நம்ம சாதியைச் சேர்ந்த பணக்காரர்கள் அங்கு இருப்பார்களே? அவர்களிடம் சொன்னால் ஏதாவது ஒரு வழி காட்டாமல் இருக்கமாட்டார்கள்.

என் மகனே! சுஹ்ரா இருந்தபோது, எனக்குச் சற்றே ஆறுதலாக இருந்தது. இரண்டு மாதமாகவே அவள் படுத்த படுக்கைதான். காசநோய். இறப்பதற்கு முன்னால் அவள் உன் பெயரைத்தான் சொன்னாள்: நீ வந்துவிட்டாயா வந்துவிட்டாயா என்று பலமுறை கேட்டாள். எல்லாம் ஆண்டவனின் செயல்!"

கடிதத்தைப் படித்து முடித்தபோது சுஹ்ராவைக் கடைசியாகப் பார்த்த காட்சி மஜீதின் நினைவினூடே ஓடியது. மக்கள் நடமாட்டம் இல்லாத நிசப்தமான தரிசு பூமியின் பரந்த மண்ணில் நிறுவப்பட்ட ஒரு சிலைபோல, மஜீத் அமர்ந்து நினைவு கூர்ந்தான்... சுஹ்ராவின் வாழ்க்கை வரலாற்றிலே ஒவ்வொரு ஏட்டையும் ஆதியோடு அந்தமாக!

எங்கே முடிவு?

அன்று அவன் வீட்டில் விடைபெற்றுக் கொண்டு வேலை தேடப் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தான். அவள் ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்; அதை முடிப்பதற்குள்ளாக மோட்டாரின் ஹார்ன் ஒலி கேட்டது... உம்மா உள்ளே வந்தாள்... அவன் முற்றத்தில் இறங்கினான்......தோட்டத்து வழியே படியிறங்கினான்......திரும்பி நோக்கினான்.

மேற்கே தொடுவானத்தில் தங்க மேகங்கள் பிரகாசித்துக் கொண்டிருந்தன. மரங்களும், வீடும், தோட்டமும் இளம் மஞ்சள் வெய்யிலில் மூழ்கிக் கொண்டிருந்தன...

சகோதரிகள் இரண்டு முகங்களை மட்டும் வெளியே நீட்டியவாறு, கதவின் மறைவிலே...வாப்பா, சுவரில் சாய்ந்தவாறு வராந்தாவில் ...உம்மா முற்றத்தில்...சுஹ்ரா நிறைந்த கண்களுடன் அந்தச் செம்பருத்தி மரத்தைப் பிடித்தவாறு தோட்டத்தில்...

அவள் சொல்ல விரும்பியது அப்போது அவளது உதடுகளில் இருந்துகொண்டிருந்திருக்கும்!

சுஹ்ரா சொல்ல விரும்பியது என்ன?

Printed at Modern Printers, K-30, Naveen Shahdara Delhi-110032